# சித்தாந்தச்
# செழும் புதையல்கள்



கல்லா நிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே

**பண்டிதமணி இலக்கிய கலாநிதி**

**மு. கந்தையா.**

**சைவசித்தாந்த மன்றம், கனடா**

உ

சிவமயம்

# சித்தாந்தச் செழும் புதையல்கள்

ஆசிரியர்
இலக்கியகலாநிதி பண்டிதமணி
மு. கந்தையா B. A.( Hons) D. Litt.




சைவ சித்தாந்த மன்றம், கனடா

| | |
|---|---|
| நூல் | சித்தாந்தச் செழும் புதையல்கள் |
| முதற் பதிப்பு | காலயுத்தி வருடம்<br>கார்த்திகை, 1978 |
| முதற் பதிப்பு வெளியீடு | ஈழத்துச் சித்தாந்த<br>சைவ வித்தியா பீடம் |
| இரண்டாம் பதிப்பு | பார்த்திப வருடம், ஆனிப்பூர்வப்<br>பிரதமை, யூலை 06, 2005 |
| இரண்டாம் பதிப்பின் பதிப்பாசிரியர்கள் | சிவநெறிச்செல்வர்<br>தி. விசுவலிங்கம், தலைவர்,<br>சைவசித்தாந்த மன்றம், கனடா.<br>நிர்வாக ஆசிரியர், "அன்புநெறி"<br>திருமதி வ. விசுவலிங்கம்<br>ஆசிரியர், "அன்புநெறி" |
| கணனி வடிவமைப்பு | பாரதி பதிப்பகம் (கனடா) |
| அச்சிட்டோர் | மாசறு<br>45, மருதி தெரு, திருவல்லிக்கேணி<br>சென்னை 600 005. |
| இரண்டாம் பதிப்பு வெளியீடு | சைவ சித்தாந்த மன்றம், கனடா<br>1008 - 50 Elm Drive East,<br>Mississauga, Ontario<br>L5A 3X2, Canada<br>905-566-4822 |
| விலை | கனடா -- $5.00<br>இலங்கை ரூ 200.00<br>இந்தியா ரூ. 80.00 |

## பொருளடக்கம்

# பதிப்புரை

சைவசித்தாந்தப் பேரறிஞர் இலக்கியகலாநிதி பண்டிதமணி ஏழாலையூர் முத்தர் கந்தையா B. A. Hons D. Litt. அவர்களை, சைவசித்தாந்த ஞானக் களஞ்சியமாகவும் சைவ உலகின் கலங்கரை விளக்காகவும் வாழ்ந்தவர், வாழ்ந்து காட்டியவர் எனச் சைவ உலகம் போற்றிப் புகழ்கின்றது.

பண்டிதர் மு. கந்தையா அவர்கள் சமயம், தத்துவம், இலக்கணம், இலக்கியம் முதலான துறைகளில் பாண்டித்தியம் மிக்கவராய் விளங்கினார். கவி இயற்றுவதில் வல்லவர். அவர் பெற்றிருந்த தமிழ், வடமொழி, ஆங்கிலம் என்னும் மும்மொழிப் புலமை சமய தத்துவ மூலாதாரங்களைக் கற்றுணரவும், ஒப்பு நோக்கவும், ஆய்வு அணுகு முறைகளை அறிந்து செயற்படவும் அவருக்குத் துணைநின்றன.

வசன நடையிலும் செய்யுள் நடையிலும் முப்பதுக்கு மேற்பட்ட நூல்களை ஆக்கியுள்ளார். பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி உள்ளார். சைவசித்தாந்தத்தை வளர்த்து வரும் தமிழ்ச் சைவ மடங்கள், ஆதீனங்கள், மன்றங்கள், சபைகள் பண்டிதர் மு. கந்தையா அவர்களின் சைவசித்தாந்த அறிவைப் போற்றி நிற்கின்றன. சைவசமய விவகாரங்களில் பல நிறுவனங்களுக்கு ஆலோசகராகப் பணிபுரிந்துள்ளார். இவரது நூல்களுக்கு இலங்கைச் சாகித்திய மண்டலப் பரிசும், இந்து சமய கலாச்சார அமைச்சின் பரிசும், வடமாகண சபையின் சாகித்திய பரிசும் கிடைத்துள்ளன. அத்தோடு மு.க. அவர்கள் சான்றோருக்கான உயர் பரிசும் பெற்றவர்.

1998ஆம் ஆண்டு நடைபெற்ற யாழ்ப்பாணம் பட்டமளிப்பு விழாவில் கௌரவ "இலக்கிய கலாநிதிப் (Doctor of Letters)" D.Litt பட்டம் வழங்கிக் கௌரவிக்கப்பட்டார். "சித்தாந்தச் செழும் புதையல்கள்" என்ற நூலிற்கு இந்து சமய கலாச்சார அமைச்சின் பரிசைப் பெற்றார்.

காரைநகர் மணிவாசகர் சபை ஸ்தாபகரும் ஈழத்துச் சிதம்பரபுராணப் பதிப்பாசிரியருமான கலாநிதி சிவத்திரு



க. வைத்தீசுவரக்குருக்கள் அவர்கள். சைவப்பெரியார் மு. க. அவர்களை 1998 இல் எமக்கு அறிமுகம் செய்து தொடர்பு ஏற்படுத்தி வைத்தார். அன்றிலிருந்து சைவப் பெரியார் மு. க. அவர்கள் சைவசித்தாந்த மன்றம் வெளியிட்டு வரும் "அன்புநெறி" திங்கள் இதழுக்கு பல அரிய கட்டுரைகள் எழுதியும், ஆலோசனைகள் வழங்கியும் ஊக்குவித்து வந்துள்ளார். தனது சித்தாந்தாந்தச் செழும்புதையல்கள் என்ற நூலை அன்புநெறியில் தொடர்ந்து வெளியிட்டு வருமாறு அனுப்பி உதவினார்.

அவர் எழுதிய கடிதம் ஒன்றில், "......... உங்கள் சிவப்பணிகள் முட்டின்றி நிறைவுற வாழ்த்துகின்றோம். புலம்பெயர் தமிழர் மத்தியில் இன்று தலையெடுத்தோங்கும் சைவப் பணிகளுக்கெல்லாம் கனடா முன்மாதிரியாயிருக்கும் சுபசோபனக் காட்சி உங்கள் அரும்பணிகளால் விகாசமுற்று வருதல் பாராட்டுக்குரியதாகும். "வேரோடி விளாத்தி முளைத்தாலும் தாய் வழி தப்பாது." ஈழத்துச் சிதம்பரம் வளர்த்த சைவக் கலாச்சார மகிமை கனடாவில் வேரோடித் தழைத்து அகில உலகையும் வாழ்விக்கும் அருமையை எண்ணி இறும்பூதடைகின்றோம்.

மேலும்,உங்கு அனுப்பிய நூல்களில் சித்தாந்தச் செழும்புதையல் பற்றி ஒரு குறிப்பு. இந்நூலில் ஆராய்ச்சிக் கருக்கள் உண்டு. இன்றைய சமூகத்துக்கு உண்மையான சைவ சித்தாந்தக் கருத்துக்கள் எவை என்பதை அறிய வைப்பது அவசியம், அத்தோடு சாஸ்திரக் கருவை அறிந்து பயன்படுத்தும் மேலை நாட்டு அறிஞர் பல உளர். இந்நூல் மறுபிரசுரமாகி, ஒரு ஆங்கில மொழி பெயர்ப்புடன் வெளி வரும் வாய்ப்பு நேர்ந்தால் அவர்களுக்கும் இது பயன்படும் என எண்ணுகிறேன். நீங்கள் உங்கள் செயற்குழுவில் இதனைத் தீர ஆராய்ந்து உங்கள் முடிவை மேற்கொள்ளுங்கள்" என எழுதிக் கேட்டிருந்தார்.

ஆங்கில மொழிபெயர்ப்பை பண்டிதமணி அவர்களையே பொருத்தமான ஒருவரைக் கொண்டு மொழிபெயர்த்து அனுப்புமாறு வேண்டிக் கொண்டேன். அதற்கிணங்க, சைவசித்தாந்தக் கலாநிதி சித்தாந்தரத்தினம் க. கணேசலிங்கம் அவர்களிடம் ஆங்கில

மொழிபெயர்ப்புப் பொறுப்பினைக் கொடுத்திருந்தார். அவரும் அதனைத் திறம்பட மொழி பெயர்த்து அனுப்பி உள்ளார்.

பண்டிதமணி மு. க. அவர்கள் வாழ்ந்த காலத்தில் அவர் எங்களிடம் வேண்டியபடி "சித்தாந்த செழும்புதையல்கள்" என்ற நூலின் மறுபதிப்பையும், ஆங்கில மொழி பெயர்ப்பையும் வெளியிட முடியவில்லையே என்னும் மன வருத்தம் இருப்பினும் அம்முயற்சி அவரது மூன்றாவது நினைவு தினத்தில் கைகூடி வருவது மனதுக்கு ஆறுதலாகவும் நிறைவாகவும் இருக்கிறது. சித்தாந்த செழும்புதையல்கள் என்பதின் ஆங்கில மொழிபெயர்ப்பு "Saiva Siddhantha The Treasure Trove" எனப் பண்டிதமணி மு. கந்தையா அவர்களே தலைப்பினை எழுதி உள்ளார்.

இந்நூலின் முகப்பு அட்டையையும், எழுத்து வடிவமைப்புகளையும், ஒப்பு நோக்கலையும் செய்து உதவிய பாரதி பதிப்பகத்தினருக்கும், நூல் உருவாவதற்கு அயராது உழைத்த எனது துணைவியார் அன்புநெறி ஆசிரியை திருமதி வடிவழகாம்பாள் விசுவலிங்கம் அவர்களுக்கும், மற்றும் ஒத்துழைப்பு நல்கிய எனது குடும்பத்தவர்களுக்கும் சைவசித்தாந்த மன்றத்தின் சார்பில் நன்றியைக் கூறுகிறேன்.

ஒரு நல்லாசிரியராகவும், கவிஞராகவும், சைவசித்தாந்த தத்துவ வித்தகராகவும் ஆய்வறிஞராகவும் திகழ்ந்து மறைந்த இலக்கிய கலாநிதி, பண்டிதமணி மு. கந்தையா அவர்களுக்கு நன்றிக் கடன் செலுத்து முகமாக சைவ அன்பர் அனைவரும் இந்நூலைப் பெற்று, பலமுறை படித்து சைவசித்தாந்த அறிவு விளக்கத்தைப் பெற்று, மேலும் ஆழ்ந்து கற்று வாழ்வில் சைவசித்தாந்த அறிவொளி பரவ திருவருள் துணைபுரிய வேண்டி வணங்குகிறேன்.

தி. விசுவலிங்கம்
06-07-2005 "அன்புநெறி" நிர்வாக ஆசிரியர்
தலைவர், சைவசித்தாந்த மன்றம், கனடா

# முகவுரை

"பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை" என்பதுபோல் அறிவினுக் கருங்கலம் சைவசித்தாந்த அறிவு எனல் பொருந்தும். அகில உலகிலும் அறிஞர் குலம் பரவலாக ஒத்துக் கொண்டிருப்பதோர் உண்மை இதுவாகும். அங்ஙனமாதலின் சைவத்தமிழ்க் குலத்துக்குச் சைவசித்தாந்த அறிவின் இன்றியமையாமை எத்தகையதென்பது யாருஞ் சொல்லி உணர்த்த வேண்டுவதன்று.

ஜி. யு. போப் ஐயர் முதலிய மேலை நாட்டு அறிஞர்கள் சைவசித்தாந்த அறிவின் மேன்மையைச் சிலாகித்துரைக்கக் கேட்கும்போது நம் செவித்துளைகள் இரண்டும் இனிக்கின்றன, நெஞ்சம் புல்லரிக்கின்றது. "தன்மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய் பெரிதுவக்கும்" என்ற திருக்குறளிற் கேட்ட தாய் என்ற தொடரில் திருவள்ளுவர் வைத்த பொருள் நயமும் இத்தொடர்பில் தெள்ளெனப் புலப்படுகின்றது. அதேசமயம் நமது இன்றைய சமுதாயம் இச்சைவசித்தாந்த அறிவின் மேன்மையை அதற்குத் தகுந்த அளவில் உணர்கிறதா? பேணுகிறதா? என்று விசாரிக்கும்போது பெரும் மனக்கிலேசம் நிகழவுஞ் செய்கின்றது.

பிறவிதோறும் நாம் பெரிதும் முயன்று பல துறையாற் பெறும் பிறதுறை அறிவுகள் எவையும் நம் பிற்கிடைக்கு எந்த வகையிலும் உதவுவனவாகா. இறுதி மூச்சுவரை உயிரின் ஈடேற்றத்திற்கு உறுதுணையாய் நின்று உதவ வல்லது இச்சைவ சித்தாந்த அறிவே என்ற விளக்கம் சைவத்தமிழ் உள்ளங்கள் தோறும் பிரகாசிக்க வேண்டியது அவசியம்.

சைவ சித்தாந்த அறிவு விளக்கத்தின் பெறுமானம் எவ்வளவென்பதைச் சிந்திக்க வேண்டிய கடப்பாடு ஒவ்வொருவருக்கும் உளதாகும். அம்மை நல்வாழ்வுக்கு மட்டுமல்ல, இம்மை நல்வாழ்வுக்கும் உறுதுணையாய் நிற்க வல்லது அவ்வறிவு விளக்கமேயாம்.

வாழ்வியல் உண்மையை உணர்ந்து தன் உண்மையுணர்வுக்கு இரண்டகம் பண்ணாமல் வாழக்கூடியவன் சைவசித்தாந்த விளக்கமுள்ள ஒருவன் மட்டுமே என்றால் மிகையாகாது. இவ்விளக்கந் தலைகொள்ளாவிடத்து, உண்மை உரைக்கும் ஒருவனைக் காண்பதே துர்லபம். சீவ இரக்கமுள்ள ஒருவனைக் காண்பதும் சிரமம் சகிப்புத் தன்மையுள்ள ஒருவனைக் காண்பதும் சாத்தியமாகாது. சமுதாய அமைதியே பிரச்சனைக்கு உள்ளாகிவிடும்.

சைவசித்தாந்த விளக்கம் குன்றுமிடத்து நம் சைவ ஆதீனங்கள், சைவ ஆலயங்கள் அனைத்தும் வெறும் சம்பிரதாயச் சடங்கு நிலையங்கள் ஆகிவிடும். உயிரில்லா உடல்களாக மட்டும் அவை காட்சி தரும்.

இவ்வுண்மையை நம் ஈழத்துத் தொல்லறிஞர் துடியாக உணர்ந்திருக்கிறார்கள். கொழும்பு விவேகானந்த சபையுஞ்சரி, யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபையுஞ்சரி, நாவலர் பெருமான் பேரால் எழுந்த சைவ ஸ்தாபனங்களுஞ்சரி. சமீப காலத்தமைந்த சிவதொண்டன் நிலையமுஞ்சரி இவ்வுணர்வின் பிரதிபலிப்பாக அமைந்தனவேயாம். இவற்றின் இன்றைய நிர்வாகங்கள் இதனைச் சம்பிரதாயபூர்வமாக ஏற்றுக் கொள்ளும் அளவிலேயே திருப்தி காண முயல்கின்றனர். இந்நிலை நீடித்தலாகாது.

நாவலர் பெருமான் சைவசித்தாந்த அறிவின் மேன்மையைச் சொல்லாலும் செயலாலும் பல தடவை வற்புறுத்தியுள்ளார். சேர் பொன். இராமநாதன் அவர்கள் தமது தர்மசாசனத்தில் சைவசித்தாந்த அறிவு விருத்திக்குக் கணிசமான பகுதி ஒதுக்கியுள்ளார். சிவஸ்ரீ யோகசுவாமிகள் "எல்லோருஞ் சைவசித்தாந்தம் படிக்கவேண்டும்" என அறிவுறுத்தி வைத்துள்ளதாகப் பிரபலமாக அறிய வருகிறது.

இத்தனைக்கும் உத்தரவாதமுள்ளதாக இன்றைய நம் சமுதாயம் இயல வேண்டுமெனில், சைவசித்தாந்த அறிவாராய்ச்சித்துறை நம்மத்தியில் விளக்கமடைய வேண்டுமென யாரும் விரும்புதலில் ஏதும் தவறில்லை.



சைவசித்தாந்தக் கருத்துக்கள் கட்டுரைகளை யதார்த்தமான முறையில் வெளியிடுவதற்கு நம் தமிழ்த் தினசரிகளில் இடமில்லை. வானொலியில் நேரமில்லை. தனிப் பிரசுரங்கள் வெளியிடப் பணமில்லை.

இந்த 'இல்லை' நிலைமைகள், சைவசித்தாந்த விஷயத்தில் நம்மவர்க்கு இருக்கற்பாலதாகிய உத்தரவாதத் தன்மைக்கு எதிராகவே பிரதி பலிக்கின்றன. இந்த நிலைமை மறாதவரை நமக்கு விமோசனமே இல்லையெனலாம்.

இந்நிலையில் திருவருட் செயலாக "ஈழத்துச் சித்தாந்த சைவ வித்தியா பீடம்" என ஒரு ஸ்தாபனம் நம்மத்தியில் உருப்பெறுதல் மிகவும் வரவேற்கத் தக்கதொன்றாகும். இவ்விஸ்தாபனம் தன் தளர்நடைப் பருவத்திலேயே ஒரு சிறு அளவிலாவது சைவசித்தாந்தப் பிரசுரம் வெளியிட வேண்டுமென்று கொண்டுள்ள ஆர்வம் மேலும் வரவேற்கத் தக்கதாம். இத்தகைய ஆர்வமிக்க இவ்விஸ்தாபனம் ஆயுட்பலமும் நிதிப்பலமும் மிக்குத் திகழ்வதாக! மேற்குறித்த 'இல்லை' நிலைமைகளை இல்லையாக்கும் அனைத்து வகை ஆற்றலும் இதற்கு மிகுவதாக!

தன்புகழேயான சைவசித்தாந்தப் புகழ் மேலோங்கத் திருவருள் முன்னிற்பதாக!

"ஞாலம் நின்புக ழேமிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையுமெம் ஆதியே"

– திருஞானசம்பந்தர்

மு. கந்தையா
ஏழாலை

# இந்நூல்

சைவச் சான்றோர்கள் தம் ஆத்மீக அநுபவக் கடலில் ஆழ்ந்து அமிழ்ந்து சென்று கண்டு கூறிவைத்த அரும்பொருட் புதிர்கள் பலவாகும். அவையெல்லாம் இம்மை வாழ்வுக்கு என் செய்ய என்ற ஒரு வகை அலுப்பு மனப்பான்மை இன்றைய சைவ சமூகத்தில் தழும்பிப் போயிருத்தல் கண்கூடு. இவ்வெண்ணத்தின் பொருந்தாமையைச் சற்றுச் சிந்தித்தல் தற்போதைய சூழ்நிலையில் இன்றியமையாததே. அதனால், சைவசித்தாந்த ஞானம் இம்மை வாழ்வுக்கு எவ்வகையில் உதவும் என ஆராயும் ஒரு கட்டுரையோடு கால் கொள்கிறது இந்நூல்.

சைவ சித்தாந்தத்தில் அதன் கேந்திர நிலையங்கள் போல் நின்று நிலவும் ஐந்து பொருட்கூறுகள் இந்நூலில் ஆராயப்படுகின்றன. முப்பொருள் நிலை ஒன்று, ஆணவம் ஒன்று, மாயை ஒன்று. திரோதானம் ஒன்று, ஊழ் ஒன்று என அவை ஐந்தும் அறியப்படும். இவை பற்றி அறியவுள்ள அரும்பொருள் விளக்கங்கள் அத்தனையும் நமக்கு ஈடிணையற்ற பெரும் புதையல்கள் ஆதல் நம் அறிவாராய்ச்சிக் கண்கொண்டு கண்டு தெளிய வேண்டும் காரியமாகும். இந்நூற் பெயரின் உட்கிடை இதுவே என்க.

இவையிற்றில் மாயை, திரோதானம், ஆணவம் என்ற மூன்றன் இயல்புகளும் பெரும் பெரும் பிரச்சனைகளுக்கு இடமானவை. உயிரின் பத்த நிலைத் தில்லு முல்லுகளுக்கு இவை மூன்றும் தனித்தனியாயுந்தான், ஒரே கூட்டமாயுந்தான், உபகரித்து வருவதாகத் தெரிகிறது. மாயை விளக்கம் செய்கிற தென்றால் அதே நேரம் மயக்கமுந்தான் செய்கிறது. ஆணவம் மறைக்கிறதென்றால் திரோதானமுந்தான் மறைக்கிறது. இவற்றின் இவ்வியல்புகள் தொழில்கள் ஒன்று இடம்பெற்று முடிந்த பின் மற்றது நடக்கும் சூழ்நிலைகள் இல்லை. எல்லாம் ஒன்றுக்குள் ஒன்றாய் இருத்தலின் மெய்ப்பொருள் ஆராய்ச்சியாளரின் இடையே இவற்றை இனங்கண்டு கூறுதல் பற்றி எழுந்த அபிப்பிராய பேதங்களும் பல, இதனால் தமிழிலுள்ள நம் சித்தாந்த சாஸ்திரங் களைக் கற்போரிடையில் நிகழும் தடுமாற்றங்களும் மிகப் பல.

நம் மெய்கண்ட சாத்திரங்கள் உபநிடதக் கருத்துக்களையும், சைவாகம ஞானபாத விரிவு விளக்கங்களையும் ஒருங்குப்படுத்திச் சிந்தித்துத் தெளிந்து தத்தம் சுவாநுபவச் சுவையோடு தெளித்து வடித்து நமக்குத் தரப்பட்ட ஆன்றோர் படைப்புக்கள். அவை கூறுங் கருத்துக்களை, சம்பந்தப்பட்ட உபநிடதக் கருத்துக்களோடும் ஆகமப் பகுதிகளோடும் பொருத்திப் பொருத்தி நோக்குதல் மூலம் அக்கருத்துக்களின் மூல உண்மைகள் புலனாகுதலும், அவை பற்றிய விரிவான விளக்கங்கள் உண்டாதலும், அறிவாராய்ச்சிச் சுவை பிறத்தலும் அநுபவ சாத்தியமான உண்மைகளாம். நமது சித்தாந்த நூல்களில் பூர்வபக்கமாக நிறுத்தப்படும் பரபக்கக் கருத்துக்ககளை இனங் கண்டு கொள்ளுதற்கும் இம்முயற்சி பெரிதும் உபகாரமாதல் தெரிகின்றது. ஆகவே, மெய்கண்ட சாஸ்திரங்களைக் கற்கும் அன்பர்கள் குறித்த உபநிடத ஆகமப் பகுதிகளையும் தொடர்புபடுத்திக் கற்றல் மூலம் ஓரளவுக்குத் தெளிவு பெறுதல் சாத்தியமேயாம். இந்நோக்கில், உபநிடத ஆகமக் கருத்துகளின் பின்னணியில், தான் எடுத்துக்கொண்ட கருத்துக்களை ஆராயும் முறையைத் தழுவுகின்றது இந்நூல்

பாஷை வேற்றுமையைப் பாராட்டாமலும், பிற மொழியொன்றைத் தெரிந்து கொள்ளுதலில் நேரும் சிரமத்தைப் பெரிது பண்ணாமலும், குறித்த உபநிடதங்களிலும், ஆகமங்களிலும் அவற்றைப் படித்துணர்தல் மூலம் நமக்கு மற்றுமோர் பெரும் பயன் விளைய இருத்தல் இந்நூல் 70ஆம் பக்கத்து இறுதிப் பந்தியில் விளக்கப்பட்டிருத்தல் காணலாம். நம் மெய்கண்ட சாத்திரநூல்களின் அருமை பெருமைகளை உணர்ந்து இன்புறுவதற்கு அம்முயற்சி பெரிதும் உதவும் என்பது அப்பந்தியின் தாற்பரியமாதல் காண்க.

கேவலாத்துவித, விசிட்டாத்துவித, சுத்தாத்துவித உண்மைகள் பற்றிய விளக்கம் அவ்வவற்றின் வரைவிலக்கணங்களை அறிந்து கொள்ளுமளவில் நமக்கு லப்பிமாதல் இல்லை. அவை பற்றிய கருத்து மூலங்களின் தோற்றத்தையும் அவை விருத்தியுற்ற வகையையும் அவை தம்முள் வேறுபட்டிருக்கும் விதத்தையும் அலசி ஆராய வேண்டுதல் மிகவும்

இன்றியமையாத ஒன்றாகும். இந்நூலின் சதசத் ஆராய்ச்சிக் கட்டுரை இதற்கு ஓரளவில் உதவும் என்றல் மிகையாகாது.

இன்னும், வேதாந்தத்தில் மாயாவாதமென ஒரு கிளை தோன்ற வந்ததற்கான கருத்துப் பிறழ்ச்சிநிலை யாது? ஆணவம் முத்திநிலையில் விலகியே போகும் என்ற கருத்து நிலையை நிச்சயிக்குமாறு யாங்ஙனம்? முயற்சியால் ஊழை வெல்லலாம் என நிலவுங் கருத்து உண்மையோடு பட்டதாகுமா? என இவை போல்வனவாகும் பிரச்சினைகளுக்குப் பொருத்தமான விளக்கங்களைத் தன்பாற் கொண்டுள்ளது இந்நூல்.

ஆணவம் ஊழ் என்ற விஷயங்கள் பற்றிச் சுருதி, யுக்தி, அநுபவ உண்மைகளுக்கு விரோதமாக இக்காலத்து நிலவும் விளக்கங்களும் பல. அவற்றின் பொருந்தாமை பற்றியும் சம்பந்தப்பட்ட கட்டுரைகளில் இந்நூல் குறிப்பிடுதல் காணலாம். அத்தகைய விளக்கங்கள் ஏற்படுங் காரணங்கள் பற்றி 93ஆம் 94ஆம் பக்க அடிக்குறிப்புகளிலும், 96ஆம் பக்க இரண்டாம் பந்தியிலும், 157ஆம் பக்க இரண்டாம் பந்தியிலும் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் சித்தாந்தக் கல்வியாளரின் சிந்தனைக்குரியனவாகும்.

'இன்மை அரிதே வெளிறு' என்ற வாசகம் அகிலப் பிரசித்தமானது. இந்நூலும் அதற்கு விலக்காகாது. இச்சிறுநூலைப் பொருள் செய்து வாசித்து, இதன் மிகை குறைகளைப் பயன்படத்தக்க முறையில் எடுத்துக்காட்டும் அறிஞர்களுக்குப் பெருநன்றியும் பெருங்கடப்பாடும் பூண்டொழுகக் கடமைப் பட்டுள்ளோம். தோன்றாத் துணையாய் நின்று அருளுந் திருவருள் அறிஞர் அறிவில் நின்று இதனை இனிது நிறைவேற்றி வைக்கும் என எண்ணி அமைகின்றோம்.

ஆசிரியர்.
மு. கந்தையா

உ
குருபாதம்

**நல்லை ஞானசம்பந்தர் ஆதீன குருமகா சந்நிதானம்,**
**ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத தேசிக ஞானசம்பந்த பரமாசார்ய சுவாமிகள்**
அருளிச் செய்த

# ஆசியுரை

உயர் ஞானம் இரண்டாம்; மன்னுபோதத் திருவருள் ஒன்று; அதனைத் தெரியவோதும் சிவாகமம் ஒன்று என உமாபதி சிவாசாரியார் தந்த விளக்கம் மலை இலக்காக உள்ளது. அதன் பிரகாரம் திருவருள் ஞானம் பெறுதற்குச் சிவாகமமாகிய கலைஞானம் இன்றியமையாததாகும்.

சைவசித்தாந்தம், முற்றுமுழுதாக ஆகம ஞானமேயாம். ஆதலின் சைவசித்தாந்தக் கல்வியில்லாமல் திருவருள் ஞானப்பேறு சித்தியாகாது என்பது உண்மை.

இவ்வுண்மை வழிநின்று எங்கள் ஆதீனத்து நிகழும் சித்தாந்த சைவ வித்தியாபீடம், சொல்வளம், அருள்வளம், பொருள்வளம் முழுதும் நிரம்பிய "**சித்தாந்தச் செழும் புதையல்கள்**" என்னும் நூலைச் சிறந்த முறையில் வெளியிட்டுள்ளது.

எமது ஆதீனத்துச் சித்தாந்த ஆசிரியர், ஏழாலை, திரு. மு. கந்தையா அவர்கள் இந்நூலைத் திறம்பட யாத்திருக்கிறார்கள். இந்நூல் சைவப் பெருமக்கள் கரந்தோறும் இலங்கி, அனைவருக்கும் கலைஞானம் வழங்க வேண்டுமென்றும், இதன் ஆசிரியர் மேன்மேலும் இத்தகைய சிவப்பணிகளில் ஈடுபட்டு உழைக்கத் திருவருள் நலம் கைகூட வேண்டுமென்றும் எம்பெருமான் ஞானசம்பந்தன் அடியிணைகளை வழுத்தி ஆசீர்வதிக்கின்றோம்.

"நாதன் நாமம் நமச்சிவாயவே"

15-11-1978

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 26 – ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

அருளிச் செய்த

# அணிந்துரை

தம்செயலற்று, தாமற்று எல்லாம் இறைவன் செயலாகவே செய்யும் அருளாளர்கள், சமயாசாரியர்கள் அவர்கள். அருளிச்செய்தன திருமுறைகளாகிய தோத்திர நூல்கள். அவைகளில் ஆங்காங்கு காணப்படும் இறையியல்புகளையும் உயிரியல்புகளையும் தளையியல்புகளையும் ஒருங்கே தெரிந்து கொள்ளத் துணை செய்வன சாத்திரநூல்கள் சாத்திரநூற் கருத்துக்கள் வேதாகமங்களில் கூறப்பட்டுள்ளன. 'பலகலை ஆகம வேதம் யாவையினும் கருத்துப் பதி பசு பாசம் தெரித்தல்' என்பது உமாபதி சிவாசரியார் அருள் வாக்கு.

சித்தாந்தச் செழும்புதையல்கள் என்ற இந்நூல் சத்து, சித்து, ஆணவம், மாயை, திரோதானம் ஆகியவைகளை ஆகம் உபநிடத வாக்கியங்களை மேற்கோள் காட்டி விளக்கிக் கூறுகிறது. சிவாகம உபநிடதப் பயிற்சி சித்தாந்த நூல்களைக் கற்பதற்கும் தெளிவு பெறுதற்கும் துணை செய்யும் என்பதை இதனைப் படிப்போர் உணர்வர்.

இத்தகைய அரிய நூலை எழுதி உலகிற்கு உபகரித்த ஏழாலை, திரு. மு. கந்தையா, நல்லை ஞானசம்பந்தர் ஆதினத்தில் பற்றுள்ளவர், சமயப்பணி செய்வதில் ஆர்வமுள்ளவர், சித்தாந்த வகுப்புக்களை நடத்தி வருபவர், சமய விரிவுரையாளர். அவரது அரும்பணியாகிய இந்நூல், சித்தாந்தத் தலைமணி நூலாகிய சிவஞான போதத்தை அருளிய ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனார் குருபூசைத் திருநாளில் வெளிவருவது சிறப்புடையது. புதையல் எடுத்த தனம்போல மக்கள் இந்நூலைப் பெற்றுக் கற்றுப் பயனுறவும். அன்பர் திரு. கந்தையா இதுபோன்ற பலநூல்களை உலகிற்குத் தந்து எல்லா நலனும் பெற்றுச் சிறக்கவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

21-10-78

உ

ஸ்ரீ நடராஜர் துணை

**வி. வி. ஸ்வர்ணவேங்கடேச தீக்ஷிதர்**

அவர்கள் அருளிச் செய்த

# ஆசியுரை

எனது அன்புள்ள ஸ்ரீமான் இ. சுப்பிரமணியம் அவர்களுக்கு அன்புடன் ஆசீர்வாதம் செய்து எழுதியது. உபயக்ஷேமம். தாங்கள் எனக்கு 18 — 9 — 1978ல் எழுதியபடி தாங்கள் அன்புடன் அனுப்பிய ஈழத்துச் சித்தாந்த சைவ வித்தியா பீடம் (யாழ்ப்பாணம்) ஆசிரியர் ஸ்ரீ மு. கந்தையா அவர்களது முகவுரையுடன் கூடிய சித்தாந்த செழும் புதையல்கள் புத்தகம் கிடைக்கப் பெற்றேன். மிக்க மகிழ்ச்சி. நான் வெளியூர்களுக்குச் சென்றிருந்து இப்போதுதான் வந்தேன். ஆகையினால்தான் உடனே தங்களுக்கு பதில் எழுத முடியவில்லை.

மேற்படி புத்தகத்தைப் பற்றி நன்கு நிதானமாகப் படித்து அறிந்து உணர்ந்து எழுத வேண்டும் என்ற எண்ணத்தினால் மேலும் காலதாமதமாயிற்று.

புத்தகம் 112 சிறு பக்கங்கள் கொண்டதாயினும் அவரவர் அறிவிற்கேற்ப படித்துப் படித்து அறிந்துணர்ந்து அனுபவித்து மகிழத்தக்க முறையில் அமைந்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

குறிப்பாக சைவசித்தாந்தம் ப்ரம்மவிசாரம் போன்று எளிதில் அறிந்து உணரக் கூடியதல்ல. மேலும் மொழி, இன, வெறி கொள்ளாதவர்க்கே சைவசித்தாந்தம் உணரக் கூடியது தெளிவாகும்.

அஸ்தி அஸ்தி என்று சொல்பவர்க்கே ஆஸ்திகர் என்றும் நாஸ்தி நாஸ்தி என்று சொல்பவர்க்கே நாஸ்திகர் என்றும் ப்ரசித்தமான

பெயர். இது பலருக்கும் தெரிந்த ஒன்று. ஆயினும் ஆஸ்திகரில் நாஸ்திக குணமும், நாஸ்திகரில் ஆஷ்திக குணமும் சொற்பொழிவுகள் மூலம் வளர்வது போல் தெரிகிறது.

நமது சைவ சமயமோ ஊக்குவார் இல்லையெனினும் துயர் போக்குவார் இல்லையெனினும் பயன் உண்டாக்குவார் இல்லையெனினும் தானாக உறுதியுடன் வளர்ந்து மெய்மையால் செம்மையாகித் திசையெங்கும் திகழும் உறுதி படைத்தது. அது எவ்விதத்தாலும் அழிக்க வொண்ணாதது. அழியாதது. என்றாலும் தூண்டா விளக்கெனினும் ஒரு தூண்டுகோல் தேவை என்பது உலகில் பலரும் அறிந்த உண்மை. ஆகையினால் நமது சைவ சமயத்திற்கு, இந்த (சைவ) சித்தாந்தச் செழும் புதையல்கள் போன்ற இன்னும் பல பிரசுரங்களும் தேவை. இப்படிப்பட்ட நற்பணிகளில் ஈடுபட்டு உணர்வித்து ஊக்குவித்து பற்பலரும் பயனடையத்தக்க வகையில் பாடுபட்டு வரும் தங்களுக்கும் தங்களைச் சார்ந்த மெய்யன்பர்களுக்கும் எம்பெருமான் தில்லையம்பலவன் இன்னருள் சுரந்து இஷ்ட சித்திகளை தந்தருளுவானாகுக. "இறைவனை உடையோர் குறைதனை யடையார்" என்பது உறுதி. மற்றவை எல்லாம் நன்மைக்கே ஏதும் கடவுள் செயல்

14-10-78

இலங்கைப் பல்கலைக்கழக இந்து நாகரீகத்துறைப் பேராசிரியர்

**கலாநிதி கா. கைலாசநாதக் குருக்கள்**

அவர்கள் வழங்கிய

# அணிந்துரை

சைவ சித்தாந்தச் செழும்புதையல்கள் என்ற இந்நூலை இது உருவாகி வெளி வர இருக்கும் நிலையில் பார்வையிடும் வாய்ப்புக் கிடைத்தது. ஏழாலை திரு. மு. கந்தையா அவர்கள் இந்நூல் ஆசிரியர். அவர் தமிழில் புலமை மிக்க பண்டிதர். சமஸ்கிருதத்தில் கலைமாமணிப் பட்டம் பெற்றவர், ஆங்கில அறிவும் கைவரப் பெற்றவர். சைவ சமயத் தத்துவ ஆராய்ச்சியிலேயே தம் வாழ்க்கையை ஈடுபடுத்தி வருபவர். வயது முதிர்ந்த காலத்திலும் ஓய்வை நாடாது இத்துறையில் அயராது உழைப்பவர். சைவசித்தாந்தத்தில் உயர் மாண்பை உலகம் நன்கு உணரல் வேண்டும் என்னும் நோக்குடையவர்; உயிரின் ஈடேற்றத்திற்கு உறுதுணையாக நின்று உதவ வல்லது சைவசித்தாந்தம் என்ற கருத்துடையவர். சைவ ஆராய்ச்சித்துறை நம்மத்தியில் சிறந்து விளங்க வேண்டும் என்பது இவ்வாசிரியரின் வேணவா. இவ் அவாவினால் பெரிதும் உந்தப்பட்ட நூலாசிரியர் தாம் மேற்கொண்ட ஆராய்ச்சியின் விளைவாலும், சித்தாந்த சாத்திரங்களைப் போதித்தும், அங்கங்கே விரித்துரைத்தும் பெற்ற அனுபவப் பெருக்கின் விசேடத்தாலும் உருவான கட்டுரைகள் ஒரு சிலவற்றின் தொகுதியாக அமைகின்றது இந்நூல்.

சித்தாந்தச் செழும்புதையல்கள் என்னும் இந்நூலில் இடம் பெறும் கட்டுரைகளில் சித்தாந்த தத்துவ விசாரணையின் போது பொதுவாகப் பேசப்படும் பொருள்கள் சிலவற்றைப் பற்றிய ஆராய்ச்சி பூர்வமான விளக்க விபரங்கள் இடம் பெறுகின்றன. இத்தொகுப்பு நூலில் அங்கங்கே சைவ சித்தாந்த தத்துவத்தின் சிறப்பு நலன்களைப் படிப்பவர்கள் நன்கு உணரக் கூடிய வகையில் ஆசிரியர் கட்டுரைகளை யாத்துள்ளார்.

உபநிடதங்களிலிருந்தும் வேதங்களின் இதர பகுதிகளிலிருந்தும் பொருத்தமான மேற்கோள்களைப் பெருமளவில்

எடுத்தாண்டிருப்பதன் மூலம் வேதாந்த தெளிவாம் சைவசித்தாந்தம் என்ற உண்மையை ஆசிரியர் நிரூபிக்கும் அழகே தனி அழகு.

ஆசிரியர் ஆகம மேற்கோள்களை அங்கங்கே எடுத்தாண்டு சித்தாந்த நுணுக்கங்களை ஆதார பூர்வமாக விளக்கும் முறை வேதம் பொதுநூல் ஆகமம் சிறப்பு நூல் என்ற சித்தாந்தக் கருத்தைத் தெள்ளிதின் உணர வைக்கின்றது.

சதசத் ஆராய்ச்சி, ஆணவ விசாரணை, மாயா விவகாரம், திரோதான மான்மியம், ஊழ்ப்பிரச்சனை என்ற தலைப்புகளைத் தாங்கி வரும் கட்டுரைகளை உள்ளீடாகக் கொண்ட இந்நூல் இப்பொருள்கள் பற்றி மறைந்து புதைந்து கிடந்த கருத்துக்களை வெளிக் கொணர்வதால் சித்தாந்தச் செழும் புதையல்கள் எனும் பெயரினைப் பொருத்தமுறப் பெற்றுள்ளது. இந்நூலில் ஆசிரியர் தமக்கே உரிய நடையில் கருத்துக்களை ஆராய்ந்து விளக்குகின்றார். வேத சிவாகமங்களிலும் திருமுறைகளிலும் சித்தாந்த சாத்திரங்களிலுமிருந்து தெரிந்து எடுத்தாளப்பட்ட மேற்கோள்கள் இவ்விளக்கங்களுக்கு வலிமையையும் தெளிவையுந் தருகின்றன.

இவ்வாறே, சைவசித்தாந்தத் தத்துவ விசாரணையில் அவ்வப்போது எழும் பிரச்சனைகளையும் விளக்கம் வேண்டப்படும் பொருள்களையும் தலைப்பாகக் கொண்டு அவற்றை ஆராய்ச்சி வழியே விளக்கவல்ல கட்டுரைத் தொகுதிகள் இவ்வரிசையில் தொடர்ச்சியாக வெளிவருவதைச் சைவ உலகம் இவ்வாசிரியரிடம் எதிர்பார்க்கிறது. இவ்வாறு வெளி வரும் நூல்கள் சைவசித்தாந்த தத்துவத்தின் நுணுக்கங்களை நன்கு விளங்க வைக்கவும் இத்தத்துவத்தின் மேம்பாட்டை உணரச் செய்வதற்கும் உதவும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலை வெளியிடும் ஈழத்துச் சித்தாந்த சைவ வித்தியா பீடம் மேற்கொண்ட இம்முயற்சி பெரும் பாராட்டுக்கு உரியது. இந்நிறுவனத்தின் தொண்டு மேன்மேலும் வளர்வதாக.

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்."

14-11-78

உ

காஞ்சி மெய்கண்டார் ஆதீன சித்தாந்தபாநு வடகோவை

## திரு. சோ. சுப்பிரமணியக் குருக்கள்

அவர்கள் வழங்கிய

# ஆய்வுரை

"சித்தாந்தச் செழும்புதையல்கள்" என்னும் இந்நூல் ஏழாலையூர்ச் சித்தாந்த ஆசிரியர் திரு. மு. கந்தையா B.A. அவர்களால் எழுதப்பட்டுள்ளது. இவ் ஆசிரியர் மும்மொழி அறிஞர். சித்தாந்த சைவ நூல் ஆராய்ச்சியிலும் தாம் கற்றவற்றைப் பிறர்க்குக் கற்பிப்பதிலும் மிகத் திறமை வாய்ந்தவர். இலங்கை வானொலியிலும் சைவ சித்தாந்தம் பற்றிய சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். இத்தகைய பேரறிஞரின் நூலுக்குச் சிறப்புரை ஒன்று எழுதும் வண்ணம் இந்நூலின் பதிப்பாசிரியர் சைவத்திரு. இ. சுப்பிரமணியம் அவர்கள் கேட்டுக் கொண்டார்கள். பேரறிஞர் ஒருவர் எழுதும் நூலை அளவிட்டு உரைக்கும் நுண்மாண் நுழைபுலம் உடைய மூதறிஞர்களே நூலுக்கு மதிப்புரை கூற அருகதை உடையார் எனினும் பதிப்பாசிரியர் வேண்டுகோட் கிணங்கிச் சில கருத்துக்கள் எழுத வேண்டுவது கடப்பாடாகி விட்டது.

"இங்கு வாழும் காலமெல்லாம் பிறருக்குப் பயன்படக்கூடிய உத்தம அறிவாற்றலோடும் செயலாற்றலோடும் வாழ வேண்டும்."

என இந்நூலின் நாற்பத்திநாலாம் பக்கத்திலே கூறும் இயல்புக்குத் தாமே இலக்கியமாக விளங்குகின்ற இப்பெரியார் இந்நூலை ஐந்து பெரும் பிரிவுகளாகத் தொகுத்து எழுதியிருக்கிறார். முதல் இரு கட்டுரைகளும் "சதசத் ஆராய்ச்சி" என்னும் பெயரில் இலங்கை வானொலியில் பேசிய இரு பேச்சுக்களும், அடுத்து "ஆணவ விசாரணை" பற்றிய தெளிவான விளக்கங்கள் அடங்கிய 37 பக்கக் கட்டுரையும் "மாயா விவகாரம்" பற்றிய மூன்று கட்டுரைகளும் திரோதான சக்தியின் பெருமையை விளக்கும் கட்டுரையும் இறுதியில் "ஊழ்ப்பிரச்சினை" பற்றிய விரிவான விளக்கம் கூறும் ஓர் கட்டுரையும் அடங்கியதாக இந்நூலைத் தொகுத்திருக்கிறார்.

முதற் கட்டுரையில்

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு"

என்னும் திருக்குறள் பாவுக்கும் பரிமேலழகர் கூறுங் கருத்தும் சதசத்துக்குச் சைவசித்தாந்தங் கூறும் கருத்தும் ஒரு தன்மையதே என ஒப்புமை காணும் நூலாசிரியரின் கருத்து ஒப்புக் கொள்ளற் பாலதேயாம். சதசத்துப் பற்றிய இரண்டாவது கட்டுரையில் சத்து, அசத்து, சதசத்து என்னும் பொருள்கள் மூன்றாகக் கூறப்படினும் உண்மையில் ஒரு பொருளாகவே விளங்குந் தன்மை விளக்கப்பட்டுள்ளது. மூன்றாவதான ஆணவ விசாரணை மிகவும் பாராட்டக் கூடிய முறையில் எழுதப்பட்டுள்ளது.

டாக்டர் தேவசேனாபதி, திரு. நல். முருகேச முதலியார், திரு. பழ. இரத்தினம் செட்டியார் என்னும் இப்பெரியார்கள் சித்தாந்தம் பத்திரிகையில் **முத்தி நிலையில் ஆணவம்** பற்றி எழுதிய விளக்கக் கருத்துக்கள் மாறுபட்டிருக்கும் தன்மையை அலசி ஆராய்ந்து அதன் உண்மைப் பொருள் விளக்கப்பட்டுள்ளது. **மாயா விவகாரம்** பற்றிய மூன்று கட்டுரைகளில் வேத சம்ஹிதை உபநிஷதம், ஆகமம், கந்தபுராணம், வேதாந்தம், பஞ்சராத்திரம் என்னும் இவைகள் கூறும் மாயா விளக்கங்களும் ஆராயப்பட்டுச் சைவசித்தாந்தங் கூறும் **சதசத்** பார்வையில், மாயைப் பொருள் விளக்கம் கூறப்பட்டுள்ளது. **திரோதான சக்தி மான்மியத்தில்** திரோதான சக்தியின் அருள் உபகாரத்தன்மையை விளக்கும் பகுதியில்

"பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை"

என்னும் திருவாசகப் பகுதிக்கு அருமையான தோர்விளக்கம் தருகின்றார் ஆசிரியர். "ஊழ்ப்பிரச்சனை" என்னும் பகுதியில் நியதி — ஊழ் விதி — தெய்வம் எப்பவோ முடிந்த காரியம் நியாமிகா — மெய்யடியார் விஷயத்தில் ஊழ் எவ்விதம் தொழிற்பாடாகிறது? என்பவற்றின் விளக்கங்கள் கூறப்படுகின்றது.



மேலும் எழுத்து வழக்கில்லாத "நெடுக" "மெத்த" "இங்கத்தைய" "சிறுக மறுக" என்னும் சொற்பிரயோகங்கள் நூலாசிரியரின் உள்ளக் கருத்தை விளக்குவதாய் அமைந்திருத்தல் புதுமைச் சிறப்பாகப் பொருந்தி உள்ளது.

இந்நூல் கற்றார்க்குப் பெரு விருந்தாயும் மாணவர்க்கு ஞானக் கருவூலமாகவும் சமய ஆராய்ச்சியாளருக்குச் சித்தாந்த சமய தீபமாகவும் நின்று நிலவுக.

இந்நூலாசிரியர் இது போன்ற நல்ல சமயத் தொண்டுகளை ஆற்றுவதற்குச் சிவபிரான் திருவருள் முன்னிற்பதாக.

---

## திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

ஆராய்ச்சியாளர்
திருக்குறள் இருக்கை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

திரு. மு. கந்தையா அவர்கள் எழுதியுள்ள "**சித்தாந்தச் செழும்புதையல்கள்**" என்னும் நூல் கிடைக்கப்பெற்றேன். அவர்கள் சீரிய தமிழறிவும் சிந்தாந்த ஞானமும் உடையவர்கள். அதனால், அவர்களது **சித்தாந்த ஆய்வுநூல்** பல அரிய கருத்துக்களை இக்காலத்திற்கு ஏற்ப உலகிற்கு வழங்குவதாய் உள்ளது.

"முத்தியில் ஆணவம்"
"ஊழ்ப்பிரச்சினை"

இவை இரண்டும் சைவ சித்தாந்தத்தில் நன்கு ஆய்ந்து தெளியத் தக்கனவே. இவற்றையும் இந்நூலின் ஆசிரியர் மற்றைப் பொருள்களோடு ஆராய்ந்து வெளியிட்டுள்ளார்.

இன்ன பலவகையில் இந்நூல் சைவசித்தாந்த ஞானவேட்கை உடையவர்கட்கு நன்கு பலன் தரத்தக்க தொன்றாகும். இது நமது ஆதீனத்தில் வெளிவருவது மிகச் சிறப்பே.

---

( நல்லை ஆதீன இளவரசு சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளால் திரு. முதலியாரவர்கள் இந்நூற்கு ஆய்வுரை வேண்டிக் கொள்ளப்பட்டிருந்தார்கள். 29 — 9 — 78 இல் அனுப்பப்பட்ட கடிதம் விலாச மாற்றத்தால் 21 — 10 — 78 இலேதான் அவர்களுக்குக் கிடைத்திருக்கிறது. 31 — 10 — 78 இல் இந்நூல் வெளியீடு என்று கடிதத்தில் குறிக்கப்பட்டிருந்தமையால் முதலியாரவர்கள் அவகாசம் போதாமை கருதி ஆய்வுரை செய்யவில்லை. அது பற்றி அவர்கள் சுவாமிகளுக்கு எழுதிய பதில் கடிதத்திலிருந்து மேற் குறித்த பகுதி எடுத்துக் கொள்ளப்பட்டதாகும்.)

ஆசிரியர்

## பதிப்புரை

**(முதற் பதிப்பு)**

உடலுயிர் வாழ்வின் உறுதிப் பயனாவது சிவஞானப்பேறு. சிவஞானப் பேற்றிற்கு உகந்த சாதனம் சைவசித்தாந்த சாஸ்திரங்கள். அவை திருவுந்தியார் முதல் சங்கற்ப நிராகரணம் இறுதியாக உள்ள பதினான்காகும். இவை தனியாகவுங் கூட்டாகவும் உயிராகிய தன்னையும் கடவுளாகிய சிவனையும் தன்னில் தானே கண்டறிதற்கு இன்றியமையாத ஆவலை ஊட்ட வல்லன. இவற்றின் பண்பும் பயனும் இதுவேயாதல் ஒருதலை. அவ்வாற்றான் நமது கலாச்சார பாரம்பரியத்தில் சைவசித்தாந்த நூலறிவுக்கு முதன்மையான ஒரு ஸ்தானம் இருந்து வருதல் இயல்பே.

நம் முன்னோர் இதற்குப் பெரு மதிப்பு வழங்கி சைவசித்தாந்த ஊற்றில் ஊறி, சைவத்தைப் பேணியும் பரப்பியும் வாழ்ந்திருக்கிறார்கள் என்பது அவர்களது வாழ்க்கை வரலாற்றிலிருந்து புலனாகின்றது. நமக்கு முன்னைய தலைமுறையில் நம் நாட்டில் அறிஞர்கள் என வாழ்ந்தோர் அனைவரும் சைவ சித்தாந்த விளக்கம் உள்ளவர்களாய் வாழ்ந்திருத்தல் குறிப்பிடத்தக்கது. அதே சமயத்தில் நமது இன்றைய தலைமுறையினரை நோக்கும்போது அப்படிச் சொல்லுமளவுக்கு இல்லையே என அங்கலாய்க்க வேண்டியும் ஆகிறது.

"யாமிரப்பவை நின்பால்
பொருளும் பொன்னும் போகமுமல்ல
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளினர்க் கடம்பின் ஒலிதாரோயே" — பரிபாடல்

"செவ் வேற் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவுநீ நயந்தனை ஆயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்நசை வாய்ப்ப
இன்னே பெறுதி நீ முன்னிய வினையே"
— திருமுருகாற்றுப்படை

என்ற பழந்தமிழ்க் குறிக்கோளெங்கே? இவை நிகழ்ந்து இரண்டாயிரம் ஆண்டு கடந்துவிட்ட இன்றைய குறிக்கோள் எங்கே?

இன்றைய நம்நாட்டுக் கல்விமுறை மாற்றத்தினாலும் மட்டுக்கு மிஞ்சி அதிகரித்து வரும் அன்றாட வாழ்க்கைத் தேவைகளின் தொல்லைகளினாலும் மேற்போந்தவாறான குறிக்கோள்களில் சராசரி மனம் லயிக்க முடியாதிருப்பதாகவும் நேரம் போதாதாகவும் ஏதோ சொல்கிறார்கள். காரணத்தின் சரி பிழை எப்படி என்பதல்ல. கல்வி முறை மாற்றம், மேல் நாட்டுக் கலாச்சார மோகம், அரசியல் அதர்மம், ஆன்மார்த்த சிந்தனை இன்மைக்கும், லயப்படாமைக்கும், அன்றாடத் தேவை அதிகரிப்புக்கும், மனவிரக்திக்கும் ஓரளவு காரணமாய் இருப்பதானாலும் நம்மவர்கள் இதைச் சொல்லிக்கொண்டு 'முயல் விட்டுக் காக்கைப் பின் போவதா' என்பதே கேள்வி.

நல்லை, திருஞானசம்பந்தர் ஆதீனத்தில் வாராவாரம் நடைபெற்று வரும் சித்தாந்த வகுப்பில் இப்படியான ஒரு விசாரம் சதா இருந்து வருகின்றது. வருடங்கள் பல கடந்தும் இவ் இலவச வகுப்பில் கூடியிருந்து சித்தாந்தங் கற்பவர்கள் குறிக்கப்பட்ட சிலர் மட்டுமேயாம்.

இக்கல்வி சிலரளவில் அல்லாது மற்றும் பலர்க்கும் பயன்பட வைக்கும் நோக்கமாக இவ்வகுப்பினர் "ஈழத்துச் சித்தாந்த சைவ வித்தியா பீடம்" என்ற பெயரில் ஒரு சபையை அமைத்துச் சித்தாந்த நூல் ஒன்று வெளியிடும் முயற்சியை மேற்கொண்டனர். இச்சபை இந்நூற்குப் பதிப்பாளராம் பணியில் என்னை நியமித்துக் கொண்டது. நூல் விஷயங்களைச் சபை ஆலோசகர் ஒழுங்கு செய்து தந்து உதவினார்கள். இந்நூல் சித்தாந்த சாஸ்திரங்களில் கூறப்படும் உண்மைகளை உணர்ந்து தெளியவும், வேதாந்த சித்தாந்தத்தின் பேதாபேதத்தை விளக்கவும், ஒன்றற்கொன்று ஆதாரமும் படியும்போல அமைந்து ஒன்றன்ஒன்று எவ்வகையில் மேம்பட்டது என்பதை உணரவும் உதவும் என்பது எமது நம்பிக்கை. குமரகுருபரரின் மேல்வரும் பாடல் இதை ஒருவாறு தெளிவாக விளக்குவதை உணரலாம்.



"நல்லருட் திறத்தால் நம்பி நீயே
பல்லுயிர்த் தொகுதியும் பயன் கொண்டு உய்கெனக்
குடிலை என்னும் தடவயல் நாப்பண்
அருள்வித்திட்டுக் கருணை நீர் பாய்ச்சி
வேதம் என்னும் பாதபம் வளர்த்தனை
பாதபம் அதனிற் படுபயன் பலவே. அவற்றுள்
இலைகொண்டு உவந்தனர் பலரே. இலைஒரீத்
தளிர்கொண்டு உவந்தனர் பலரே. தளிர் ஒரீத்
அரும்பொடு மலர் பிஞ்சு அருங்காய் என்றிவை
விரும்பினர் கொண்டு கொண்டு உவந்தனர் பலரே
அவ்வாறு உறுப்பும் இவ்வாறு பயப்ப
ஓரும் வேதாந்தம் என்று உச்சியிற் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரங்கொண்ட சைவசித்தாந்தத்
தேன் அமுது அருந்தினர் சிலரே. "

சைவசித்தாந்த அறிவின் அவசியத்தை இந்நூலாசிரியர் "இம்மைக்கும் சித்தாந்தம் அம்மைக்கும் சித்தாந்தம்" என்னும் தலைப்பில் நன்கு ஆராய்ந்து விளக்கஞ் செய்துள்ளார்கள். மற்றும், இந்நூலின் தாற்பரியம் "இந்நூல்" என்ற தலைப்பில் நூலாசிரியரால் கையாளப்பட்டுள்ளது.

சபை அங்கத்தவர்கள் தம் பொறுப்பாகவும் பிறரிடம் சேர்த்தும் இப்பதிப்புக்கு வேண்டிய பொருள் தொகையில் ஒரு பகுதிக்கு வகை செய்தார்கள். மீதிப் பொருட்கு வழிதேடிச் சமய பக்தியும் விசுவாசமும் உள்ள அன்பர்கள் சிலரை நாடவேண்டியவனாயினேன். என் சொல்லை ஏற்று மனங்கோணாது உதவி, என்னை மலர்வித்த அவ்வன்பர்களின் பெருந்தன்மை என்றென்றைக்கும் என்னாற் போற்றப்பட வேண்டியதாகும். இவ்வகையில் வாய்த்த பொருட்பலத்துடன் யாழ். ஆசீர்வாதம் அச்சகத்தாரை அணுகியபோது அவர்களும் பொருள் போதாக்குறையைப் பொருள் செய்யாது தாராள சிந்தையுடன் நூலை அச்சேற்றித் தந்திருக்கிறார்கள். அச்செலவில் மீதியாயிருக்கும்

தொகையைக் கொஞ்சஞ் செல்லவிட்டு ஏற்றுக் கொள்ளவும் ஏற்றுக் கொண்ட அவர்களின் தயவையும் நான் பாராட்டக் கடமைப் பட்டுள்ளேன். இவ்வாறு நாம் எண்ணிவாறு நூற்பதிவு நிறைவுறத் திருவருள் கைதந்திருக்கின்றது. "அளவிறந்தது அருள் சிவ! சிவ!! சிவ!!!."

இந்நூலுடன் அச்சிட்டுச் சேர்க்கப் படங்களின் பிரதி உருக்களைத் தந்துதவிய பெரியார்கட்கும், ஆசியுரைகளும் மதிப்புரைகளும் வழங்கிய அருள் விளக்கமுள்ள அறிஞர்கட்கும் பொருள் உதவிய அன்பர்கட்கும் எனது மனமுவந்த நன்றி.

எங்கள் சபையின் முதல் வெளியீடாகிய இந்நூல், உருவில் சிறியதாயிருப்பதைப் பொருள் செய்யாது இத்துறையில் எம்மை மேன்மேலும் ஊக்குங் கருணையை முற்கொண்டு, சைவ அன்பர்கள் இதனை ஆதரிக்க வேண்டுமென வேண்டிக் கொள்கின்றேன். இதன் குறை நிறைகளை உகந்த முறையில் எடுத்துக் காட்டும் அறிஞர் பெருமக்களுக்கும் எனது நன்றி கலந்த வணக்கம் உரியதாகும்.

இ. சுப்பிரமணியம்
பதிப்பாசிரியர்
ஈழத்துச் சித்தாந்த
சைவ வித்தியா பீடம்

107, கண்டி வீதி,
யாழ்ப்பாணம்

உ

## நன்றியுரை

மனித வாழ்விலட்சியத்தின் மலைமிலக்காயுள்ளது சைவ ஞானம். அதனை அறிவுறுத்தும் மெய்ப்பொருள் நூல்கள் சைவ சாஸ்திரங்கள் நம் வாழ்வியலை நெறிப்படுத்தி வாழ்விலட்சியத்தை அடைவிக்கும் காரணிகளாகிய கல்வி, அறிவு, ஒழுக்கம் என்ற மூன்றில் முதலாக வேண்டப்படுவது சைவசாஸ்திரக் கல்வி.

இக்கல்விக்குரிய ஊக்கம் இன்று நம் நாட்டில் அருகி வருதல் மிகவும் வருந்தத்தக்கதொன்றாகும். நம் நாட்டுச் சைவ ஸ்தாபனங்கள் இக்கல்விக்கான வாய்ப்புக்களை வகுக்கும் முயற்சியில் சோர்வடைந்துள்ளன. ஊக்குவோரும், ஊக்கங் கொள்வோருமின்றி நம் முதுசொத்தாகிய சைவ சாஸ்திரக்கலை மங்கிப்போகும் நிலையை இன்று காண்கின்றோம். இதன் விளைவாக இன்று நம் சமய கௌரவத்துக்கு ஏற்பட்டிருக்கும் இழப்புக்களும் பல. அவற்றைக் கண்டும் காணாத மாதிரி இருக்கும் ஒருவகை மனோ பாவமும் சமூகத்தில் நிலவுகின்றது. இந்நிலை விரும்பத்தக்கதாகாது.

இந்நிலையில், சாஸ்திரக்கல்வி அவசியந்தானா? 'ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது' அல்லவா. ஞானந்தானே வேண்டுவது. ஞானத்துக்குச் சாதனையே போதும் என்ற ஒரு விவேகப் புதிரும் இடையிடையே தலை காட்டுதலும் கண்கூடு. இவ்விவேகமுடையார் 'யுக்தி'யை மட்டும் கடைப்பிடிக்கப் பார்க்கிறார்கள். சைவ ஞானம் 'யுக்திக்கு' மட்டும் கட்டுப்படுவது அன்று. சுருதி, யுக்தி, அநுபவம் என்ற மூன்றின் கூட்டு விளைவே சைவஞானம். இம்மூன்றனையும் அடிப்படையாகக் கொண்டு எழுந்தவையே சைவ சாஸ்திரங்கள் என்ற உண்மை அவசியம் அறிதற் பாலதாகும். சமய சாஸ்திர ஞானம் சமய சாதனைக்குரிய விளக்கத்தை ஒருவருக்கு அளிப்பது. சாதனையில் தான் ஈடுபட வேண்டும் என்ற ஆவலை விளைவிப்பது; தன்னறிவுக்கு எட்டாமற் கிடக்கும் அநுபவ பாரம்பரியத்தைத் தன்னோடு தொடர்பு படுத்துவது என்ற கருத்து நிலையை அலட்சியஞ் செய்தலாகாது.

இவ்வுண்மையின் அடிப்படையில், சைவசாஸ்திரக் கல்வி விருத்தியை இலக்காகக் கொண்டு, நம்மிடையே சித்தாந்த சைவ வித்தியா பீடம் ஒன்று திருவருளால் உருப்பெற்றிருக்கின்றது. இன்றைய சூழ்நிலையில் இந்த ஸ்தாபனம், ஈழத்துச் சைவப் பெருமக்கள் அனைவரதும் ஆதரவுக்கும் அநுசரணைக்கும் உரிய தொன்றாகும் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயமாகும்.

இந்த ஸ்தாபனம் தனது ஆரம்ப முயற்சியாகச் 'சித்தாந்தச் செழும்புதையல்கள்' என்ற இந்நூலை உருவாக்கியிருக்கின்றது.

நமது வித்தியா பீடம் உருவாவதற்கும், இந்நூல் வெளியாவதற்கும் ஆதார நிலையமாக நல்லை திருஞானசம்பந்தர் ஆதீனமும், நமது முயற்சி பலன்படுதற்குத் தார்மிக உந்துதலாக நம் சுவாமிநாத தேசிக ஞானசம்பந்த பராமாசாரிய சுவாமிகளின் அன்பும் ஆசியும் உதவியுள்ளன.

நமது பீடத்து அங்கத்தவர்களும் இந்நாட்டுச் சைவ அன்பர்கள் சிலரும் இந்நூற் பதிப்புக்குப் பொருள் உதவி இருக்கிறார்கள்.

யாழ் ஆசீர்வாத அச்சகத்தார் தமக்கே இயல்பான நண்பும் பண்பும் பொலியக் குறைந்த கால அவகாசத்தில் இந்நூலை அச்சிட்டு உதவி இருக்கிறார்கள்.

நூல் அறிமுகத்துக்கும் நன்கு மதிப்புக்கும் இன்றி அமையாத ஆசியுரைகளும், மதிப்புரைகளும், மேலோர்களும் தக்கோர்களுமாகிய பெரியார்களிடமிருந்து கிடைத்து இருக்கின்றன. எங்கள் பதிப்பாளரோடு தமக்குள்ள அன்பினாலும் சிநேகபாவத் தொடர்பினாலும் சிதம்பரம் சாகித்திய கர்த்தா கலைமாமணி சுவர்ண வெங்கடேச தீக்ஷிதரும் ஆசியுரை வழங்கியுள்ளார்கள்.

எங்கள் நல்லை ஆதீன இளவரசு ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தமிழ் நாட்டு ஆதீனங்களைச் சார்ந்த மகா சந்நிதானங்களிடமிருந்து ஆசியுரைகள் கிடைக்க ஏற்பாடுகள் செய்து



வைத்திருக்கிறார்கள். தருமபுரம், ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகளின் ஆசியுரை ஏலவே நம் கைக்கு வந்துள்ளது.

வடகோவை, சோ. சுப்பிரமணியக் குருக்கள், யாழ் வளாகம் கலாநிதி கா. கைலாசநாதக் குருக்கள் என்போர் மதிப்புரை வழங்கியுள்ளார்கள். யாழ் மில்க்வைற்ஸ் தாபன அதிபர் திரு. க. கனகராசா அவர்கள் இந்நூல் முகப்பிற் பிரசுரிக்கத் தக்ஷிணாமூர்த்தி உருவ அச்சுத்தந்து உதவியுள்ளார்கள்.

சித்தாந்த கலாநிதி காஞ்சிபுரம், க. வச்சிரவேலு முதலியார் அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் க. வெள்ளை வாரணனார், தருமபுர ஆதீன வித்துவான் சி. அருணைவடிவேல் முதலியார் என்போரின் ஆய்வுரைகளும் கிடைக்க ஏற்படாகியுள்ளது.

யாமோ சிறியரிற் சிறியம். எம் முயற்சி நிறைவுறுதலிற் பங்கு கொள்ளும் மேலோர்களோ பெரியரிற் பெரியர். எவர்க்கு எவ்வனம் நன்றி உரைப்பதென அறியேன். என் அறியாமை ஒன்றையே அர்ப்பணமாக வைத்து அனைவரையும் ஒரே முகமாக வந்தித்துப் போற்றி அமைகின்றேன்.

வி. இளையதம்பி
காரியதரிசி
ஈ. சி. சைவ வித்தியாபீடம்.

# 1. அம்மைக்கும் சைவசித்தாந்தம் இம்மைக்கும் சைவசித்தாந்தம்

சிறு குழந்தை ஒன்று தனக்குப் பசிக்கிறது என்னும், தனக்குத் தாகமாயிருக்கிறது என்னும். ஏன் பசிக்கிறது? ஏன் தாகமாயிருக்கிறது? என்று கேட்டால் அது பதில் சொல்ல அறியாது.

நாம் உடம்பிலுள்ள அவயவங்களினால் ஓயாமற் தொழில் செய்து கொண்டிருக்கிறோம். கை, கால் முதலிய அவயவங்களினால் நாம் அறியக் கூடியதாகத் தொழில் நடக்கிறது. அதே போல நாம் காணாமல் நம்முள் இருக்கும் அவயவங்களும் பல. அவை ஓயாமல் தொழில் செய்கின்றன. இதனால், அவற்றின் சக்தி தேய்கிறது. அதனை ஈடு செய்தற்காக உணவுப் பொருட்கள் தேவைப்படுகின்றன. பசியெடுத்தல் மூலமாக அத்தேவை உணரப்படுகிறது. இப்படி உள்ளுறுப்புக்கள் இயங்குவதனால் உடலில் உஷ்ணம் உண்டாகிறது. அதைச் சாந்தி செய்ய நீர் தேவையாகிறது. தாகத்தின் மூலம் அத்தேவை உணரப்படுகின்றது, என்று பராயமுள்ளவர்கள் சொல்வார்கள்.

உள்ளுறுப்புக்கள் இயங்குவதை நீர் கண்டீரா? சக்தித் தேய்வை நீக்க உணவு உதவுவதைக் கண்டீரா? என்றால் சாமானியமான பராயம் உள்ளவரும் சொல்ல முடியாது. அதேபோல், நாம் உண்டதற்கும், பருகியதற்கும் என்ன நடக்கிறது என்பதும் பொதுவாக நாம் அறியோம். உண்ட உணவு சீரணிக்கும் விதமும் அதன் சத்துக்கள் திரட்டிப் பிரிக்கப்படும் விதமும் சத்தாகிய அன்னரசம் வெவ்வேறு நிலைகளில் உடலில் வெவ்வேறு உறுப்புகளுக்குச் செலுத்தப்படும் விதமும், கழிவுப் பொருள்கள்அதற்குரிய கருவிகள் மூலம் பிரிக்கப்பட்டுப் பிரத்தியேகமாகத் தங்க வைத்து வெளியேற்றப்படும் விதமும் நாமறியோம். இத்தொழில்களிற் சம்பந்தப்படும் பல்வேறு கருவிகளின் இயல்பும் நாம் அறியோம். உணவின் ஒரு பகுதி இரத்தமாக, ஒரு பகுதி எலும்புக்கு உதவ, ஒரு பகுதி சக்கையாய் இருப்பதும் நீரின் ஒரு பகுதி இரத்தத்திற்கு உதவ, ஒரு பகுதி பிராணனுக்கு உதவ, ஒரு பகுதி கழி நீராவதும் நாம் அறியோம். அசுத்த இரத்தம் நுரையீரலுக்குச் சென்று சுத்திகரிக்கப்படும் விதத்தையும், நாம் மூக்குத் தொளையால் உள் இழுக்கும் காற்று எங்கே போய்த் தங்குகிறது? என்னென்னத்துக்கு உதவுகிறது? எப்படி வெளியேறுகிறது? என்பதொன்றும் நாம் அறியோம்.

ஆனால் உடற்கூற்று விஞ்ஞானிகள் தங்கள் ஆராய்ச்சி வன்மையால் இவற்றைச் சொல்கிறார்கள். நாங்கள் அறிகின்றோம்; ஒத்துக் கொள்கின்றோம். இனி,

உடம்பில் சதா இயங்கிக் கொண்டிருக்கிறது — உயிர் என ஒன்று. அதன் சொரூபம் என்ன? அது பொருளோ பொருளல்லவோ? பொருளாயின் வடிவப் பொருளோ? வடிவமில் பொருளோ? அப்பொருள் உடலில் எப்படித் தங்குகிறது? உடலில் அது ஒரே நிலையாயத் தங்கியிருக்கிறதோ? இடத்துக்கிடம் போக்குவரவு புரிகிறதோ? எந்த நேரமும் அதன் பிரகாசம் ஒரே தன்மையாகத்தான் உள்ளதோ? சில தருணங்களில் அது உடலில் இருக்கிறதோ இல்லையோ என்ற சந்தேகமும் ஏற்படும்படி ஆகிறதே? சற்று நேரத்தில் மீளவும் எங்கிருந்தோ வந்தது போல் வந்து விடுகிறதே இந்தப் போக்குவரத்து நிலை. எப்படியெப்படி என்னென்னத்தைப் பற்றி நிகழ்கிறது?

உடலில் இயங்கும் உயிர் ஒருகால் சந்தோஷமாயிருக்கிறது. ஒரு கால் துக்கமாயிருக்கிறது. ஒருகால் கோபவசப்படுகிறது. ஒருகால் காம வசப்படுகிறது ஒரு கால் பரபரப்படைகிறது. ஒருகால் சாந்தமாயிருக்கிறது. இவையெல்லாம் நிகழ்வது எதனால்? இப்படியான விசாரணைகளுக்கு உடல்கூற்று விஞ்ஞானிகளும் பதில் கூறார். இனி,

மனம் என்றும், புத்தி என்றும், சித்தம் என்றும். உள்ள உருவமற்ற உட்கருவிகள் இருதயம் மூளை என்பவற்றைப்பற்றி இயங்குவதாக அறிகிறோம். இவை எப்படி இயங்குகின்றன. என்றாவது, இவற்றின் சொரூப நிலை யாது என்றாவது நாம் அறியோம். மனோ தத்துவ நிபுணர்கள் இவற்றின் தொழிற்பாடுகளை

ஒருவாறு சொல்கிறார்கள். ஆனால், இவற்றின் சொரூபங்களைப் பற்றியாவது இவை எப்படித் தோன்றுவன எப்படி ஒடுங்குவன என்றாவது, இவை சித்துக்களோ, சடங்களோ என்றாவது, இவற்றுக்கு மூலம் எது என்றாவது, ஆதாரம் எது என்றாவது, அவர்கள் தெளிவுபடச் சொல்லக்கூடிய நிலை இருப்பதாகத் தெரியவில்லை. இன்னும்,

பஞ்சபூதங்களையும், அவற்றின் நுண்ணியற் கூறுகளையும் விஞ்ஞானிகள் விரிவுபட ஆராய்கிறார்கள். அவற்றின் முடிவாய சித்தாந்தங்களையும் அவ்வப்போது வெளியிட்டுக் கொண்டிருக் கிறார்கள். வெளியுலகப் படைப்புகளில் அவை சம்பந்தப்பட்டிருக்கு மாற்றையும், அச்சூழ்நிலையை மனத் தேவைக்குப் பயன்படுத்து மாற்றையும் நுட்பமாக ஆராய்கிறார்கள். அத்தகைய ஆய்வின் மூலம் ஒலி, ஒளி என்பவற்றின் தோற்ற நிலைகளை அறிந்து ஒன்றை மற்றொன்றாக மாற்றி விந்தையான சாதனைகளையும் விளைக்கிறார்கள். ஆனால், இப்பஞ்சபூத நுண்கூறுகள் எங்கள் பஞ்சேந்திரியங் களாகிய மெய், வாய், கண், மூக்குச் செவி என்பவற்றிற் சம்பந்தப்படு மாற்றையும் அவைகளே அகப் பூதங்களாயும், புறப்பூதங்களாயும் நின்று நமக்கு அறிவு நிகழ உதவும் தன்மையையும், நம்மிடத்தில் எழுத்தொலி தோன்றி விருத்தியடைந்து பேச்சாய் மலரும் நுட்பத்தையும் இவை சார்ந்த மற்றும் விஷயங்களையும் அவர்கள் கூறுகிறார்கள் இல்லை.

எம் தோலில் பரிசம் என்ற ஒரு நுண்கூறு இருப்பதோ, செவியில் சப்தம் என்ற ஒரு நுண்கூறு இருப்பதோ மூக்கில் கிராணம் என்ற ஒரு நுண்கூறு இருப்பதோ, நாவில் ரசமென்ற ஒரு நுண்கூறு இருப்பதோ கண்ணில் ரூபமென்ற ஒரு நுண்கூறு இருப்பதோ விஞ்ஞான அறிவின் தர்சனத்துக்கு அப்பாலாய் இருக்கிறது.

மேலும், வெளி உலகமாகிய பிரபஞ்ச விரிவில் உள்ள அண்டங்கள் புவனங்கள் கோளங்கள் கிரகங்கள் நட்சத்திரங்கள் போன்றவை பற்றிய விஞ்ஞான ஆராய்ச்சி அறிவு விரிந்து கொண்டிருக்கின்றது. அறிவு விரிய விரிய அவற்றின் தன்மைகளும் விரிந்து விரிந்து செல்லக் காணப்படுவனவே யன்றி அறிவாராய்ச்சிக்கு அடங்கி அமைந்து வந்தபாடில்லை யென்றே சொல்கிறார்கள். "அறிதோறும் அறியாமை கண்டற்றால்" என்ற வள்ளுவர் வாக்கும் இதுவும் சமமாகத் தோன்றுகின்றன.



நாம் உன்னிப்பாகச் சிந்திக்க வேண்டியன இவை போற் பல்லாயிரம் விஷயங்கள் நம் அகத்தும் புறத்தும் உள. இவை யெல்லாம் நமக்கு ஒரே உண்மையைத்தான் எடுத்துரைக்கின்றன. அதாவது, சொல்லாமற் சொல்கின்றன.

இங்ஙனம் மனித ஆற்றலுக்கும் மனிதருக்கிருக்கும் அறி கருவிகளுக்கும் ஆராய்ச்சிச் சாதனங்களுக்கும் எட்டாத உண்மைகள் எவ்வளவு எட்டி எட்டி பார்த்தாலும் எட்டும் எல்லைக்கு அப்பால் எட்ட எட்ட நிற்கும் எத்தனையோ உண்மைகள், எவ்வளவோ கனகாத்திரமான உண்மைகளாக இருக்கின்றன என்பதையே இவை காட்டுகின்றன.

ஆனால் அவையெல்லாம் எல்லாவற்றாலும் அறியப்படாதவை அல்ல அவற்றையெல்லாம் அறியும் வகையும் ஒன்றிருக்கின்றது என்ற தென்பு எங்கள் முன்னோர் வாயிலாக எங்களுக்குண்டு. எம் முன்னோர்களாகிய மகா ஞானிகள் அவற்றை அறிந்து சொல்லி இருக்கிறார்கள். பிறர் அறியும் வகையையும் உணர்த்தி இருக்கிறார்கள். அவர்கள் கொள்கைப்படி உயிர்க்கு நிகழும் அறிவு — தூல அறிவு, சூக்கும அறிவு என இரு திறமாய் இருப்பதாக அறியப்படுகிறது.

உடலும் உடலிலுள்ள அறிதற் கருவிகளுஞ் சார்பாக அறியும் அறிவு தூல அறிவு இவற்றின் தொடர்பினை நீக்கித் திருவருளால் அறியும் அறிவு சூக்கும அறிவு. மேற்குறித்தவாறான உண்மைகள் எல்லாம், சூக்கும அறிவுக்கே புலனாகும்; தூல அறிவுக்கு அவை எட்டமாட்டா என்பது அவர்கள் கொள்கை. இச்சூக்கும அறிவு திருவருட் சார்பாக நின்று அவை எல்லாவற்றையும் அறிதல் மாத்திரத்தில் அமைந்து விடாது. அவையெல்லாவற்றிற்கும் ஆதார பூதமாயிருக்கும் இறைவனையும் அறியும். அறிதல் மட்டில்லாது அவனுடன் இரண்டறக் கலந்து நிற்கும் அத்துவித அனுபவமான

சிவானந்தத்தையும் பெறும் என்கிறார்கள். அவ்வகைத் தகுதி பெற்ற மகான்கள் பலர், சரித்திரமறிய உலகில் வாழ்ந்திருக்கிறார்கள். நாமறியச் சமீப காலத்தில் நம்முன் வாழ்ந்தும் இருக்கிறார்கள்.

இத்தகைய சூக்கும அறிவு நுண்ணுணர்வு என்றும் பெயர் பெறும். இந்த நுண்ணறிவினால் பெறும் ஞானம் தத்துவ ஞானம். அந்த ஞானத்தை உணர்த்தும் நூல்கள் ஞான சாஸ்திரங்கள். அந்நூல்கள் அத்தகைய மகா ஞானிகளின் படைப்புக்கள். அவர்கள் தம் சூக்கும உணர்வினால் கண்ட கண்ட உண்மைகளே அந்நூற் பொருளாயிருக்கின்றன. அதனால் அந்நூல்கள் கற்பார்க்குச் சூக்கும உணர்வைத் தூண்டும் கருவிகளாய் இருத்தல் ஒருதலை.

உலகின் எல்லா நாடுகளிலும், எல்லாச் சமயத்தாரிடையிலும் தத்துவ நூல்கள் உள்ளன. ஒவ்வோர் வகையில் ஒவ்வோர் அளவில், சூக்கும உணர்வைத் தூண்டும் இயல்பு ஒவ்வோர் தத்துவ ஞான நூலுக்கும் ஒவ்வோர் அளவு உண்டு. ஆனால், அவற்றுட் பல, தத்துவ உண்மைகளை முற்ற முடியக் கண்டு கொள்ளாதனவாய் இருக்கின்றன. கண்ட தத்துவங்களைத் தானும் அறிவுரை அனுபவங்களுக்குப் பொருத்தமான முறையில் அமைத்து விளக்க முடியாமல் இருக்கின்றன. சமய தத்துவ ஞான நூல்களுள் இந்திய தத்துவ ஞான நூல்களுக்கு முதலிடம் உண்டு. அவற்றுள்ளும் சைவசித்தாந்தம் ஒன்று தவிர ஏனையவை, தத்துவஞான உண்மைகளைச் செம்பாகமாக எடுத்து விளக்கவில்லை. இப்படி இருக்கின்றது இன்றைய உயர் மட்ட அறிவு ஆராய்ச்சியாளர்களின் அபிப்பிராயம். அவற்றுட் சிலவற்றைக் கவனித்தல் நலமாகும்.

The unique position of Saiva Siddhanta in the history of thought is the fact that it expounds by careful reflection the systematic account of the process of cosmic evolution which attempts to comprehend the universe as a sum total of 36 categories. This exposition is no more metaphysical speculation but is a purely logical account on scientific principles

- Theos Bernad.



அறிவியல் வரலாற்றில் சைவசித்தாந்தத்துக்குத் தனியான ஒரு இடமுண்டு. பிரபஞ்சத்தின் செவ்விய அமைப்புக்கும் அதன் சீரிய இயக்கத்துக்கும் உடல்நிலை ஆதாரமாயுள்ள சகல சாதனங்களையும் அது நுண்மையாக ஆராய்ந்து அவை அனைத்தையும் 36 தத்துவங்களாக ஒழுங்கு படுத்தி விளக்கி யுள்ளமை அதன் தனித்துவப் பண்பாகும். இத்தத்துவக் கோப்பு வெறும் தத்துவ வாய்பாடு அளவில் இல்லாமல் விஞ்ஞான அறிவியல் விளக்கத்துக்கும் தர்க்க ரீதியான ஆய்வியல் விளக்கத்துக்கும் ஏற்றதாயிருத்தல் குறிபிடற்பாலதாகும் என்கிறார் தியோஸ் பெர்னாட் என்ற அறிஞர்.

The fact must be born in mind that in Tamil alone exist systematic, authoritative works on the Saiva Siddhanta where as in Sanskrit not even a single systematic work on the philosophy is to be met with, even though its principal tenets are found scattered with much that is rubbish in the Sankya, the Yoga, The Nyaya, The Vaisesika and The Vedantha works.

- Maraimalai adigal.

தமிழ் மொழியில் மட்டுமே ஒழுங்குமுறையானதும். பிரமாணிக்கமுள்ளதுமான சைவசித்தாந்த நூல்கள் உள்ளன. சமஸ்கிருதத்தில் சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம், வேதாந்தம் என்ற பல்வேறு பெயர்களில் பல்வேறு தத்துவ நூல்கள் இருந்தும் அவற்றுள் ஒன்றேனும் சைவசித்தாந்தத்தைப் போல் ஒழுங்கு முறையான தத்துவ நூலாக அமையவில்லை. அவையெல்லாம் உதவாக்கரை நூல்கள் என்கிறார் மறமலையடிகள்.

The Saiva Siddhanta phlilophy is the choicest product of the Dravidian intelect. It is the most elaborte influential and undoubtedly the most intrinsically Valuable of all the religions of India. It is peculiarly The South Indian and Tamil Religion,

- Dr. G. U. Pope.

சைவசித்தாந்தம் திராவிட அறிவியல் நுட்பத்தின். உயர்தர படைப்பாக உள்ளது. இது மிக மிக விரிவானதும் நிரம்பிய

செல்வாக்குள்ளதும், முடிநிலை உண்மையோடு மிக அந்தரங்கமாக அணுகி நிற்கும் அகமுகத் தொடர்ச்சி வாய்ந்ததுமாகும். இந்திய தத்துவ ஞானங்கள் எல்லாவற்றுள்ளும் இது ஒன்றே இத்தன்மை உள்ளதாய் இருக்கின்றது. சிறப்பாக இது தென்னிந்தியத் தமிழ்த் தத்துவ ஞான நூல் என்று போற்றத்தகும் என்கிறார் வண ஜி. யு. போப் என்னும் அறிஞர்.

இத்தகைய மெய்யறிஞர் கூறும் நல்லபிப்பிராயங்கள் சைவசித்தாந்தக் கல்விக்கும் நமக்குமுள்ள இயற்கையான தொடர்பைச் சுட்டிக் காட்டுகின்றன. இது தமிழினத்தாரின் முதுசொம் என்றதை நினைவூட்டுகின்றன. தமிழராகிய நமக்கு அதன்பேரில் இருக்கக் கூடிய உரிமையையும் கடமையையும் எடுத்துணர்த்துகின்றன.

தமிழரின் சமயதத்துவ ஞானம் மட்டுமல்ல, அவர்களின் சாமானிய ஒழுக்கலாறும், வழிபாட்டு விதி முறைகளும், ஏன்? அவர்கள் பாஷையும் சைவசித்தாந்த மயம் என்ற கருத்தும் சிறப்பாக மேல் நாட்டு அறிஞர்களால் போற்றப் பட்டிருக்கின்றது. தமிழருட் பொது மக்களின் நடைமுறையிலுள்ள சாதாரண பேச்சு வார்த்தைகளுக்குள்ளேயே சைவசித்தாந்தக் கருத்துகள் நிரம்ப இருப்பதை அறிஞர் சுளை, சுளையாக எடுத்துக் காட்டுவார்கள். அது தனி விஷயம். இங்கு விபரித்தற் கிடமில்லை.

இவ்வகையால், சைவசித்தாந்த அறிவு நம்மால் வருத்தியுந் தேடற்பாலது. கால நேரமின்மை முதலாய சம்பிரதாய பூர்வமான சாட்டுகளின் தடைகளை மீறி நின்று சம்பாதிக்கற் பாலது என்ற நிலை தெளிவாகிறது.

ஆனால், ஆத்மீக லாபத்துக்குத்தானே சைவசித்தாந்தம். அதைப் பின்பு பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்ற கருத்தும் பரவலாக நம்மத்தியில் இடம் பெற்றிருப்பதும் என்னவோ உண்மைதான். இத்தகைய கருத்துநிலை உண்மை இயல்புக்கு விரோதமானது; துர் அதிஷ்ட வசமாக நம்மத்தியில் இடம் பெற்றுள்ளது என்பதைக் கவனத்திற் கொள்ளல் நன்று.



அதைக் கவனித்தற்கு முன்னோடியாகச் சைவ சித்தாந்தம் நமகென்ன சொல்கிறது என்ற சுருக்கமான விளக்கமொன்று அவசியமாகிறது. அது கூறுவனஹ —

1. உடலுக்கு வேறாக உயிர் என ஒரு பொருள் உண்டு.
2. அந்த உயிருக்கு உள்ளாக இறைவன் என்னும் மற்றொரு பொருள் உண்டு.
3. உயிர்ப்பொருள், உள்ளிருக்கும் இறைவன் உணர்த்துதல் வழியாகத்தான் தனது உடற் கருவிகளை இயக்கிக் கொண்டு இவ்வுலகில் வாழ்கிறது.
4. உயிரின் உலகியல் வாழ்வுக்கு உடந்தையாக ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்கள் உள்ளன.
5. திருவருளால் இவற்றைச் சார்ந்து உயிர்வாழும் கட்டம் அவ்வளவும் பந்த நிலை அல்லது பெத்த நிலை.
6. திருவருளால் இவற்றின் தொடர்பு நீங்கிச் சூக்கும உணர்வாகிய ஞான உணர்வினால் கடவுளை அறிந்து அடைந்து அனுபவிக்கும் நிலை மோட்ச நிலை அல்லது சுத்த நிலை.
7. இச்சுத்த நிலைப்பேறு ஒவ்வோருயிர்க்கும் உரியது. ஆனால், அதனதன் பக்குவ காலத்தில் மட்டும் அதற்கதற்கு வாய்ப்பது.
8. இவ்வகையிற் சம்பந்தப்படும் பொருள்கள் மூன்று. அவை பதி, பசு, பாசம் என்பன.
9. உண்மை அறிவியற் கோட்பாடுகளுக்கு முரண்படாத வகையில் இம் முப்பொருள் இயல்புகளை உரிய முறையிற் கற்றுக் கேட்டுத் தெளிபவர்களே மெய்ஞ்ஞானம் பெறுவர். அவர்களே மேல்கதிக்கும் வீடு பேற்றிற்கும் உரியர்.
10. வீடு பேறு என்பது உயிர் தன் சீவத்தன்மை கழிந்து சிவத்தோடு ஏகரசமாய் நின்று அநுபவிக்கும் ஆராத ஒரு பேரின்ப நிலை.

இவையும் இவற்றின் உள் விரிவுகளுமே சைவசித்தாந்தம் கூறும் விஷயங்கள். இவற்றை அறிவதன் மூலம் ஒருவன் தன்னை அறிந்தவன் ஆவான். தன்னை அறியும் அறிவும் தலைவனாகிய இறைவனை அறிதலோடேயே நிகழும். இந்த அறிவு நிலையே அறிவுக்கெல்லாம் உயர்நிலை அறிவாகும். இந்த அறிவு நிலையை எட்டாவிடில் அறிவுக்குப் பயன் எதுவுமில்லை. "கற்றதனாலாய பயனென்" என்ற செய்யுளின் மூலம் இக்கருத்து திருக்குறளில் முத்திரீகரணம் (முத்திரையிடல்) செய்யப்பட்டிருக்கிறது.

இத்தகைய அறிவுநிலை அறிந்த அளவிலேயே முத்தியைத் தந்து விடுவதில்லை. யாம் முன் குறிப்பிட்டவாறு, இந்த அறிவு நிலை ஒருவனிடத்து மோ' நிலைக்கின்றியமையாத சூக்கும உணர்வை வளர்க்கும். அதன் பெறுபேறாகப் படிமுறையாக நிகழும் ஆன்ம விழிப்புப்பெற்ற உயிரை அதன் உள் கலப்பினால் ஒன்றாயிருக்கும் இறைவனே, பக்குவமறிந்து, குருவாய்த் தோன்றி ஆட்கொண்டு வீட்டின்பம் கொடுப்பன் என்பது முடிபு.

இவ்விதத்தில் ஒருவர் சைவசித்தாந்தங் கற்று உண்மையில் முத்திப்பேறு கூடுதற்கிடையில் எத்தனை எத்தனையோ பிறப்புக்கள் எடுக்க வேண்டியிருக்கும். ஆனால் அப்பிறப்புக்கள் ஒவ்வொன்றும் மேல் மேல் திருத்தமுற்ற பிறப்புக்களாகவே அமையும். ஒவ்வோர் பிறப்பிலும் குறித்த சூக்கும உணர்வின் பலாபலனை உயிர் பெற்றுக் கொண்டேயிருக்கும்.

எந்த ஒரு பொருட்கும் அது சூக்கும நிலையில் உள்ளபோது இருக்கக் கூடிய வீறும் விறலும் அதிசயிக்கத்தக்க அளவுக்கு அதிகாதிகம் என்பார்கள். ஒரு குறிக்கப்பட்ட அளவு தண்ணீர்தான் என்ன சாமர்த்தியம் பண்ணியும் அசைக்க முடியாத ஒரு இயந்திரத்தை அதே அளவு தண்ணீரின் சூக்கும நிலையாகிய நீராவி இயக்கி விடுவதைப் பார்க்கிறோம். தூல உணர்விலும் பார்க்கச் சூக்கும உணர்விற்குளதாகும் ஆற்றலின் அதிகத் தரம் இத்தகையதாயிருக்கும். ஆகவே, சைவசித்தாந்த அறிவுணர்வு பெற்ற ஒருயிரின் மேன்மேற் பிறப்புக்களில் அதன் அறிவாற்றல் செயலாற்றல்களில் விசேடம் காணப்படுதல் இயல்பே. அன்றியும்,



சைவசித்தாந்த அறிவுணர்ச்சியுள்ள ஒருவர் மட்டுமே தன் உயிரின் அந்தரங்கச் சூழ்நிலைகளை அறிதல் சாலும். முற்றாக அறியாவிட்டாலும் ஒரு அளவிலாவது சிறப்பாக அறியாவிட்டாலும் ஒரு பொது அளவிலாவது தன் சூக்கும உணர்வின் தரத்திறகேற்ப அந்த அறிவு அவர்க்கு வாய்த்தல் சாத்தியமே. பந்த நிலை வாழ்வில் அகப்பட்டிருக்கும் தான் அதற்கு உடந்தையாயுள்ள தனது ஆணவ, கன்ம, மாயா விகாரங்களினாலே மயக்கப்படுந் தன்மை அவற்குப் புலனாகமற் போகாது. அவற்றின் சார்பினால் காமம், குரோதம், லோபம், மோகம் முதலிய அந்திய இயல்புகளுக்குத் தான் அடிமையாக்குந் தன்மையும் அவர்க்குப் புலனாகாமற் போகாது. இத்தகைய தீய இயல்புகளைத் தன்னிடத்திற் காணும் வாய்ப்புள்ளவர் படிப்படியாக அவற்றை விலக்கி ஒழுகத் தலைப்படுதல் தப்பாது. இவ்வகையிலேயே ஒருவருக்கு அகச் சீர்திருத்தம் வாய்ப்பதாகும். தனிப்பட்டவரின் இத்தகைய அகச்சீர்திருத்தமே புறச்சீர் திருத்தத்துக்குங் காரணம், சமூக சீர் திருத்தத்துக்குங் காரணம் தனி வாழ்விலும் சரி சமூக வாழ்விலும் சரி அகச் சீர் திருத்தத்தின் பங்கு அசாமானியப் பொறுதி வாய்ந்தது.

மேலும், சைவசித்தாந்த அறிவுணர்ச்சியில்லாத ஒருவர் உயிராகிய தன் இயல்பையும் அதன் உள்ளுயிராகிய கடவுள் இயல்பையும் கற்பனை பண்ணக் கூட இயலாதிருக்கும். அந்நிலையில் கடவுள் வழிபாடே அவருக்கு யதார்த்தமாக வாய்த்தல் துர்லபம். வழிபாட்டு நிலையங்களாகிய ஆலயங்களில் நிகழும் கிரியாம்சங்களின் தத்துவ உண்மைகளை விளங்கிக் கொள்ளும் தத்துவம் அவர்க்கு லபித்தலில்லை. அத்தகையோர் அர்ச்சகராயிருக்கும் பட்சத்தில் அங்கு சுவாமி சாந்நித்தியமே சோபித்தல் கஷ்டமாகும்.

இன்னும், நாங்கள் கடவுள் வழிபாட்டிற் பேறடைதற்கெனவே அமைந்தவை நம் திருமுறைகள். அவை சைவசித்தாந்தக் கருவூலங்கள். சைவசித்தாந்த அறிவு விளக்கில் விளங்கும் வரைக்கும் அவற்றின் பொருள் வெளியாயிருக்காது. மறையாகவே இருக்கும். தமிழ் மறை என்றே அவை பெயர் பெற்றிருத்தல் குறிப்பிடத்தக்கது.

தன்னைப் பற்றிய பாசங்களின் தொடர்பு நீங்கிய ஆன்மா சிவரூபத்தின் தொடர்பில் தன்னை அறியும். இது ஆன்ம தரிசனநிலை. அந்தகாரமாகிய ஆணவ இருளில் ஒரு விடிவு புலப்படும் நிலை இது. இந்த நிலையின் விருத்திப் பாடாக, ஆன்மா சிவதரிசனத்தின் தொடர்பில் தன்னை நன்றாக விளங்கும். முன்னைய நிலை ஆணவ இருளில் விடிவு புலப்படும் நிலை. ஆனால், இப்பின்னைய நிலை விடிவு ஏற்பட்டே விடும் நிலையாகிறது. திருவாசகத்தில் திருப்பள்ளியெழுச்சியும் திருவெம்பாவையும் இருக்கின்றன. ஆலயங்களில் திருப்பள்ளியெழுச்சி முன்னும் திருவெம்பாவை பின்னும் படிக்கப்படுகின்றன. முன்னையது விடிவு புலப்படும் வைகறை வேளையிலும், பின்னையது பொழுது புலரும் உதய வேளையிலும் நிகழ்கின்றன. முற் காட்டிய சித்தாந்த தத்துவப் பொருள் விளக்கத்தின் விளக்கிற் பார்க்கும் போது தானே இவற்றை இந்த நேரத்திற் படிப்பதன் அர்த்தம் புலனாகின்றது. அந்நிலையில் மட்டுந்தானே புற வழிபாட்டுக் கிரியையாகிய அது நமது அகத்துக்கு எவ்வகையில் அர்ப்பிதமாகின்றது எனவும் தெரிய வருகிறது. பாட்டுக்களைக் கேட்டுக் கேட்டுக் கொண்டே அகத்தில் நாம் சிவரூபமும் சிவ தரிசனமும் பெறுவதாகப் பாவனையாவது பண்ணிக் கொள்ளாத பட்சத்தில் திருப்பள்ளியெழுச்சிப் பூசை, திருவெம்பாவைப் பூசைகளின் பலனை நாம் பெற்றுக் கொண்டதாகச் சொல்வதற்கில்லை. இன்னும் இப்படிச் சுட்டி உணரும் அளவிலும் விஷயம் முடிந்த பாடில்லை. இந் நிலைமையை உணர்வதற்குரிய முன் பின் விளக்கங்களும் இன்றியமையாதவையாம். சைவசித்தாந்தக் கல்வி சாமானியமான ஆலய வழிபாட்டுக்கு எத்துணை அவசியம் என்பதை இந்த வகைமிற் சிந்தித்தல் நலமாகும். இனி "திருவே என் செல்வமே...." என்று தொடங்கி "உருவே என் உறவே என் ஊனே ஊனின் உள்ளமே உள்ளத்தினுள்ளே நின்ற கருவே என் கற்பகமே கண்ணே கண்ணுட் கருமணியே மணியாடு பாவாய் காவாய்" என்று அப்பர் சுவாமிகள் பாடுகின்றார். இதைப் பொது நோக்கிற் பார்த்தால் ஏதோ பலவேறு சொற்களாலான நெடுந் தொடராயிருக்கிறது. சற்று உற்று நோக்கினால் புறத்திலிருந்து அகத்தை நாடி நுணுகி நுணுகிச் செல்லும் ஒரு உணர்வொழுங்கு இதிற் புலனாகின்றது. நுணுகி



நுழைந்து செல்லும் உணர்வு சூக்கும உணர்வு. நாம் ஏலவே கவனித்த சூக்கும உணர்வின் தொழிற்பாட்டை இங்கே காண்கின்றோம். ஏதாலுமொரு இலக்கைப் பற்றிக் கொண்டு அதிலிருந்து மேலும் மேலும் நுணுகி நுழைந்து நுழைந்து தெய்வ அநுபவத்தைப் பற்றும் அப்பர் சுவாமிகளது சூக்கும உணர்வின் தரம் இங்கே அறியப்படுகின்றது. இந்த அறிவே இப்பாட்டின் அநுபவப் பயன், இப் பயனைப் பற்றாதவரை இதைப் படிக்கும் நாம் அடைந்த பேறு எதுவும் இல்லையாகும். சித்தாந்த உணர்வு நோக்கு இல்லாமல் இது கைகூடாது .

சித்தாந்தக் கல்வி உணர்வினாலே சூக்கும உணர்வு பெருகுகிறது. அறிவாற்றல் செயலாற்றல்கள் அதிகரிக்கின்றன. தனி மனித சீர்திருத்தம் ஏற்படுகின்றது. சமூக சீர்திருத்தம் ஏற்படுகிறது, ஆலய வழிபாடு பலன்படுகின்றது, தேவார திருவாசகம் ஆகியவற்றின் அநுபவப்பயன் உணரப்படுகின்றது, என்ற உண்மைகளை இதுவரை கண்டோம். இன்னும் இவ்வகையில் உள்ள கருத்தம்சங்கள் பல. அவற்றில் ஒன்றைக் கவனித்து மேற் செல்வோம்.

தன்னுயிரின் பெறுமானத்தை மட்டுமல்ல, தன்னுடலின் பெறுமானத்தை மட்டிட்டு அறிவதற்கும் சித்தாந்த அறிவு இன்றியமையாதது. உடலின் சிக்கனபரமான அற்புத அமைப்பு நிலையை உணர்ந்து அதைப் படைத்த கடவுளின் அருமை பெருமையை உணர்விக்க நிற்கின்றது இவ்வுடம்பு. இதன் புறத்திலுள்ள அவயவ அமைப்பெல்லாம் இறைபணிக்கும் வழிபாட்டுக்கும் உகந்த வகைமிற் காணப்படுகின்றன. இவற்றினும் பார்க்க உள்ளுறுப்புக்களின் அமைப்பு முறை அதிசயகரமானது. இவ்வுடம்பினுள்ளே மேரு மலையுண்டு. சிதம்பரம் உண்டு, காசி உண்டு, திரிவேணி சங்கமம் உண்டு. வெளியுலகிலுள்ள அவற்றின் பிரதியம்சமாக அவை இருக்கின்றன. முள்ளந் தண்டு மேருமலை, இருதய வெளி சிதம்பரம், புருவ நடுவிலுள்ள ஆக்ஞா சக்கரம் காசி. அதனயலே வந்து கூடி ஒன்றை ஒன்று குறுக்கிடும் இடா நாடி, கலா நாடி, பிங்கலா நாடிகளின் சங்கமம் திருவேணி சங்கமம் இப்படிச் சொல்வதெல்லாம் மாதிரிக்காகவோ பாவனைக்காகவோ

ஆயிருக்கலாம் என எண்ணுதலிலும் அர்த்தமில்லை. மகான்கள் வரலாறுகள் இவற்றின் உண்மைத் தன்மைக்கு ஆதாரமாய் இருக்கின்றன. சிவயோக சுவாமிகள் ஒருமுறை காசிக்குப் போய் அங்கிருந்து எழுதிய கடிதமொன்றில், "நான் உங்கே கண்டதையே இங்கும் கண்டேன்" என்ற ஒரு வசனமுண்டு. தமது யோக சாதனையினாலே தமது புருவ நடுவிற் கண்ட தரிசனம் இங்கே கண்ட காட்சி, திரிவேணி சங்கமத்தோடு கூடிய காசி க்ஷேத்ர தரிசனம் அங்கே கண்ட காட்சி. இது யாரும் மறுக்கொணாதது.

குறித்த ஆக்ஞை என்றது ஆறாதாரங்களில் ஒன்று. இது போல் மற்றும் ஆதாரங்கள் ஐந்துள. நம் உடலில் "விந்து" என்ற சுத்த மாயா தத்துவத்தின் ஒரு அம்சம் மிக அந்தரங்கமாய் இருக்கிறது. அதைப் பற்றிக் கொண்டு குண்டலினி சக்தி என்ற சிவ சக்தி சொரூபித்து மேல் மேலெழும் ஒரு வாய்ப்பும் இருக்கிறது. அவ்வாய்ப்பை அறியக் குருவின் அருள் வேண்டும். குருவருள் பெறுதற்கு இருவினை யொப்பு முதலிய உயர் பண்புகள் வேண்டும். அதற்குச் சித்தாந்த ஞான உணர்வு வேண்டும். இவ்வாற்றால் அவ்வாய்ப்பை அறியும் ஒருவர் தமது பிராணயாமம் புலனடக்கம் முதலிய சாதனைகளால் குண்டலினி சக்தியை உருப்பட்டெழச் செய்யும்போது அது பாம்பு மண்டலம் இட்டெழுவது போல் எழும். "ஆடு பாம்பே ஆடு பாம்பே" என்று பாம்பாட்டிச் சித்தர் ஆட்டிய பாம்பு இந்தப் பாம்பே தான். சிவன் கோவில் மூலத்தானத்தில் சிவலிங்கத்தைச் சுற்றிப் படமெடுத்து மேற்கவித்து நிற்கக் காணும் பாம்பு இந்தப் பாம்பேதான். இந்தச் சிவலிங்க அமைப்பு தன் உடலில் மூலாதாரம் என்ற ஆதாரத்தில் சிவயோகி ஒருவர் கண்ட காட்சியின் பிரதி ரூபமே என அறிதல் தக்கது.

இத்தகைய குண்டலினி எழுந்து தொழிற்படும் போது அதன் பிரபாவத்தினாலே ஆதாரங்கள் ஒவ்வொன்றும் தொழிற்படும். மிக நுண்ணிய அற்ப நரம்பு முடிப்புக்களாயிருந்த அந்த ஆதாரங்கள் பிரமாண்டமான தாமரை வடிவங்களாய் விரியும். அவற்றில் உயிருணர்வு பொருந்திப் பொருந்தி நின்று தியானமும் பூசனையும் பண்ணப் பண்ண அங்கங்கு தெய்வ மூர்த்தங்கள் தோன்றித் தோன்றி உயிர்க்கு அருள் சொரியும். இவ்வகையில் மேல் நோக்கிய



உயிர் பிரமாந்திரமாகிய உச்சி நடுத் தொளைக்கும் அப்பால் உயிர்த்தெழும்பி அங்கு தரிசனமாகும் பரமசிவப் பொருளோடு ஒன்றுபடும். இத்தகைய ஒன்றுபடுதல் சிவயோகமாகும். சித்தாந்த அறிவுணர்ச்சியின் தொடர்பாக வருங் குருவருளால் கைகூடும். இச்சிவயோகப் பேற்றுக்கு ஆதாரம் இவ்வுடம்பே. உயிரின் ஈடேற்றப் பணியில் உடம்பின் பங்கு எவ்வளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்தது என்ற விளக்கம் ஏற்படும்போது தானே ஒருவன் தன்னுடம்பின் பெறுமானத்தைத் தானறிபவன் ஆகிறான். இப்பேறு, சைவசித்தாந்தக் கல்விப் பேறு. "உடம்மை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்ற திருமூலர் திருமந்திரத்தின் அனுபவப் பயன் இனித்தானே விளங்கும்.

சித்தாந்தங் கற்பதனால், அந்த அறிவுணர்ச்சி பெறுவதனால் அம்மைக்கு மட்டுமல்ல இம்மைக்கும் பேறுண்டு. மோக்ஷப் பேறுமட்டுமல்ல வாழ்க்கைப் பேறுகளும் பல உண்டு.

உலக இன்பங்களைத் துறக்க விரும்புபவர், அத்துறவுக்குக் காலமும் நேரமுஞ் சாட்டி அதனைப் பின்போடாமல் இயன்ற அளவுக்கு முன்னதாகவே துறக்க வேண்டும் என்கின்றார். திருவள்ளுவர். அதற்குக் காரணமும் அவரே சொல்கின்றார். "துறந்த பின் ஈண்டியற் பால பல" — உலக இன்பங்களைத் துறந்த பின்னும் இறுதிப் பலனாக மோட்சமடைவதன் முன்னுமாக உள்ள இடைப்பட்ட கால எல்லையில் இவ்வுலகிலேயே அத்துறவி அடைதற்குரிய பேறுகள் பலவாகும் என்பது அவர் கூறும் காரணம்.

"வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல." — குறள் 342

இங்கு நாம் ஆராயும் கருத்துக்கும் இதற்கும் நிரம்ப ஒற்றுமையுண்டு. துறத்தலுக்கும் மோட்சமடைதலுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஒரு துறவி பெறத்தகும் பேறுகள் பல என்கின்றார் அவர். சைவ சித்தாந்தக் கல்வியுணர்வு பெறுதலுக்கும் முத்திப் பேற்றுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஒருவர் பெறத்தகும் பேறுகள் பல என்கின்றோம் நாம். அப்பேறுகளை விரும்பினால்

ஏற்கனவே துறவை மேற்கொள்க என்கின்றார் அவர். நாமும் அப்பாணியிலேயே, ஏற்கெனவே சைவ சித்தாந்தத்தைக் கற்க என்கின்றோம்.

சைவ சித்தாந்த அறிவுணர்வு பெற்றவர் சைவ சித்தாந்தி என்ற மதிப்புக்குரியவர். சைவசித்தாந்தி மனித சாதியில் தனிச்சாதி. சைவ சித்தாந்தத் தூய்மை ஒரு தனித் தூய்மை. சைவ சித்தாந்த வாய்மை ஒரு தனி வாய்மை. சைவ சித்தாந்த ஞான வீறு ஒரு தனி வீறு.

சிவயோக சுவாமிகளிடத்தில் நாம் கண்டு மகிழ்ந்த தூய்மை சைவ சித்தாந்தத் தூய்மையின் முழு மலர்ச்சிப் பொலிவு நிலை. அவரிடம் கண்ட வாய்மை, ஞான வீறுகளும் அத்தகையனவே.

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், சேர் பொன் இராமநாதன் முதலிய மேதாவிகளிடத்தில் இருந்தனவாக நாமறியும் நேர்மை வாய்மை அறிவு வீறு எல்லாம் சைவ சித்தாந்த உணர்வின் பிரகாசமாகவே அமைந்தவை. அவர்களின் செயல்களிற் காணும் திட்ப நுட்ப இயல்புகளுக்கும் மந்திர சக்தி போன்ற ஆற்றலுக்கும் நாம் வேறு காரணம் எதுவும் காண்டலியலாது.

எவராயினும் சரி இங்கு வாழும் காலமெல்லாம் பிறருக்குப் பயன்படக் கூடிய உத்தம அறிவாற்றலோடும், செயலாற்றலோடும் வாழ வேண்டும். வாழ்க்கை ஒழிந்தால் மனிதப் பிறப்பின் ஒரே இலட்சியமாகிய முத்திப் பேற்றை அடைய வேண்டும். இதுவே, உண்மையான வாழ்விலட்சியம். வாழ்க்கை வாழ்வதற்கே என்று சொல்வார் சொல்லிக் கொள்ளட்டும். அது நமக்கல்ல.

---

# 2. சதசத் - ஆராய்ச்சி (1)

(18 — 10 — 77 இல் இலங்கை வானொலியில் ஒலிபரப்பானது)

நமது காட்சிக்கும் கருத்துக்கும் விடயமாகிக் கொண்டு இருக்கின்றது உலகம் என ஒன்று. இவ்வுலகம் ஆக்கப்படுவதும் அழிக்கப்படுவதுமாய் இருத்தலால் இதற்குக் கர்த்தா ஒருவர் உளர் என்பது பெறப்படும். **கர்த்தா என ஒருவர் இல்லாமல் காரியம் என ஒன்று இருத்தல் இயலாது** என்பது பிரசித்தமான ஒரு விதி, எனில் அக்கர்த்தா யார் பொருட்டாக இதனை ஆக்கி அழித்துக் கொண்டு இருக்கின்றார்? இதனை விசாரிக்கும்போது மற்றும் ஒரு பொருள் இருத்தல் தெரிய வரும். மாயை என்ற பாசத்தின் விளைவாயும் ஆக்கி அழிக்கப்படுவதாயும் உள்ள இவ்வுலகம் **பாசம்.** இதை ஆக்கி அழிக்கும் கர்த்தா **கடவுள்.** அங்ஙனம் ஆக்கி அழித்தலாற் பயன் பெறுவது **உயிர்** என முப்பொருள் உண்மை இதனாற் பெறுகின்றோம். இம் முப்பொருள்களின் இயல்புகள் தம்முள் வேறுபாடு உடையன.

கடவுள் என்ற பொருள் நம்முடைய காட்சிக்கும் கருத்துக்கும் அப்பாற்பட்டது. மற்றொன்றின் செயற்பாட்டுக்கும் அகப்படாமல் தானேயாய் நிலைத்திருப்பது. இத்தன்மைகளைக் கருதி அதனைத் '**தத்**' என்றும் '**சத்**' என்றும் வேதம் குறிப்பிடுகின்றது. எமது அளவைப் பிரமாணங்களுக்கு அப்பாற்பட்டதாய் இருத்தலின் அது '**தத்**'. தானேயாய் நிலைத்த பொருளாதலின் அது '**சத்**'.

பாசம் நமது காட்சிக்கும் கருத்துக்கும் ஒருவாற்றான் அறியப்படும் பொது இயல்புடையது. என்றென்றும் கடவுள் தொழிற்பாட்டுக்கு விடயமாய் உள்ளது. அது தானேயாய் நிலைக்கும் பொருளுமன்று. ஆதலின் அது கடவுள் தன்மைகள் அல்லாத தன்மைகளை உடையதாய் '**அசத்**' எனப்படுகின்றது.

உயிர் எப்படியும் பாசத்தோடு சம்பந்தப்பட்டேயாக வேண்டிய நியதி உடையது. தன் மல நீக்கங் காரணமாகக் கடவுளின் அநுக்கிரக நிக்கிரகங்களுக்கு இடனாவது. என்றும் சடமாகவே

இருக்கும் பாசத்தின் இயல்புக்கு வேறாக தான் என்றும் சித்தாகவே இருப்பது. இருந்தும் அநாதி கேவலம் என்ற தன் பூர்வ நிலையில் ஆணவத்துக்குள்ளேயே முற்றும் அழுந்தி மைக்குழம்பினுள் விழுந்த மாணிக்கம் போல கிடக்கும்போது 'அசத்' என்றே கருதி விடக்கூடிய ஒரு நிலையை எய்தியிருப்பது. பின் காலகதியில் இறைவன் அருளால் மலநீக்கம் பெற்றுச் சுத்த புடமிட்ட தங்கம்போலக் கடவுளைச் சார்ந்திருக்கும் சுத்த நிலையில் சத்தேயாய் இருப்பது. இங்ஙனம் இந்த இரு நிலைக்கும் உட்படுந் தன்மையதாய் இருத்தல் ஒன்று. இந்த இருநிலைக்கும் இடைப்பட்ட நிலையாகிய சகல நிலையில் அசத்தைச் சார்ந்து அசத்தை அறியும் வாய்ப்பும், சத்தை அறிதற்கான வகையில் முயலும் வாய்ப்பும் ஆகிய இரு தன்மையும் உடையதாய் இருத்தல் ஒன்று. இவ்விருதிறத்தாலும் 'உயிர்', 'சதசத்' எனப்படும்.

எனவே 'சதசத்' என மேற்குறித்த தொடர் ஒன்றே 'சத்', 'அசத்' என இரு மொழியாய்ப் பிரிக்கப்படும் நிலையில் முறையே கடவுள் பாசம் என்று இரண்டையும் தனித்தனி உணர்த்தியும் பிரிக்காமல் ஒரு மொழியாய்க் கொள்ளும்போது உயிரை உணர்த்தியும் நிற்கக் காண்கின்றோம்.

இத் தொடர் மெய்ப்பொருள் அறிவு ஆராய்ச்சித் துறையில் முக்கிய இடம் வகிப்பது. அதனால் இதனை மேலும் விரித்து விசாரித்தல் பயனுடைத்தாகும்.

'சத்' என்ற வடசொல்லுக்கு இருப்பது (existing) உள்ளது. (being) என்ற இரு பொருளும் உண்டு. இதே சொல் ('ந' வின் திரிபாகிய) 'அ' என்ற இடைச்சொல் சேர்ந்து வரும்போது 'அசத்' என நிற்கும். இந்த இடைச்சொல் சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு எதிர்மறைப் பொருளும் அன்மைப் பொருளும் உணர்த்தக்கூடியது. 'சத்' என்றால் 'இருப்பது' என்று பொருள் செய்து கொண்டு 'அ' வையும் எதிர்மறை உணர்த்தியது என்று கொண்டால் 'அசத்' என்ற சொல் 'இல்லாதது' என்று பொருள் தந்துவிடும்.

மெய்ப்பொருள் ஆராய்ச்சியாளர்களில் ஒரு பகுதியார் இவற்றுக்கு இப்படியே பொருள் கொண்டு விட்டார்கள். 'சத்' என்றதனாற் குறிக்கப்படும் கடவுள் ஒன்றே இருக்கும் பொருள். 'அசத்' என்றதினாற் குறிக்கப்படும் பாசம் என்பது இல்லாத பொருள் என்பது அவர்கள் கொள்கையாயிற்று. பின்னை, உயிரைப்பற்றி என்ன சொல்கிறீர்கள் என்று கேட்டால் அப்படித் தனியாக ஒரு பொருள் இல்லை என்பார்கள்.



எல்லோரும் அறிய எங்கும் காட்சிப்படும் உலகமாகிய பாசம் என்பது ஒன்று இருக்கிறதே! எல்லா உயிர்கட்கும் பலவிதமான அனுபவங்கள் அதனால் நிகழ்கின்றனவே! அதனை இல்லாத பொருள் என்றால் பொருந்தாதே என்றால், அது வெறுந் தோற்றம் மாத்திரமே, பொருளாகச் சொல்ல எதுவுமில்லை என்பார்கள். இல்லாத ஒன்றுக்குத் தோற்றமிருத்தல் எங்ஙனம்? என்று கேட்டால் ஏன்? சிலவேளை கயிற்றில் பாம்பு தோன்றுவதில்லையா கானலில் நீர் தோன்றுதில்லையா? என மறித்து வினாவுவார்கள். பாம்புத் தோற்றத்துக்கும் நீர்த் தோற்றத்துக்கும் தனித்தனி கயிறும் கானலும் ஆதாரமாய் இருந்தனவே அது போல என்றால் நீர் குறிப்பிடும் இத்தோற்றத்திற்கும் ஆதாரம் ஒன்று இருக்க வேண்டுமே என்னில் அது பிரம்மந்தான் என்பார்கள். பிரமம் அப்படித் தோன்றுமென்றால் பொருந்தாதே. பிரமம் சித்துப்பொருள் உலகம் சடப்பொருள். பிரம்மமே தோன்றுகின்றதெனில் சித்தாய் அல்லவோ தோன்ற வேண்டும். அது சடமாகத் தோன்றல் இயல்பாகாதே என்றால் பிரமம் சித்துப் பொருள்தான். ஆனால் அதன் மாயாசக்தி எங்கள் பார்வைக்கு அப்படிச் சடவடிவாகக் காட்டிக் கொண்டு இருக்கிறது என்பார்கள்.

இனி உண்மை உண்மையாக உடல்தோறும் உலாவுவதாய்க் காணப்படுகிறதே உயிர் என ஒன்று. அது நாமறிய உடம்பிலிருந்து இயங்குகிறது ஒரு காலம். உடலில் இன்புறுகிறது ஒரு காலம். துன்புறுகிறது ஒரு காலம் தினசரி விழிப்பு உறக்கம் பேருறக்கம், என்ற வெவ்வேறு அவஸ்தைகளுக்கும் உட்படுகின்றதே! அப்படியான உணர்வுப் பொருள் வெவ்வேறு உடலில் வெவ்வேறாய் இருக்கின்றதே! அப்படியிருந்தும் நீங்கள் அது ஒரு தனிப்பொருள் அல்ல என்கிறீர்களே என்று கேட்டால் பிரமந்தான் அதுவும் என்பார்கள். இன்ப துன்ப சனன மரண நிலைகளுக்கு அப்பாற்பட்டதல்லவோ பிரமம். அது அவற்றினுக்கு

உட்பட்டு அப்படி வரவேண்டுவதேன்? என்றால், பிரமம் அவிச்சையோடு கூடியதால் அப்படி ஆயிற்று என்பார்கள். தனக்கென ஒன்றும் வேண்டாதது அல்லவோ பிரம்மம். அது அவிச்சையை வேண்டி அடைந்ததேன்? என்றால் அது அதன் விருப்பம் என்றோ விளையாடல் என்றோ பதில் இறுப்பார்கள்.

இப்படியான கருத்து நிலைகளுக்கு மாறுபட்டது சைவசித்தாந்தம். உள்ளது போகாது இல்லது வாராது என்ற சத்காரிய வாதமே சைவ சித்தாந்த அறிவாராய்ச்சியின் அடிப்படை. அதன் பிரகாரம் கடவுள், பாசம், உயிர் என்ற மூன்றும் தனித்தனியான உள்பொருள்கள் என்பது சைவசித்தாந்தக் கொள்கை. அதனால், 'சத்' — இருக்கும்பொருள் 'அசத்' — இல்லாத பொருள் என்ற கருத்தை அது அங்கீகரிப்பதில்லை. அத்தகைய விளக்கம் சுருதி, யுக்தி அநுபவ நிலைகளுக்குப் பொருந்தாது என்பது அதன் துணிபு.

அதனால் 'சத்' என்பதற்கு உள்ளது என்றே சைவ சித்தாந்தம் பொருள் கொள்ளும். உள்ளது என்ற தமிழ்ச் சொல்லுக்கு இருவிதமான பொருட் சாயல் (shades of meaning) வழக்கில் உண்டு. இருப்பது என்பது ஒன்று, உண்மைத் தன்மை அதாவது உளதாந் தன்மை என்பது ஒன்று. அவற்றில் பிந்திய பொருளே சைவ சித்தாந்தத்திற்கு அங்கீகாரமானது. அத்துடன் முன் காட்டியவாறு 'அ' என்ற இடைச் சொல்லுக்குரிய இரு பொருளில் எதிர்மறைப் பொருளைவிட்டு அன்மைப் பொருளையே, அது தழுவுகின்றது. அதனால், சைவசித்தாந்த நோக்கில் 'சத்' — உளதாவது, 'அசத்' — உளதல்லாதது என்று பொருள் அமையும். சிவஞான போதம் ஆறாஞ் சூத்திரம் இரண்டாவது சூர்ணியின் கண் 'அதுவே சத்தாயுள்ள பிரமம்' என மெய்கண்டார் — குறிப்பிடுவது காணலாம். இத்தொடர்க்குப் பொருள் உரைக்கும் போது, உரைகாரராகிய சிவஞான முனிவர், சத்தாய் என்ற அளவில் விடாது உள்ள சொல்லும் சேர்த்துச் சொல்லப்பட்டதற்குக் காரணம் விளக்குகிறார். 'சத்' என்னும் வடமொழிக்குப் பொருள் இன்னதுதான் என்று காட்டுதற்காகவே மெய்கண்டார் உள்ள என்ற சொல்லையும் சேர்த்துச் சொல்லியுள்ளார் என்பது அவர் தரும் விளக்கமாகும். குறித்த இருவர் கூற்றும் குறித்த சொற்களின் (சத், அசத்)



உண்மைப்பொருள் முறையே, உளதாவது உளதல்லாதது என்றல் தான் என்பதற்குச் சிறந்த ஆதாரமாகும்.

"பொருளல்லவற்றைப் பொருளென்று உணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு" - குறள் 351

என்பது திருக்குறள் மெய்யுணர்தல் அதிகாரத்து முதற் செய்யுள். இதில் பொருள் என்பதற்கு மெய்ப்பொருள் என்றும் பொருளல்ல என்பதற்கு மெய்ப்பொருள் அல்லாதவை என்றும் உரையாசிரியராகிய பரிமேலழகர் பொருள் விரிப்பர். இச்சொற்களுக்குப் பரிமேலழகர் விரிக்கும் இப்பொருளும் 'சத்', 'அசத்' என்பவற்றுக்குச் சைவசித்தாந்தம் கொள்ளும் பொருளும் ஒரு தன்மையனவே. இக் குறளுக்குச் சைவ சித்தாந்த பரிபாஷையில் உரை கூறுவதானால்,

அசத்துப் பொருளைச் சத்துப் பொருளாகக் கொள்ளும் மயக்கத்தினால் மாட்சிமைப் படாத பிறப்பு உண்டாம். என்றே கூறி விடலாம். அதனால் குறட் பொருள் எவ்வகையானும் பாதிக்கப்பட மாட்டாது.

சைவ சித்தாந்தம் உள்ள பொருள் என்பதும் இங்கு மெய்ப்பொருள் என்பதும் ஒன்றே. உள்ள பொருள், மெய்ப்பொருள், செம்பொருள் என்ற மூன்றும் 'சத்' என்றதன் பொருள் ஆதற்கு ஒத்த உரிமை உடையவை. அவ்வாறே உள்பொருள் அல்லாதது மெய்ப்பொருள் அல்லாதது, செம்பொருள் அல்லாதது என்ற மூன்றும் அசத் என்றதன் பொருளாதல் அமையும். அது அங்ஙனமாக,

'சத் ஏவ சோம்ய இதம் அக்ர ஆசீத்'

சோம்யனே (சித்தமழகியோனே) 'சத்' என்ற இதுவே ஆதியில் இருந்தது என்பது ஓர் சாந்தோக்கிய உபநிடத வசனம். இங்கு 'சத்' என்ற சொல் இருப்பது என்ற கருத்தில் வழக்கப்பட்ட தில்லை என்பதற்கு வாக்கியத்திலேயே ஆதாரமுண்டு. இருந்தது என்னும் பொருள் தருதற்கு 'ஆசீத்' என்ற வினைமுற்றுச் சொல் இங்கிருக்கக் காண்கின்றோம். அஸ் — இரு, ஆஸீத் — இருந்தது. இவ்வினைமுற்று, வாக்கியத்தின் பயனிலை. எது இருந்தது? என்ற வினாவுக்கு விடையாக வருகிறது. 'சத்' என்ற சொல்.

அச்சொல் இவ்வாக்கியத்தின் எழுவாய். 'சத் அசித்' என எழுவாயும் பயனிலையும் சேரும்போது செம்பொருள் அல்லது மெய்ப்பொருள் இருந்தது எனப் பொருள்படுதல் தானே பொருத்தமாவது! இன்னும்,

'சக்தி சிவஹ சத் சப்த ப்ரகிருதி ப்ரத்ய யௌ'

சத்தி சிவம் என்பன 'சத்' என்ற மொழியின் பகுதியும் விகுதியுமாம் என்ற அபியுக்தர் வாக்கியமும் 'சத்' என்ற பதப் பொருள் விளக்கத்தின் பொருட்டே எழுந்திருப்பக் காண்கிறோம்.

இனி, மெய்ப்பொருள், செம்பொருள், என்ற இந்தச் 'சத்' இன் விளக்கம் இவ்வாறு பதப் பொருள் காட்டும் சொற்றன்மை யளவில் முற்றாக ஏற்பட்டு விடுதற்கில்லை. பொருள் தன்மையாலும் விளக்கம் பெற வேண்டும்.

'சத் மூலாஹ சோம்ய இமாஹ சர்வாஹ ப்ரஜாஹ'

'சத் ஆயதநாஹ சத் ப்ரதிஷ்டா'

இந்தப் படைப்புக்கள் எல்லாம் சத்தை மூலமாகக் கொண்டவை. சத்திலேயே தங்கியிருப்பவை. சத்தினாலேயே நிலைபெறுபவை என்பது சாந்தோக்கிய உபநிடத மந்திரங்களில் ஒன்று. இச்சுலோகம் 'சத்' பதப்பொருளின் தத்துவ ரீதியான உண்மையை நன்கு புலப்படுத்துகின்றது. அனைத்திற்கும் மூலமாதல் தாங்கு நிலையாதல், நிலைபெறுத்தும் சாதனமாதல் என்ற மூவகைத் தன்மைகள் 'சத்' இல் அடங்குவதை இங்கு காண்கின்றோம். இது இப்படியிருக்க, 'சத்' என்பதற்கு இருப்பது என்றுமட்டும் பொருள் கொண்டு விட்டால் போதுமா! இதற்கு மெய்ப்பொருள் செம்பொருள் எனக் கண்ட அர்த்தம் மிக விவேககரமானது, உபயோகரமானது எனலாம்.

இங்ஙனம், உளதாந்தன்மை, மெய்ப்பொருளாந் தன்மை, செம்பொருளாந் தன்மை உள்ளது 'சத்' என இத்துணையும் கண்டோம். இனித் தானல்லாத ஏனைப் பொருள்களுக்கும் இதுவே உளதாந் தன்மையைத் தருகிறது என்ற விளக்கம் வேத



மந்திரங்களிலும் புராணச் செய்திகளிலும் வெளி வந்திருப்பதை அவதானிப்போம். அதுவும் இந்த 'சத்' பொருள் தன்மையை நன்கு தெளிவிப்பதாக அமையும்.

1. "ய ஆத்மதா பலதா"

எவர் ஆத்துமத் தன்மையை அருளுகின்றாரோ எவர் பலத்தை அருளுகின்றாரோ

2. "யேன த்யௌ ருக்ரா ப்ருத்வீ சத்ரூஹ்லா"

எவரால் விசும்பு உக்கிரமாயிருக்கிறதோ எவரால் பூமி திடமாயிருக்கிறதோ

3. "கஸ்மை தேவாய ஹவிஷா விதேம"

(அந்தத் தேவனை விட்டு) வேறெந்தத் தேவனை ஹவிசு கொண்டு வழிபடுவோம் — இவை ரூக்வேதம் 121 ஆம் சூக்தத்திற் சில பகுதிகள். இவை கூறுவதென்? இந்த 'சத்' பொருள் இல்லாத பட்சத்தில் உயிர்க்கே உயிராந் தன்மை இருக்காது என்கிறது முதன் மந்திரம். விசும்புக்கு உக்கிரத் தன்மையும் பிரதிவிக்குத் திடமாந் தன்மையும் இருக்கமாட்டா என்கிறது இரண்டாம் மந்திரம்.

'சத்' என்னும் இப்பொருள் இருந்து ஏனையவற்றுக்குப் பொருளாந்தன்மை (Factuality) யை நல்காத அளவில், உயிர்களுஞ்சரி உலகப் பொருள்களுஞ்சரி இருந்தும் இல்லாதவையாகவே ஆகிவிடும் என்பது இதன் தாற்பரியம். இதைப் பார்க்கும்போது, ஆஹா! இதுவன்றோ 'சத்' என்ற எண்ணம் உதிக்கிறது. இப்பொருள் உண்மையைப் புலப்படுத்தும் கந்தபுராண வரலாற்று உண்மை ஒன்றை இங்கே கவனிப்போம். இறைவன் திருக்கைலாசத்தில் ஒரு நாள் ஒரு கணம் தாமே தம்மை இழந்திருக்கும் யோக நிலையை ஒரு திருவிளையாட்டாகக் கொண்டார். தேவர்க்கும் மனிதர்க்கும் மற்றும் பல்வேறு உயிரினங்களுக்கும் எத்தனையோ யுகங்களாகக் கூடிய அவ்வொரு

கணத்தில் உலகம் பட்ட அவலத்தைக் கந்தபுராணம் [1] மேருப் படலம் வகைவகையாகச் சித்திரிக்கின்றது. அக்காலம் எந்த உயிர்க்காயினும் பசிப்போ பொசிப்போ போகமோ நிகழவில்லையாம். உலகம் அப்படியே இருந்தது இருந்தபடி ஸ்தம்பித்து விட்டதாம்! 'சத்' இயல்பின் உண்மையைக் கந்தபுராண ஆசிரியர் காட்டிய விதம் இதுவாகும்.

இவ்வாறெல்லாம் காணப்படவுள்ள எல்லாப் பொருட் சாயல்களையும் தழுவக் கூடியனவாய் சத் என்ற சொற்குச் சிறந்த பொருளாய் அமையக் கூடியனவாய் உள்ளன மெய்ப்பொருள் செம்பொருள் உள்பொருள் என்பனவேயாதல் ஒரு தலை. அது செம்பொருள் ஆதல் பற்றி எவ்வித மாறுபாடுகளுக்கும் இடங்கொடுக்காதது. மெய்ப்பொருளாதல் பற்றி என்றும் ஒரு படித்தாயிருப்பது. உள்பொருளாதல் பற்றி என்றும் இருப்பதாகும் எனக் கொள்ளக் கிடத்தலினால், சத் என்பது விகாரமின்றி ஒரு படித்தாய் என்றும் இருப்பதாகும் எனக் கொள்ளல் அமையும்.

---

அடிக்குறிப்பு:

1. வன்முலை அணங்கினோரும் வானவர் யாருங் காமத்
தன்மையும் புணர்ப்பும் இன்றித் தளர்ந்தனர் அறிஞர் தம்பால்
இன்மை கொண்டோர்கள் செல்ல ஈவது கூடாவெல்லைப்
புன்மையொடிருவர் தாமும் புலம்புறு தன்மையே போல்.

வல் போன்ற (சூதாடு கருவி போன்ற) தனங்களோடு கூடிய தெய்வமகளிரும் தேவர்களும் காம நுகர்ச்சியும் சம்போகமும் இல்லாமல் தளர்ச்சியுற்றார்கள். தரித்திரனாகிய ஒருவனிடம் மற்றொரு தரித்திரன் யாசிக்கச் சென்றபோது ஈதலும் ஏற்றலும் நிகழாமையினாலே இருவரும் சிறுமைப்பட்டு வருந்தியவாறு போல இருந்தது இந்நிலைமை. அவனுக்குக் கொடுக்க இல்லாமை பற்றிய கவலை. இவனுக்கும் பெற முடியாத கவலை.

(சிவபெருமான் பிரபஞ்சத்தை நடத்தும் சங்கற்பமின்றி யோகத்தில் இருந்தமையால் விளைந்த விபரீதம் இது.)

— கந்தபுராணம், மேருப்படலம், செய். 20.

# 3. சதசத் - ஆராய்ச்சி (2)

(25 — 10 — 77 இல் இலங்கை வானொலியில் ஒலிபரப்பானது)

இனி சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைக்கு இணங்க பாசமும் உள் பொருளே. அங்ஙனமாக, அதற்கு 'அசத்' என்று பெயர் ஏற்றட்டதேன் என்பது கேள்வி. வாஸ்தவமாக அதுவும் உள்பொருளேதான். ஆனால் கடவுள் போல உள்பொருள் அன்று. 'சத்' என்று பெயர் பெற்ற கடவுட் பொருள் எவ்வித வேறுபாடுமின்றி ஒரு படித்தாய் என்றும் இருப்பது. இது அப்படியானதன்று. கடவுளுக்கு உளதாவது போன்ற மெய்ப்பொருள் தன்மை இதற்கில்லை. இது கடவுள் போலத் தானாகவே நிலை பெறுவதில்லை மற்றொன்றால் நிலை பெறுகின்றது. மற்றெதனையும் தான் தாங்கி நிற்பதில்லை. மற்றொன்றினால் தான் தாங்கப்பட்டு நிற்கிறது. இது என்றும் ஒரு படித்தாய் இருப்பதில்லை. வெவ்வேறு திருப்பங்களில் வெவ்வேறு நிலைகளைப் பெறுகின்றது. அதனால் இதனை மெய்ப்பொருள் அல்லாதது என்பதில் தவறில்லை. அசத் என்ற இதன் பெயர் அப் பொருளிலேயே இடம் பெறுகின்றது.

ஆணவம், கன்மம், மாயை இவை மூன்றும் பாசத்தில் அடங்கும். ஆணவம் உயிரின் கேவல நிலையில் நன்றாகப் பெருகித் திணிந்து அதனை மூடிக் கொள்கின்றது. பின் சகல நிலையில் மெல்ல மெல்லச் சுருங்கி மெலிகின்றது. இறுதியான சுத்தநிலையில் தன் வலி முற்றாகக் கெட்டு விலகியே போய் விடுகின்றது.

கன்மம் கேவல நிலையில் உயிரிடம் தன் கைவரிசையைக் காட்ட முடியாதிருக்கின்றது. பின் சகல நிலையில் வேண்டியவாறு தொழிற்பட்டுக் கிளைத்துப் பெருகி ஒன்றுக்கு ஆயிரமாய்க் குவிகின்றது. மேல் முத்தி நிலையில் அற்றுப் போய் விட்டொழிகின்றது.

மாயை கேவல நிலையில் தொழிற்படாதிருக்கின்றது. பின் சகல நிலையில் தநு, கரண, புவன போகங்களாய் உருப்பட்டு

வந்து உயிர்க்கு ஒரு வகையால் விளக்கமும் மறு வகையால் மயக்கமும் விளைக்கின்றது. அப்பால் சுத்த நிலையில் விட்டு விலகிக் கொள்கின்றது. இம் மாயையின் காரியமாகிய காட்சி உலகமும் ஒருகால் தோன்றுகின்றது. பின் சிலகாலம் நிலைபெறுகிறது. பின் ஒரு காலம் ஒடுங்கிப் போகின்றது.

ஆதலால் இவை என்றும் ஒரு படித்தாய் நிலை பெறுவன ஆகமாட்டா. இந்த மும்மலமுஞ் சம்பந்தப்பட்ட யாதானும் ஒருயிரின் முத்தி நிலையில் அந்த உயிரை விட்டு விலகிக் கொள்கின்றனவே தவிர முற்றாக கெட்டொழிந்து இல்லாத பொருளாகப் போய்விடவில்லை. முத்தி உறாத மற்றை உயிர்களை ஒட்டி அவை இருந்து கொண்டே இருக்கின்றன. இனி காட்சி உலகமும் தன் பிரளய காலத்தில் ஒடுங்கினதேயன்றி இல்லாமற் போய்விடவில்லை. அது விரிந்த நிலையில் தன் காரிய ரூபத்தில் இருந்தது. ஒடுங்கிய நிலையில் தன் காரண ரூபத்தை எய்துகிறது. மரம் அழிந்தாலும் அம்மரத்தன்மை முழுவதும் அதன் வேரிலோ வித்திலோ அடங்கியிருப்பதுபோல இது நிகழ்கின்றது. ஆதலால், பாசம் என்பது, இல்லாதபொருள் என்றதினால் அசத் எனப்பட்டதல்ல, என்றும் ஒரு படித்தாயிராதது என்பதனாலேயே அசத்தெனப்பட்டது என்கை தெளிவாகும்.

இப்பாசத்தினது அசத்துத் தன்மை மற்றொரு வகையாலும் புலனாகும். உயிரின் சகல நிலையிற் பாசப் பகுதி ஒவ்வொன்றும் திருவருள் துணைகொண்டு உயிரால் அறியப்படுகின்றது, அடையப்படுகின்றது. அநுபவிக்கவும் படுகின்றது. பிறகு முத்தி நிலையில் நிலைமை நேர்மாறாகின்றது. அந்த நிலையில் உயிர்க்கு இவற்றால் ஆகக் கிடந்தது எதுவுமேயில்லை. அப்பர் சுவாமிகள் தாம் முத்தி பெறுந் தறுவாயில் தம்மை விலகித் தம் சூழலில் நின்ற பாசங்களை முன்னிலைப்படுத்தி ஏசித் துரத்திய காட்சி அவர் தேவாரத்தில் இடம் பெற்றிருக்கின்றது.

"பொய்ம் மாயப் பெருங்கடலுள் புலம்பாநின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க்கு



இல்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலை மகனைத் தண்ணாலாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை அடங்கச் செய்யும்
எம்மான்றனடித் தொடர்பாலுழிதர் கின்றேன்
இடரிலேன் கெடுவீர் காள் இடறேன் மின்னே."

இது அப்பர் திருப்புகலூரில் அருளிய திருத்தாண்டகத்தில் ஒரு பாடல். புண்ணியங்களே! பாபங்களே! செல்வங்களே! நீங்கள் எல்லாம் மாயக் கடலாகிய இப் பிரபஞ்ச வாழ்வை அரித்து அரித்துத் தின்று சுவை கண்டவர்கள். அந்தச் சுவை உணர்ச்சியினாலே இப்பொழுது இந்நிலையிலும் என்னைச் சூழுகிறீர்கள் போலும். உங்கள் யத்தனத்துக்கு என் சார்பில் சற்றும் இடமில்லை என்பதை அறிந்து கொள்ளுங்கள். தற்பொழுது யான் முன்னைய திருநாவுக்கரசு அல்ல. இன்றைய இத் திருநாவுக்கரசு திருவாரூர்ச் சிவபெருமான் திருவடிக்கு ஆளான திருநாவுக்கரசு. இதை நீங்கள் அறிதற்கு நியாயமில்லை. ஆதலால்தான் சொல்கின்றேன். வீணில் அலையாமற் போய்விடுங்கள், என்பது இச்செய்யுளின் தாற்பரியமாகும். உமக்கு இனி என் சார்பில் 'இல்லையே கிடந்ததுதான் கெடுவீர்கள்! இடறேன்மின்' என்று சுவாமிகள் அவற்றைக் கைஉதிர்த்துக் கடத்தி விட்டிருக்கும் காட்சியை இங்கே காண்கின்றோம். இத்தேவாரப் பொருளின் தத்துவப் பின்னணி யாது?

முத்திநிலை என்றால் உயிர் தன் வாழ்வின் இலட்சியத்தை அடைந்துவிட்ட நிலை. மேல், அதற்குச் சிவப் பொருளே பொருள் மற்றெதுவானாலும் பொருளேயல்ல. முன்னொருகால் அவை அதற்குப் பொருளாயிருந்தது, என்னவோ உண்மைதான். ஆனால் இனி அஃதில்லை. இங்ஙனம் ஒருகால் பொருளாயிருந்து மற்றொருகால் பொருளல்லா நிலைக்குத் தள்ளப்படுவதற்கு விஷயமாய் இருப்பதொன்று செம்பொருள் ஆகாது. அதாவது 'சத்' ஆகமாட்டாது. அது 'அசத்தே அசத்'.

இங்ஙனமாகப் பாசம் என்ற பொருளின் தன்னியல்பை முன்னிட்டு நோக்கும் பிறர் நோக்கிலும் 'அசத்', முத்திபெறும்

உயிரின் சுயநோக்கிலும் 'அசத்' பரம்பொருளாகிய கடவுள் எதிர் தான் நில்லாது ஒதுங்கும் தன்னியல்பிலும் 'அசத்' ஒரு வகையால் அல்ல மூவகையால் இதன் அசத்தியல்பு நிரூபணமாகின்றது.

இதுவரை கடவுட் பொருள் 'சத்' ஆமாறும், பாசப் பொருள் 'அசத்' ஆமாறும் பற்றிக் கண்டோம். இனி முப்பொருளில் மூன்றாவதாகிய உயிர் 'சதசத்' ஆமாறு காண்போம்.

முப்பொருள்களில் கடவுள் பரிபூரணம். எவராலாயினும் அல்லது எதனாலாயினும் அதற்கு ஆகவேண்டியது எதுவுமேயில்லை. ஆகவே பாசப்பொருள் கடவுளின் சுயதேவை கருதி அதற்கு வேண்டியதல்ல. இனி, பாசம் அறிவுணர்வற்ற சடப்பொருள். ஆதலால் சித்துப் பொருளாகிய கடவுளை அறியும் யோக்கியதை அதற்கில்லை. கடவுளை அடைந்து அநுபவிக்க வேண்டிய அவசரமும் அதற்கில்லை. எனில், இவ்விரண்டும் இவற்றின் வேறாகிய உயிருக்காகவே உள்ளன என்பது வெளிப்படை. இவையிரண்டும் உயிருக்கு இன்றியமையாதவையும் ஆம்.

உயிருக்குரிய மூன்று நிலைகளில் முதலாவதாகிய கேவல நிலையில், பாசங்களில் முதன்மை மிக்கதாகிய ஆணவம் உயிரின் சகசம்பந்தியாகவே இருந்து கொள்கின்றது. சகல நிலையில் அந்த ஆணவ நீக்கஞ் சாட்டாக வந்து கூடும். மாயையும் கன்மமும் அதன் உபகாரிகள் ஆகின்றன. இங்ஙனம் கேவலம், சகலம் என்ற இரண்டில் மட்டுமே பாசம் உயிர்க்கு இன்றியமையாததாக, கடவுள் அதற்கு என்றும் எல்லா நிலைகளிலும் இன்றியமையாததாகின்றது. கடவுள் உயிரோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நில்லாதவரை உயிர்க்குக் கேவலமும் நிகழாது; கலமும் நிகழாது; சுத்தமும் நிகழாது. கடவுளின் இன்றியமையாமை இத்தகையதாகும்.

இத்தன்மையில், பாசமாகிய அசத்தைச் சார்ந்து அசத்தை அறிதலும் கடவுளாகிய சத்தைச் சார்ந்து சத்தை அறிதலும் உயிர்க்கு உளவாகும். இந்த இரண்டு நிலைகளுக்கும் ஆளாந்தன்மையால் உயிர் 'சதசத்' ஆகின்றது. இந்தச் 'சதசத்' இயல்பு வேறு கோணங்களிலிருந்தும் நோக்கப்படலாம்.



இங்கே நாங்கள் உயிருக்கு கேவல நிலை என்கிறது. அநாதி கேவல நிலையை, ஒரு மகா சங்காரத்துக்கும் அடுத்து வரும் மகா சிருட்டிக்கும் இடைப்பட்ட காலத்தில் உயிர் இருக்கும் நிலை அதுவாகும். அந் நிலையில் அதன் கேவலம் ஆணவ கேவலம் எனத் தனிப் பெயர் பெறும். அந்நிலையில் ஆணவம் மட்டுமே அதனோடு இருந்தது. அந்த ஆணவம் உயிரைத் தனக்குள் அமுக்கிக் கொண்டிருந்தது. அது ஒன்று தவிர உயிரினது உத் ஜீவிப்பிற்குத் தேவையான மற்று எப்பாசத் தொடர்பும் அப்போது அங்கில்லை. **'காரிட்ட ஆணவக் கருவறையின் உள்ளிட்ட கண்ணிலாக் குழவியைப் போற் கட்டுண்டிருந்த நிலை'** என அந்நிலையை வர்ணிப்பர் தாயுமான சுவாமிகள். அந்நிலை, அதற்குச் சீவத் தன்மை இருந்தும் இல்லாத நிலையே ஆதலின் அக்கட்டத்தில் உயிர்க்குப் பொருளாந் தன்மை சொல்வது உசிதமாகாது போலிருக்கும், பொருள் இருக்கிறதே தவிர, பொருளாந் தன்மை அங்கே புலப்பட்டதில்லை என்பதே விளக்கமாகும். அதனால் அங்கு அது பொருளல்லது எனவே எண்ணப்பட நிற்கும். அஃதாவது 'அசத்' என்றே சொல்லி விடக்கூடியதாய் இருக்கும். பின் சுத்த நிலையில் மலமாசெல்லாம் நீங்கி விடுகின்றன. சுத்த புடமிட்ட பத்தரைமாற்றுத் தங்கம் போலாகி விடுகின்றது. உயிர், அந்நிலையில் நற்சார்பாகிய இறைவன் திருவடிச் சார்பினையும் பெற்றிருக்கின்றது. அதற்கு இனி 'இன்பமே எந்நாளுந் துன்பமில்லை.' அப்பொழுது அது பொருளான பொருளாகவே எண்ணப்பட நிற்கின்றது. அதாவது அதன் பொருளாந்தன்மை பிரகாசமாய் விடுகின்றது. இனி என்றாயினும் அது அந்நிலையில் இருந்து மாறுபட மாட்டாது. என்றும் ஒரு படித்தாகவே இருக்கும் ஆதலால் அந்நிலை அதற்குச் 'சத்' நிலையேயாம். இங்ஙனம் இரு நிலைகளுக்கும் ஆளாந்தன்மை இருத்தல் காரணத்தாலும் உயிர் 'சதசத்' எனப்படுகின்றது.

இனி மற்றொரு வகையானும் உயிர் 'சதசத்' ஆதல் காண்போம். கேவல நிலையும் சுத்த நிலையும் அல்லாத சகல நிலையில் உயிர்க்குத் தநு கரண புவன போகங்கள் கிடைக்கின்றன. இவற்றின் உதவியால் உயிர் தன்னைப் பந்திக்கும் பாசங்களின் இயல்பையும் ஒரு பொது நிலையில் அறிந்து கொள்ளக் கூடிய

வாய்ப்பிருக்கின்றது. அவற்றோடு கூடி வாழும் காலம் முழுவதிலும் பல பல புவனங்களிலும் பல பல யோனிகளிலும் மாறி மாறிப் பிறந்து பல்வேறு கன்மங்களையும் செய்தும் அநுபவித்தும் வருகின்றது. அக்கன்மங்களுக்கிடையே எதிர்பாராத வகையால் விளையும் அபுத்தி பூர்வ சிவ புண்ணியமும் ஏதாவது செய்யும் வாய்ப்புக் கிட்டும். அதன் பலனாகப் புத்தி பூர்வமாகவே சிவ புண்ணியங்களை அறிந்து செய்யும் நிலை ஏற்படும். அவற்றின் பெறு பேறாக யாதானும் ஓர் பிறப்பில் மெய்ப்பொருளை நாடும் நல்லுணர்ச்சி கைவரப் பெற்றுச் சரியை கிரியை முதலாயவற்றைச் சார்ந்தொழுகும். அவற்றின் பெறுபேறாக ஞானகுரு வாய்க்கப் பெற்று விட்டால் உயிர்க்குச் சுத்த நிலை கைகூடி விடும். இந்தச் சுத்த நிலை கைகூடுவதற்கு முன்னோடி முயற்சியாக அது செய்தன வெல்லாம் சத்தின் சார்பை முன்னிட்டு நிகழ்ந்தனவேயாம். அவை அனைத்தும் சகல நிலை ஒன்றில்தானே இடம் பெறுவனவாம். இங்ஙனம் இருப்பதால், சகல நிலையென்ற இவ்வொரு நிலையிற்றானே அசத்தைச் சார்ந்து அசத்தை அறியும் வாய்ப்பும் சத்தைச் சார முயலும் வாய்ப்பும் இருத்தல் பற்றி இவ்வொரு நிலையில் வைத்தே உயிரின் சதசத்தாம் இயல்பு அறியப்படுமாறும் உளதாகும். இங்ஙனம் இச் 'சதசத்' இயல்பை மூன்று வகையால் நோக்கினோம். இனி,

முற்குறிப்பிட்டவாறு 'சதசத்' என்ற ஒரு தொடர்க்குள்ளே முப்பொருளும் அடங்கி நிற்கும் அமைவானது இம்முப்பொருள் இருப்புப் பற்றிய, இதுபோன்ற மற்றோர் இயல்பையும் நினைவிக்கின்றது. அதனையும் இத்தொடர்பில் வைத்தே அறிதல் சுவாரஸ்யமாகும்.

'சத்', 'அசத்', 'சதசத்' என்ற இவை வேறு வேறான மூன்று பொருள்கள் எனினும் இடத்தாலோ காலத்தாலோ இவை வேறுபட்டிருப்பதில்லை; என்றும் ஒன்றாகவே இருப்பவை. எனில், மூன்று பொருள்கள் ஒன்றாயிருத்தல் எப்படியும் அசம்பாவிதம் ஆகுமே? என்பது கேள்வி. இவை உருவப் பொருள்களாய் இருந்தால் மட்டுமே அப்படி அசம்பாவிதத்திற்கு இடமாகும். இவை மூன்றும் அருவப் பொருள்களாய் இருத்தலின் அப்படியொரு சங்கை நிகழ இடமில்லை. "நீருள் கடற்பஞ்சு" உருவப் பொருள்களின் நிலை கண்டித நிலை. அதாவது இடத்திலோ காலத்திலோ ஒவ்வோர் பகுதியை வரையறைப் படுத்திக் கொண்டிருக்கும் நிலை. அருவப் பொருட்களின் நிலை அகண்டித நிலை. அது கண்டித நிலைக்கு நேர்மாறானது. அதுவே வியாபக நிலை எனப்படுவது. எனில், அங்ஙனம் முப்பொருளும் வியாபகமாய் ஒருங்கிருக்க ஒன்றன் வியாபகத் தன்மை மற்றதனால் பாதிக்கப்படாதோ என்பதும் ஒரு கேள்வி. அங்ஙனம் பாதிப்பு நிகழாத ஒரு வகையிலேயே இறைவனின் பொதுவியல்பு அமைந்திருத்தல் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.



இறைவன் பொது வியல்புகளாகச் சொல்லப்படுபவற்றுள் ஒன்று ஒன்றாய் நிற்றல், அவர் உயிர்கள் தோறுங் கலந்து அவை தானாயும் உலகப் பொருள்கள் ஒவ்வொன்றுடனும் அதுவதுவாயும் நிற்கும் நிலை இரண்டும் ஒன்றாய் நிற்றலில் அடங்கும் என்பது ஆகம உண்மை. இவ்வாற்றால் சர்வ வியாபியாகிய இறைவன் உயிரையும் உலகையும் தன் வியாபகத்துள் அடங்கக் கொண்டு தன் வியாபகத்துக்கோ அவற்றின் வியாபகத்துக்கோ பாதிப்பில்லா வகையில் நிற்பன் என்பது பெறப்படும்.

'என்னுள்ளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து வந்து
என்னுள்ளே நிற்கும் இன்னம்பர் ஈசனே'

என்பது போன்று திருமுறை உண்மைகள், இறைவன், உயிர்கள் விஷயத்தில் அவை தானாய் நிற்குமாற்றை விளக்குவன.

'இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமானாய் எறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி'

என்பது போன்ற உண்மைகள், இறைவன் உலகப் பொருள்களுடன் அதுவதுவாய் நிற்குமாற்றைத் தெரிவிப்பன.

சித்தாந்த அறிவிற்குப் பயன் திருமுறைப் பொருள் உண்மையை உள்ளபடி அறிந்து தெளிதலே என்பர் அதுவும் இதனாற் பெறும்.

---

# 4. ஆணவ விசாரணை

பதி பசு பாசம் என்னும் மூன்றும் சைவசித்தாந்தத்தில் உள்பொருள்கள் ஆகும். இவற்றுள் பாசம் என்பது ஆணவம், கன்மம், மாயை என முப்பொருட் கூட்டாய் இருக்கின்றது. இம் முப்பொருட் கூட்டில் முதலிடம் பெறுவது ஆணவம்.

### ஆணவ உண்மை

உயிர் வாழ்க்கையில் இருவேறு நிலைகள் அவதானிக்கப் படுகின்றன. உயிர் பாச பந்தங்களோடு கூடி உலகியற் சார்பாக வாழும் வாழ்க்கை நிலையொன்று. பாசபந்தங் கழன்று உலகியற் சார்பு கெட்டு சிவனே தஞ்சமாக வாழும் நிலை மற்றையது. முன்னையது பெத்தநிலை என்றும் பின்னையது முத்தி நிலை என்றும் பெயர் பெறும்.

பெத்த நிலையில் உயிரின் வாழ்வியற் போக்குகளை அவதானித்தலில், நமக்குச் சிரமம் ஏதுமில்லை. அனைத்து வகை உயிர்களின் வாழ்க்கைப் போக்கிலும் பொதுப் பண்பாக உணரக்கிடப்பது ஒன்றுளது. எந்த உயிரிடத்தும் அதன் வாழ்க்கையின் எந்தத் திருப்பத்திலும் "நான்" என்ற ஒரு முனைப்பும் "எனது" என்ற ஒரு பற்றின் பிடிப்பும் இருத்தல் பொதுப் பண்பாகும். "நான்" என்ற இம்முனைப்பு **அகங்காரம்** என்ற பெயராலும் எனது என்ற பிடிப்பு **மமகாரம்** என்ற பெயராலும் வழங்குகின்றன. **பெத்தநிலை** வாழ்வு முழுமையிலும் உயிர்க்கு அவ்விரண்டும் நீங்காப் பண்புகளாய் இருக்கின்றன. அவை இல்லாத பட்சத்தில், இங்கே வாழ்க்கை என ஒன்று இருக்கவே முடியாது என எண்ணும் அளவுக்கு அவை இன்றியமையாப் பண்புகளாகவும் இருக்கின்றன. இந்த **அகங்கார மமகாரத்** தன்மைகள் யாவரிடத்தேனும் சற்று மந்தமாக இருக்கக் கண்டாலே அவரைத் **தரமற்றவர், தகுதியற்றவர்** என்று ஒதுக்கும் நிலை உலகியல் நோக்கில் இருக்கவே இருக்கிறது.

இந்தப் பாங்கில் நோக்கும்போது இந்த அகங்கார மமகாரங்களும் வாழ்வியலின் அடிநிலை உண்மைகளிற்



சேர்ந்தனவாகவே கருதக் கிடக்கின்றன. ஆதலின், இவை எவ்வாறு இருக்கின்றன? எதனால் இருக்கின்றன? ஏன் இருக்கின்றன? என்ற விசாரணைகள் அவசியமானவையேயாம்.

இவ்விரண்டும் அனைத்து உயிர்க்கும் பொதுப் பண்பாய் இருப்பன எனப்படினும் உயிருக்குயிர் அவற்றின் தரமும் தகுதியும் வேறுவேறு. எந்த இரண்டு உயிர்க்கு இடையிலும் இந்த வேறுபாடு துலாம்பரமாக அறியக் கிடத்தல் சர்வ சாதாரணமாகும். இங்ஙனம் ஒவ்வோர் உயிரினிடத்தும் அதன் அதன் இயல்புக்கு ஏற்ப இவை அமைந்திருக்கும் தன்மை அவ்வவ் உயிரின் தனித்துவ இயல்பு (Individuality) எனப்படுகின்றது.

இனி காரண கரியக் கோட்பாட்டின்படி நோக்குகையில் இவை காரியங்கள் என்ற பகுப்பில் அடங்கும் எவையெவை பலவாயும் சடத்தன்மை உடையனவாயும் இருப்பனவோ அவையெல்லாம் காரியங்கள், என்பது ஒரு நியமம். காரியங்கள் என்று இருப்பனவற்குக் காரணம் ஒவ்வொன்று இருத்தலும் தவிர்க்க முடியாத நியமமேயாம். இந்நிலையில், இந்த அகங்கார மமகாரங்களின் காரணம் என்ன? என்ற விசாரணை எழுகின்றது.

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்"

என்பது திருக்குறள். இதில் 'யான் எனது என்னுஞ் செருக்கு' என்ற தொடர்க்கு உரைகூறும் பரிமேலழகர், யானென்றும் எனதென்றும் பற்றுச் செய்தற்கு ஏதுவாகிய மயக்கம் என்கின்றார். (மயக்கம் திரவியமல்ல, ஆதலால் மயக்கத்தைச் செய்வதாகிய ஆணவமே இங்கு செருக்கு எனப்பட்டது என்றல் சித்தாந்த ரீதியான விளக்கமாகும்)

"யானென தென்ன நின்ற இருண் முழு திரிதிட்டெல்லாம்
தானென என்னை வல்லே தன்னடியிருத்தி"

— தணிகைப் புராணம், நந்தி உபதேசப்படலம் 140.

இச்செய்யுளில் யான் எனது என்ற காரியங்களின் காரணம்

இருள் எனப்படுகின்றது. இந்த வகையில், அகங்கார மமகாரங்களின் காரணமாக ஒன்று இருத்தல் பற்றி எல்லோராலும் வெகுவாகச் சிந்திக்கப் பட்டிருக்கின்றது.

அது ஞான அபாவந்தான் என்றனர் வேதாந்தியரில் ஒரு சாரார். மாயையின் இரு சக்திகளில் ஒன்றாகிய ஆவரண சக்தி தான் அது என்றனர் அவருள் மற்றொரு சாரார். அது அவிச்சை என்றனர் சாங்கியர். அது மாயை கன்மங்களின் கூட்டுறவுதான் என்றனர் ஐக்கியவாத சைவர், பாசுபதசைவர் என்போர். அது வேறெதுவுமல்ல உயிர்க்குணம் என்றார்கள் பாடாணவாதிகள். பிரமம் அவிச்சையோடு சேர்ந்ததால் விளையும் ஒரு பிராந்தி உணர்வே அது என்றனர் மாயாவாதிகள்.

"நான்", "எனது" என்பன உயிர்க்குணமென்றால் அவை உயிரை விட்டு என்றும் நீங்காதவை ஆதல் வேண்டும். எங்கள் தத்துவ ஞான அறிவியல் அநுபவம் அதற்கு எதிர்மாறாகப் பேசுகின்றது. யாம் மேலே கண்ட திருக்குறட் கருத்தும் தணிகைப் புராணக் கருத்தும் அவை ஒரு கால அடைவில் நீங்குவன என்ற விளக்கத்தைத் தருகின்றன. "செருக்கு அறுப்பான்", இருள் முழுதும் "இரித்திட்டு" என்ற தொடர்கள் குறிப்பிடத்தக்கன. அவ்வாறு நிற்கவே (ஏகனாகி இறை பணி நிற்க) யான் எனது என்னுஞ் செருக்கற்று அரனது சீபாதத்தை அணையும் ஆகலான் (சிவஞானபோதம் 10ம் சூத். 1ம் அதி. செருக்கு என்பது செருக்குக்கு ஏதுவாகிய மலத்தைக் குறித்தலால் ஆகுபெயர் — உரை விளக்கக் குறிப்பு)

"நானென்ப தற்று உயிரொடு ஊன்என்பதற்று"

— திருப்புகழ்

"ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வு கெட்டு என் உள்ளமும் போய்
நான் கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"

— திருவாசகம்

"நிர்அஹங்காரோ நிர்மமோ பூத்வா சாந்திம் அதிகச்சதி" அகங்கார மமகாரமற்றுச் சாந்தியை (உயிர்) அடைகிறது — உபநிஷதம். இக்கருத்துக்கள் எல்லாம் இந்த அகங்கார மமகாரங்கள் உயிரில் நெடுக இருப்பன அல்ல என்பதை ஒரே முகமாக ஆதரிக்கின்றன. ஆதலால் இவை சொந்தக் குணங்கள் அல்ல என்பது வெளி.



இனி, இவற்றின் காரணம் ஞான அபாவம் என்றால் பொருந்தாது. ஞான அபாவம் — ஞானத்தின் இன்மை. இன்மையாகிய ஒரு காரணத்திலிருந்தும் ஏதேனுமொரு காரியம் தோன்றும் என எவரும் ஒத்துக் கொள்ளார். காரணம் இன்மையெனிற் காரியமும் இன்மையே. குறித்த அகங்கார மமகாரங்கள் இரண்டும் உயிரின் பெத்த நிலை முழுவதிலும் நின்று பலன்படுவன என்று எங்களுக்கே நிதர்சனமாகத் தெரிகின்றது. இவை காரணமாகவே உயிருக்குப் போக்திருத்துவம் (போகம் அனுபவிப்போனாந் தன்மை) இருப்பதாகவும் கொள்ளப் பட்டிருக்கின்றது. இத்தன்மையே உயிரின் ஆளுமையை (Personality) உருவாக்குவது என்றும் கருதப்படுகின்றது.

இதனால் இவற்றைப் பிராந்தியுணர்வு எனத் தட்டிக் கழித்து விடுதலும் முடியாது. மாயை என்பது இறைவன் உடைமை யாயிருந்து அவனால் உயிர்க்குச் சேர்க்கப்படுவது. ஆதலின், உயிரின் உடைமைகள் போலுள்ள இவற்றின் காரணம் மாயை என்பதற்கில்லை. அன்றியும், கன்மம் என்பது இந்த அகங்கார மமகாரங்கள் காரணமாகவே உயிரிடத்தில் விளைவதொன்று. ஆதலின் அவற்றின் காரியமாயுள்ள கன்மத்தை அவற்றுக்குக் காரணம் என்றல் சாலாது. அவிச்சை என்பது ஒரு பொருளேயன்று. பிராந்தி என்பது போல்வதே அதுவும். பிராந்தி — மயக்கம். 'மருள், மயக்கம், அவிச்சை விபரீத உணர்வு என்பன ஒரு பொருட்கிளவி' — திருக்குறள் 36.1 — பரிமேலழகர் உரைக் குறிப்பு.

இதனால், குறித்த இவ்விளக்கங்கள் எல்லாம் சிலர் சிலரின் பிரதிக்ஞை (Hypothesis) என்றோ, கற்பிதம் (Supposition) என்றோ தான் மெய்யியல் அறிவாராய்ச்சி கண்டிருக்கின்றது. ஏது, உதாரணங்களால் நிரூபிக்கப்படாவிடில் பிரதிக்ஞை, என்றும் பிரதிக்ஞையாகவே இருக்கும். அது பொருளாகாது.

கற்பிதத்துக்குக் காரண காரிய வலு விருத்தம் சாலாது, மேற்கூறிய விளக்கங்களும் இக்கதிக்கு உட்பட்டனவேயாயின.

இது இங்ஙனமாக, இந்த அகங்கார மமகார நிலைகள் உயிரின் நன்மைக்கோ தீமைக்கோ? என்ற விசாரணையும் எழுகின்றது. உயிரின் நன்மைக்கேயானவை எனில் அவற்றின் காரணம் எதுவாயினும் ஆகட்டும் என்று இருந்து விடுதல் கூடும். இங்கு நிலைமை வேறு. இந்த அகங்கார மமகார நிலைகளே உயிரின் விளைவுக்கு காரணமாயுள்ளவை. உயிரினது எந்த ஒரு செயலின் கண்ணும் இவை சமம்பந்தப்படுதலினாலேயே ஆகாமியந் தோன்றிச் சஞ்சிதமாகிப் பிராரப்தமாய் அநுபவம் நிகழ வருகின்றது. இத்தகைய வினைகளின் ஆர்ச்சிப்பும் அநுபவமும் தொடர் நிகழ்ச்சியாக நீண்டு உயிரின் பந்த நிலையை நீட்டித்துக் கொண்டிருப்பதற்கு இவைகளே காரணமாகின்றன. அந்த அளவில் இவை நன்மைக்கேதான் உள்ளன என்பதற்கில்லை. வினைப் பெருக்கம் பிறவிப்பெருக்கத்துக்கே ஏதுவாகின்றமையால் இது நன்மைக்குத்தான் என்று எப்படித் துணிவது? இன்னும் இவற்றின் அணைதுணையாக உயிரிடத்தில் தோன்றும் அநர்த்தங்கள் வெகு பலவாகின்றன. இவற்றுக்கெல்லாம் மூலமாயிருக்கும் இவ் அகங்கார மமகாரங்களின் காரணம் அறியப்படுதல் இன்றியமையாததுமன்றிச் சுவாரஸ்யமானதுங்கூட.

## ஆணவமே காரணம்

இதற்கு முந்திய பந்தியொன்றில், உயிரோ, கன்மமோ மாயையோ இவற்றின் காரணமாதலில்லை எனக் கண்டோம். கடவுள் இவற்றுக்குக் காரணமாதல் கூடுமோ என்று சந்தேகிப்பதற்கும் இடமில்லை. அது கடவுள் தன்மைக்கு நேர் விரோதமாகும். எனவே, மெய்யியல் அறிவாராய்ச்சியின் அடிப்படைத் தத்துவங்களாய் உள்ளவற்றில் மேற்கண்டன போக எஞ்சி நிற்கும் ஆணவம் ஒன்றே இவற்றுக்குக் காரணம் எனத் துணிய வேண்டியிருக்கின்றது.



## ஆணவப் பெயர்கள்

"ஸம்ருதயு பாசான் புரத: ப்ரணோத்ய
சோகாதிகோ மோததே ஸ்வர்க்க லோகே"

"அவன் (உயிர்) ஆணவத்தையும் மாயை கன்மங்களையும் முதலில் நீக்கிவிட்டு, துக்கத்தின் நீங்கிச் சிவலோகத்தில் மகிழ்கின்றான்" என்கின்றது கடோபநிஷதத்தில் ஒரு மந்திரம்.
(கடம் 1.18)

"இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு " – குறள் 352

என்ற திருக்குறளிலும் இப்பொருள் மிளிரக் காண்கின்றோம். உபநிடத சுலோகத்தில் 'மிருத்யு' என்ற பதமும் குறளில் 'இருள்' என்ற பதமும் ஆணவத்துக்குப் பெயராக இடம் பெற்றுள்ளன. இவ் வகையில் ஆணவத்தின் பெயர்களாக ஆகமங்களிலும் சித்தாந்த நூல்களிலும் இடம் பெற்றவை பல.

"பசுத்வ பசுநீகார ம்ருத்யு மூர்ச்சா மலாஞ்சனை:
அவித்யா வ்ருதி ருக் க்லானி பாப மூல க்ஷயாதிபி:"
— மிருகேந்திரம் 7.7

1. பசுத்வம் — உயிரைப் பாசத்தோடு கூடியதாகச் செய்வது
2. பசுநீகாரம் — உயிரின் அறிவை மூடியிருப்பது
3. ம்ருத்யு — உயிரைச் சீவிக்க வொட்டாது செய்வது
4. மூர்ச்சா — உயிரை மயக்குற்றுக் கிடக்க வைப்பது
5. மலம் — உயிரிடத்தில் அழுக்காந் தன்மையை தோற்றுவது
6. அஞ்சனம் — இருள் போல் உயிரைச் சூழ்ந்து கொள்வது
7. அவித்யா — உயிருக்கு அறியாமையைச் செய்வது
8. ஆவ்ருதி — உயிரறிவுக்கு உண்மைப் பொருட் காட்சி தோன்றாமல் மறைப்பது
9. ருக் — உயிரின் ஞானக் கிரியா வியாபகத்தைத் தடுப்பது

10. க்லானி — உயிர்க்குக் களைப்பு அசதி சோர்வு முதலானவற்றை உண்டாக்குவது
11. பாபமூலம் — பாபத்துக்குக் காரணமாயிருப்பது
12. க்ஷயிம் — உயிரின் ஞானக் கிரியா ஆற்றலைத் தேய்ப்பது

## ஆணவம்

(1) உயிரின் அறிவு வியாபகத்தை ஒடுக்கி அணுவானாற் போல் செய்வது
(2) அணு (உயிர்) வை இயல்பாகவே பற்றியிருப்பது (சகஜம் — உயிரிடத்து இயல்பாயுள்ளது)

இவ்வகையில் மிருகேந்திராகமம் கொடுத்திருக்கும் பெயர் பட்டியலி(1 — 12)லிருந்தே ஆணவ இயல்புகள் அதிகம் அவதானிக்கவுள்ளன.

## மிருகேந்திரத்தில்:

ஆணவ மலம் இல்லாவிட்டால் உயிர்க்குப் பரதந்திரியம் ஏற்பட இடமில்லை. பரதந்திரியம் உயிர் சுபாவமெனில் முக்தான்மாக்கள் என ஒரு பகுதி இருப்பது யாங்ஙனம்? மலபந்தமே பரதந்திரிய காரணம் என்கை இதனால் தெரிகிறது. பந்தமே ஆன்மாவிற்கு நித்தியமென்றால் முத்திக்காக ஏற்பட்ட ஞானாதி உபாயங்களெல்லாம் வியர்த்தமாகும். அநாதியான ஆத்மாவானது மலசத்தியாற் கட்டுப்படாவிடில் அது நித்தியமான வியாபகமான சிற்சத்தி உடையதாயிருந்தும் போகத்தின் பொருட்டுக் கலை முதலிய மாயா தத்துவங்களையும் மோட்சத்திற்காக சிவனையும் நாட வேண்டுவதேன்? ஆன்மாவிற்கு ஆவரணமாக வந்த இம்மலமானது சைவாகமங்களில் அநேக பரியாய நாமமுள்ளதாகச் சொல்லப் படுகின்றது. அது பசு சாஸ்திரஞ் செய்தவர்களுக்குத் தெரியாது. அம்மலமானது சர்வ பிராணிகட்கும் ஒன்றே. அது அநாதியாயும் கனமாய்ப் பேதிக்கக் கூடாததாயும் மகத்தாயும் ஆத்மாக்கள் தோறும் தத்தம் பரிபாக காலத்தில் அழிகின்ற அநேக சக்திகள் உள்ளதாயு மிருக்கும். இம்மலம் ஆன்மாக்கட்கு அநாதியேயுளது. அப்படியல்ல இடையில் வந்ததெனில் வந்ததற்கு நிமித்தஞ் சொல்ல வேண்டும்.



நிமித்தம் இல்லாமலே வருமென்றால் முக்தான்மாக்களையும் மறைப்பதாக வேண்டும். அங்ஙனேல் மோட்சப் பிரயத்தனம் வீண்போனதாகும். அம்மலம் ஜடம், ஜடமாகவும் அநேகமாகவும் உள்ளதொன்று உற்பத்தியுள்ளதாதல் வேண்டும். அங்ஙனம் இன்மையின் இது ஏகமேயாம். ஆனால் எல்லாருக்கும் ஏக காலத்தில் முத்தியேற்படக் காணாமையினாலே அவ்வவ் ஆத்மாக்களோடு தனித்தனி தொடர்பு கொள்ளும் அளவிறந்த சக்திகளுடையது என்று கொள்ள வேண்டும். இறைவன் சக்தியாகிய திரோதானமும் இந்த மல சக்திகளை அதிஷ்டித்து அநுவர்த்திக்கிற (பின்னிற்கிற) படியால் பாசம் என்னும் பெயர்க்குரியதாயிற்று. ஈஸ்வர சக்தியானது தனக்குத் திரோதான அதிகாரமிருக்கும் வரையில் இந்த மல சக்திகளைப் பரிணமிக்கச் செய்துகொண்டு அநுக்கிரக ரூபமான ஞானம் பிரகாசிக்கும் தருணம் பார்த்து அநுக்ரக சக்தி ஆய்விடுகிறது.

சேதனம் அசேதனம் என்ற இருவகைப் பிரபஞ்சமும் ஈஸ்வரனது ஆட்சியில் உள்ளனவே. அவ்வகையில் இரண்டையும் அனுக்கிரகிக்க வேண்டிய பொறுப்பு அவர்க்கு உளதாகும். அந்நோக்கில் அவர் தன் சத்தியால் மல சக்திகளைப் பரிணமிக்கச் செய்கின்றார் என்றாலும் அது அந்நேரம் உயிரின் அநுக்கிரகத்திற் குரியதாகவில்லை. இந்நிலையில் ஈஸ்வரச் சக்தியை சர்வாநுக்கிரகிகா என்பதெப்படி? அன்றியும், உயிருக்குப் பாதகமான ஆணவ சக்திகள் பரிணமிக்க உதவுதல் அநுக்ரக லக்ஷணத்திற்குப் பொருத்தமாகாதே என்பன இவ்விடத்தில் எழும் ஆசங்கைகள். உயிரும் ஆணவமும் விரோதிகளாகையால் ஈஸ்வரன் இரண்டையும் ஒரே வேளையில் அநுக்கிரகிக்க முடியாதென்பதொன்று. உயிரை வருத்துவதற்கல்ல; உயிரின் மலத்திணிப்பை விலக்குவதற்காகவே அவற்றைப் பரிணமிக்கச் செய்கின்றார் ஈஸ்வரன் என்பதொன்று. ஆதலால் ஈஸ்வரசத்தி சர்வாநுக்கிரஹிகா என்பதில் தவறில்லை. மலசக்திகளை அவர் பரிணமிக்கச் செய்வது ஒரு உபாயம் பற்றியதேயன்றிச் செற்றம் பற்றியதன்றாம். உபாயமாவ தென்னவெனில், ஒருவனுக்கு மல அதிகாரம் உள்ள வரை முத்திப்பேறு சம்பவிக்காது ஆதலால் மல அதிகாரத்தை நீக்குவதற்கு இறைவன் புரியும் ஒரு தந்திரமே என்க. ஆதலால் இறைவன் மலத்தைப் பரிணமிக்கச் செய்வதும் உயிர்க்கு அநுக்கிரகிப்பதும் தம்முள் விரோதமான இருவேறு

நிகழ்ச்சிகளல்ல. வைத்தியனொருவன் விரண முடையானுக்குக் காரம் வைத்து வருத்தலும் விரணத்தை மாற்றுதலும் ஒன்றுக்கொன்று விரோதச் செயல்களாகா. இது போல்வதே அதுவும் என்க.

இவ்வாறு மிருகேந்திராகமப் **பாசலக்ஷணப்படலத்தில்** ஆணவ **லக்ஷணம்** பேசப்பட்டுள்ளது. ஞானாமிர்தத்திலும் திருவருட்பயனிலும் இக்கருத்துக்கள் பயின்று வருதல் காணலாம்.

## பௌஷ்கராகமத்தில்:

ஆணவ இலட்சணங்களை விரித்துரைக்கும் மற்றொரு ஆகமம் பௌஷ்கரம் ஆகும். இதன் நான்காவது படலமாகிய பசு படலத்தில் 115 தொடக்கம் 169 முடியவுள்ள சுலோகங்களில் ஆணவ **லக்ஷணம்** பேசப்பட்டுள்ளது. ஆன்மாவின் இலக்கணங்களை விபரிக்கையில், அதற்கு வியாபகத்தன்மை இருத்தலை விளக்கி அவ்வியாபகத் தன்மையைத் தடுப்பதொன்றுள்ளது என்ற தொடர்பில் அங்கே ஆணவலட்சணம் தொடர்பு படுத்தப் படுகின்றது. கிஞ்சிஜ்ஞன் — சிற்றறிவினன் என்ற நிலை பெற்றதும் கிஞ்சித்கர்த்ருத்வம் — சிறு தொழிலுடைமை பெற்றதும் இம்மலத்தினால் தான் என்பது இவ்வாகமக் கருத்து. ஆணவம் பற்றி மேலும் இவ்வாகமம் தரும் விசேட கருத்துக்களாவன:

1. இந்த ஆணவமலம் ஒரு திரவியம்; அநந்தசக்தி உடையதாயிருக்கையால்; அக்கினியைப்போல்

2. இது அநாதியே இடையில் வந்ததெனில் அநாதியாயிருக்கிற உயிரின் சிற்சக்தியை இது ஒரு போதும் பாதிக்கமாட்டாது.

3. இந்த ஆன்மா மலத்தால் மறைக்கப்பட்டவன். கிஞ்சிஜ்ஞத்வம் அடைந்தால்; கிஞ்சிஜ்ஞத்வம் இல்லாதவன் மலத்தால் மறைக்கப்பட்டான் பரமசிவத்தைப்போல. ஆதலால் அவ் ஆன்மா மலத்தால் மறைக்கப்பட்டவனேயாம்.

4. மலத்தால் மறைக்கப் பட்டமையினாலேயே ஆன்மாவுக்குச் சுகதுக்கச் சேர்க்கையும் உளதாயிற்று.



5. மாயை கன்மங்கள் ஆன்ம சிற்சத்திக்கு வியஞ்சகமாய் (விளக்குந் துணை) உள்ளவை. அதனால் அவற்றினால் மறைப்பு நிகழும் என்பதற்கில்லை. ஆணவமே மறைப்பின் காரணம்.

6. அம்மலம் மோகம் முதல் வைசித்திரியம் ஈறாக ஏழு பிரகாரங்களாக அறியத்தக்கது. (இவ்வேழும் அதன் காரிய ரூபங்களாம்)

**அ. மோகம்:** மண் பெண் பொன் ஆதிகளிடத்தில் நன்மை தீமை கருதாதெழும் மயக்கம். பின்வரும் ஆறு வகைகளிலும் கூட மோகம் என்ற பண்பு ஏதானும் ஒரு விதத்தில் கலந்தேயிருக்கும்.

**ஆ. இராகம்:** கிடைக்கும் என்று நம்ப முடியாதவற்றிலும் இச்சை கொண்டிருத்தல்.

**இ. மதம் :** தான் பெற்ற யாதானுமோர் பேறு பற்றி தன்னை மறந்து தருக்கடைதல்.

**ஈ. விஷாதம்:** தான் அரும்பேறெனக் கருதிக் கொண்டவை இழக்கப்படுங்கால் ஏற்படுங் கிலேசம்.

**உ. தாபம் :** இழப்புக் காரணமாகத் தொடர்ந்து ஏற்பட்டிருக்கும் மனவெதுப்பு.

**ஊ. சோஷம்:** துக்கந்தாளாமல் அதிலே உப்பி மரத்துப் போதல்.

**எ. வைசித்திரியம்:** தன்னைச்சார்ந்த சொத்துச் சுதந்திரச் செழிப்புகளைப் பார்த்து அவை தெய்வத்தால் வந்த தென்னாது தன்னால் வந்ததெனக் கொள்ளுதல்.

7. மலம் மறைப்பதென்ற விஷயத்தில் அது ஆன்ம சிற்சத்தியை மறைக்குமோ அல்லது மழுங்கச் செய்யுமோ என்ற கேள்விக்கு இடமுண்டு. சிற்சத்தி மறைபடுவதெனில் அதனைத் தன்

குணமாகவுள்ள ஆன்மாவும் மறைபட்டதாய் விடும். சிற்சத்தி மழுங்கச் செய்யப்படுவதெனில் அது சிற்சத்திக்கு அழிவுண்மை கற்பிப்பதாகும். ஆதலால் இரண்டும் பொருந்தாது. எனில் மறைப்பு என்பது எவ்வகையில் இருக்கும் என்றால் சிற்சத்தி இருந்தாங்கிருக்க அதன் அறிவு (ஞத்வ) தொழில் (கர்த்ருத்வ) பிரவிர்த்தியைத் தடுக்கும் அளவினதாகவேயிருக்கும். மந்திர சக்தியானது அக்கினியின் பிரகாசசக்தி மறையாதிருக்கவே அதன் சுடும் சக்தியை மட்டும் மறைத்தல் போல இதனைக் கொள்ளலாகும்.

8. இதனால், நேத்திரமானது இருட்டால் மறைக்கப்படுகையில் தன்பிரகாசமுங் கெடாமல் விஷயங்களில் அபிமுகப்படுதலும் இல்லாமல் எவ்வாறு இருக்கிறதோ அவ்வாறே மலசத்தியால் மறைபடும் சிற்சத்தியும் தன்னியல்புங் கெடாமல் விஷய அறிவில் அபிமுகப்படுதலும் இல்லாமல் தன்னிடத்தில் இருக்கும் என அறியலாம்.

ஆகமக்காட்சியில் ஆணவத்தின் நிலை இன்னதென்பதை மட்டிடுதற்கு இவ்விரு ஆகமக் கருத்துக்களும் போதுமானவை.

## ஒப்பியல் நோக்கு

ஆகமங்கள் கூறும் இப்பொருள் விரிவுகளை எல்லாம் பாராதமுன் நமது சித்தாந்த ஆசிரியர்கள் தம் ஞானக்கவித்துவ சாமர்த்தியத்தால் இத்தகைய விரிவுகளையெல்லாம் இரத்தினச் சுருக்கமாகப் பொருத்தியடக்கி ஒவ்வோர் விருத்தத்திற் புகுத்திவைத்த நயம் விளங்கிக் கொள்ளுதல் அரிதாகும். சிவப்பிரகாசம் 20 ஆஞ் செய்யுளும் (ஏகமாய்த் தங்கால) சிவஞானசித்தியார் இரண்டாம் சூத்திரம் 80ஆம் செய்யுளும் (ஒன்றதாய் அநேக சக்தி ) சம்பந்தப்பட்ட ஆசிரியர்களின் அற்புத சாமர்த்திய கிருதிகள் (Master Pieces) ஆயிருக்கும் நயம் இவ்வாகம விரிவு விளக்கங்களை அறியும் அறிவு விளக்கத்தில் மட்டுமே பிரகாசமாகும். திருவருட்பயனில் இருண்மலநிலைய அதிகாரத்துப் பத்துக்குறள் இவ்விரிவுகள் எல்லாம் புகுந்தடங்க உமாபதி சிவாசாரியார் புனைந்த கிருதி விசேஷமும் சாமானியமன்று. இதனை



விரித்து விசாரிக்க இச்சிறுகட்டுரை இடந்தராமையின் ஒழிகின்றோம். மற்றுஞ் சித்தாந்த நூல்களிலும் ஆங்காங்கு ஆணவம் பற்றி வரும் கருத்துக்கள் இவ்வாகமப் பொருட்கதிர்களின் சிதறல்களேயாம். ஆகமசுலோகங்களில் அக்கருத்துக்களைப் பார்த்த பின்னரே அக்கருத்துக்கள் சித்தாந்த தமிழ் நூல்களில் ஞானக்கொழுமை தமிழ்ச் செழுமையிற் கொலுவிருக்க அமைந்திருக்கும் கெம்பீரமும் நயக்கப்படுவதாகும்.

(1) "நாப்யப்ரகாசி கரணம் கிம்து காரிய அப்ரவர்தனம்" — மலம் சிற்சக்தியை மழுக்குவதன்று. ஆனால் ஞத்துவ கர்த்திருத்துவ (அறிவு செயல்) கார்யங்கள் பிரவர்த்திக்காமற் செய்தல் மட்டுமே.
— பௌஷ்கரம் பசு படலம் 158.

(2) மூலமல மாயறிவு முழுநினையும் மறைக்கும்
— சிவப்பிரகாசம்

(3) என்றும் அஞ்ஞானங் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே
— சிவஞானசித்தியார்

(4) அதுதான் ஞான திரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலான்
— சிவஞானபோதம்

இந்த நான்கு பகுதிகளிலும் ஒரே பொருளே சொல்லப் படுகிறது. ஆனால், முதலாவது ஆகமக் கூற்று. பின்னைய மூன்றும் தமிழ் சித்தாந்த சாஸ்திரக் கூற்றுக்கள். இறுதிக் கூற்றிலுள்ள ஞானவிறுக்கோடு தமிழ் முறுக்கும் மிக மகத்துவமானது இத்தகைய நோக்கும் சித்தாந்தப் பொருள் உணர்வுக்கு ஊற்றந் தருதல் அறிதற் பாற்று.

## ஆணவத்தின் பிராதான்யம்:

அகங்கார மமகாரங்கள் இல்லாவழி லௌகிக் வாழ்க்கை வாழ்க்கையாய் இருக்காது என்றவாறு, ஆணவம் என்ற பொருள் இல்வழி சித்தாந்த ஆராய்வும் சித்தாந்த ஆராய்ச்சியாய் இருக்காதெனச் சொல்ல வேண்டியிருக்கிறது. அவ்வளவுக்கு முக்கியத்துவம் பெறுகின்றது ஆணவம். சித்தாந்தம் என்னும் காவியத்தில் ஆணவம் பிரதி நாயகன் எனலாம். உயிரின் வாழ்க்கை நிலையின்

பல்வேறு கட்டங்களிலும் ஆணவத்தின் செல்வாக்கு இடம் பெறுகின்றது. கேவலம், சகலம், சுத்தம் என்பன உயிரின் மூவேறு நிலைகளாம். காரண கேவல நிலையில் ஆணவம் ஒன்றே உயிரின் தஞ்சம். அங்கு ஆணவம் உயிரை முற்ற முடியத் தன் ஆதிக்கத்திலேயே வைத்துக் கொண்டு மயக்குவதாகிய தன் சொரூப இலட்சணத்தில் நிற்கிறது. பின் காரண சகலத்தில் உயிர்க்குக் கிடைக்கும் கருவி கரணங்களைச் சார்ந்து அதற்கு விபரீத உணர்வை விளைக்கும் தன் தடத்த இலட்சணத்தில் நிற்கிறது. பின் காரண சுத்தத்தில் தான் சம்பந்தப்பட்ட உயிரை விட்டு விலகுதல் மூலம் உயிர் சிவப்பேற்றை அநுபவிக்க வைக்கின்றது. பின் காரிய கேவலம் காரிய சகலம் காரிய சுத்தம் என்ற நிலைகளிலும் அதன் நிலை மேற்போந்த ஒழுங்குக் கனுகுணமாகவே இருக்கிறது.

"விழிப்பு உணர்ப்புறும் இருளென விராவிய தன்னை
அழிப்பமுற்றிய சத்தியுந் தன்வழி யாக்கி
ஒழிப்பின் மூன்றிடத் திருதிறத் தவத்தை ஓரைந்தும்
கழிப்பி லாதுயி ருறப்பல சத்தியிற் கதுவும்"

— தணிகைப் புராணம் தந்தி உபதேசப்படலம் 104

என்பது காண்க.

(மூன்றிடம் — கேவலம், சகலம், சுத்தம், இரு திறம் — காரணம், காரியம். அவத்தை ஐந்து — சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.)

## சிவஞான போதத்தில்,

சித்தாந்த மூல நூலாகிய சிவஞான போதத்தில் முதற் சூத்திரத்திலேயே ஆணவந் தோற்றமளிக்கிறது. "தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துதுளதாம்" என்றதன் மூலம் ஆணவ மலங் காரணமாகவே ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றுவதென்ற கருத்து விளக்கமாகிறது. இவ்வாறே இந்நூலின் மற்றுஞ் சூத்திரப் பொருள்களிலும் இந்த ஆணவம் பற்றிய கருத்து நேர்முகமாக அல்லது சார்பு வகையாகச் சம்பந்தப்பட்டிருக்கும் உண்மை அறியத் தகும்.



**2 ஆம் சூத்திரம்:**

இங்கு இரண்டாம் அதிகரண உதாரண வெண்பா "வல்லி மல கன்மம் அன்றுளவாம்" என்று பேசுகின்றது. ஆணவம் அநாதி என்ற கருத்து இங்கே பிரஸ்தாபிக்கப்படுகின்றது.

**3 ஆம் சூத்திரம்:**

இதில் இரண்டாம் அதிகரணம் "எனதுடல் என்றலின்" என்பது இதன்கண் "எனது" என்ற சொல் ஆணவ குணமாய மமகாரம் என்பதை நினைவுறுத்தும் நான்காம் அதிகரணம் "ஒடுக்கமறிதலின்" என்பது இங்கு சொப்பனாவத்தை தொடர்புபடுகிறது. இதற்கு முன்னைய மூன்று அதிகரணங்களும் சாக்கிராவத்தையில் நிகழும் இயல்புபற்றியன. ஐந்தாம் அதிகரணம் சுழுத்தி துரியங்களில் நிகழும் இயல்பு பற்றியது. ஆறாம் அதிகரணம் துரியாதீதத்தில் நிகழும் இயல்பு பற்றியது. சுத்தாவத்தை உணர்த்து முறை பற்றிய அவத்தைகளோடு சம்பந்தப்பட்ட குறிப்புகளும் இங்கே தொடர்புறுகின்றன. (இந்த அவத்தைத் தொடர்புகள் எல்லாம் இங்கே ஆன்ம உண்மை சாதிக்கவே ஏற்பட்டவை) அவத்தைகளின் காரணம் ஆணவமே, "அவத்தை ஓரைந்தும் கழிப்பிலாதுயிருற" என மேற்காட்டிய தணிகைப்புராணச் செய்யுளால் இது விளங்கும்.

**4 ஆம் சூத்திரம்:**

"சகசமலத்துணராது" என நேர்முகமாகவே ஆணவம் இங்கு பேசப்படுகிறது. அன்றியும், உயிர் ஐந்தவத்தை உறுவதற்கு ஆணவம் காரணமாம் என்ற உண்மையும் இதிற் புலனாகின்றது.

**5 ஆம் சூத்திரம்:**

இச்சூத்திரம் பாச இலக்கணம் கூறுவது. பாசங்களைச் செலுத்தும் திரோதான உண்மையும் இங்கே தொடர்புபடுகிறது. இங்கு "அருள்" எனப்பட்டது. திரோதானம். திரோதன — ஆணவத் தொடர்பு அகிலப் பிரசித்தமானது. விழிப்புணர்ப்புறும் இருளென மேற்காட்டிய தணிகைப் புராணச் செய்யுள் இத்தன்மை காட்டும்.

**6 ஆம் சூத்திரம்:**

இது சத்தும் அசத்தும் வரை செய்து உணர்த்துவது. பாசங்கள் பொது இயல்பு பற்றி அசத்தெனப்படும். சிறப்பு இயல்புபற்றி அசத்தாதல் செல்லாது. அத்தன்மை சிவஞானத்தான் மட்டுமே அறியப்படும். "உன்னரிய திருவருளையொழிய மலமுளதென்று உணர்வரிதாம் அதன் உண்மை தெரிவரிதாம் உனக்கே" (சிவப்பிரகாசம் 18) என்றவாறு. ஆணவம் பற்றிய இயல்பும் இங்கே உய்த்துணரக் கிடப்பது.

**7 ஆம் சூத்திரம்:**

இங்கு "இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா" என உயிரின் சிறப்பிலக்கணம் கூறப்படுகின்றது. இரு திறனறிவு — இரு திறனையும் அறியும் அறிவு, இரு திறனாலும் அறியும் அறிவு, இரு திறனின் கண்ணும் அறியும் அறிவு என விதக்கப்படுதல் மூலம் திருவருளால், உயிர்க்கு ஆணவமும் (சுத்த நிலையில்) அறியப்படும் என்ற கருத்து இங்கே புலனாகின்றது.

**8 ஆம் சூத்திரம்:**

இதில் ஆன்மாக்களுக்கு தமது முதல்தானே, குருவுமாய் உணர்த்தும் என்ற உண்மை பேசப்படுகையில் அதற்கு முன்னோடி நிலைமையாகிய மலபரிபாகம் சிந்திக்கப்படும் வகையில் ஆணவமும் தொடர்பு படுகின்றது. ஆணவ சக்திகள் உயிரின் ஞானக் கிரியைகளைத் தடுக்கும் நிலையிலிருந்து விலகும் பக்குவமே, மலபரிபாகமாம். மேலும் இதன் நான்காம் அதிகரணத்து உதாரண வெண்பா "மல கன்மம் வரின் நீங்கானை நீங்கு நினைந்து" என்பதால் வாதனை வயத்தால் வரக்கூடிய மலத்துயரை நீக்குதல் குறிக்கப்படுதலுங் காணலாம்.

**9ஆம் சூத்திரம்:**

இது ஆன்ம சுத்தி பண்ணுமாறு உணர்த்துவது. இது பற்றிய உதாரண வெண்பாக்களில், "உண்மையைத் தைவம் புணர்ந்ததனால் பொய் விட்டுப்போம்" "பண்டனைந்த ஊனத்தைத்



தான் விடுமாறு" என வருவனவற்றில், பொய் — சுட்டுணர்வு, பண்டனைந்த ஊனம் — அனாதியாய்க் கூடிநின்ற பொது வியல்பு எனப்பட்ட இரண்டும் ஆணவ காரியங்கள் ஆதல் தகும்.

**10 ஆம் சூத்திரம்:**

இச்சூத்திரம், "ஏகனாகி இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே" என்கின்றது. இங்கு ஆணவம் நேரடியாகவே மலம் எனப் பெயர்சுட்டி உணர்த்தப்படுகிறது. ஏனைப்பாசங்களுடன் மலமும் இல்லையாய் ஒழியும் என மல நீக்கம் இங்கே பேசப்படுகிறது.

**11 ஆம் சூத்திரம்:**

இறைவன் உயிர்க்குக் கண்டுகாட்டும் உபகாரங்கூறும் இச்சூத்திரத்தின் உதாரண வெண்பா ஒன்றில் "மன்னுமிருளை மதிதுரந்தவாறு அன்பின் மன்னும் அரனே மலந்துரந்து" உதவுமாறு கூறப்படுகின்றது. துரத்தல் — பற்றை நீக்குதல். அடுத்த வெண்பாவில், "மலம் நசித்து உளம் ஈசன் கழல் அணைந்து சேடம் ஆம்" என்ற உண்மையும் அடுத்த வெண்பாவில், மலத்துள் மறைந்து உள்ளம் மற்றுலகை உண்ணும் என பெத்த நிலை சார்பிலும், அதற்கெதிராக, "மலத்து இரித்துச் செல்லும் வரத்து" என முத்தி நிலை சார்பிலும் ஆணவத்தியல் விளக்கப்படுகிறது. உள்ளம் — உயிர். உலகை உண்ணும் — ஐம்புலன்களை விடயிக்கும் "மலத்து இரித்து வரத்துச் செல்லும்" — மலத்தை முதல்வன் அருளாற் பற்றறக் களைந்து வியாபகமாய் அறிவு விளங்கி அவனது சீபாதத்தை அணைந்து சுத்தப்படும்.

அநாதியான மலம் முத்தி நிலையில் உயிரை விட்டு விலகும் என்பது எப்படிப் பொருந்தும்? என்ற பிரசித்தமான ஆசங்கையை, சூரியன் முகில், உவமையில் வைத்து விடுவிக்கும் நயமும் இவ்வெண்பாவிலேயே உணரப்பட இருக்கிறது. இதன் விரிவைப் பின்னர் காண்போம்.

## 12 ஆம் சூத்திரம்:

சீவன்முத்தர் இயல்பு கூறுவது இச்சூத்திரம். இதன்கண் "அம்மலங்கழீஇ அன்பரொடு மரீஇ" என்பது பிரதான அம்சமாம். அம்லங்கழிஇ — மலஅழுக்கை ஞான நீராற் கழுவி. மலங்கழீஇ என்றதனால் சீவன் முத்தருக்கு மலத்தடை நீங்கி அறிவு வியாபரித்தல் குறிக்கப்படுகிறது. முன் 10 ஆஞ் சூத்திரத்திலேயே மல நீக்கம் கூறப்பட்டிருந்தும் பின் இங்குங் கூறியது நீங்கிய மலமே பயிற்சி வயத்தான் மீண்டும் நுழையவரின் அதைக் கழுவும் உபாயமாம்.

இவ்வகையால் சிவஞான போதம் முழுமையிலும் ஆணவக் கருத்துத் தொடர்புற்று நிற்றல் அறியப்படுகிறது. சிவஞான போத்துக்கு நேரொத்த அமைப்பிலுள்ள சிவஞான சித்தியிலும் இங்ஙனமே இவ்வொவ்வோர் பொருட்கூறும் அவ்வச்சூத்திரங்களில் அமைந்திருக்கக் காணலாம். சைவ சித்தாந்தப் பொருள் நிலை ஆராய்வில் ஆணவம் பெற்றிருக்கும் அகண்டத் தன்மை எத்தகையது என்பதை இவ்விபரங்காட்டும்.

### தத்துவப் பிரகாசத்தில்

இனி, சித்தாந்த நுண்பொருட் கூறுகளாகிய உள் பொருள்களைத் தனித்தனி நிறுத்தி அவற்றின் அகப்புற — இயல்புகள் எல்லாம் புலப்படுமாறு ஒவ்வொன்றையும் பப்பத்து அம்சமாக விரித்து விளக்குவது தத்துவப் பிரகாசம் என்னும் சித்தாந்த நூல். அந்நூலில் ஆணவ இயல்பு பின்வருமாறு அமைகின்றது. ஆணவத்திற்கு,

1. உருவம் — அஞ்ஞானம்
2. சொரூபம் — அறியாமை பண்ணல்
3. சுபாவம் — அவத்தைப் படுத்தல்
4. குணம் — அறிந்தவற்றை மீள மறப்பித்தல்
5. விசேடம் — பரிபாக எல்லையில் தன் சக்திமாய்தல்
6. வியாத்தி — மூவகை உயிர்களோடும் கூடியிருத்தல்
7. வியாபகம் — தன்னையும் சிவனையும் உயிர் அறியாமல் உடன் நிற்றல்.
8. நிறம் — கருமை
9. தரிசனம் — இத்தன்மைகள் உளவாக அறிய நிற்றல்
10. சுத்தி — ஆன்மா பராசக்தியுடன் சேரும் அவதாரம்.



### மலபரிபாகம்:

சைவசித்தாந்தத்தில் முற்றுணர் முனிவராகிய சிவஞான சுவாமிகள் இவ் ஆணவத்தினை எல்லாப் பெருங்கேட்டிற்கும் மூலகாரணமாகிய மலம் என வர்ணிப்பர். சர்வஞ்ஞனாகிய இறைவன் இம்மலத்தைச் சார்ந்த உயிர் காலக்கிரமத்தில் அதிலிருந்து விடுபடத்தக்க ஒரு வகையிலே உயிர்க்குத் தனுகரண புவன போகங்களைக் கூட்டி அதை ஆணவப் பிடிப்பிலிருந்து பேதித்து வளர்த்தெடுக்கும் விபரம் மகிச் சுவாரஸ்யமானது.

(i) "காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற...

— தாயுமானவர், சின்மயானந்தகுரு 6

(ii) "கருமருவு குகையனைய காயத்தினடுவுட் ...

— தாயுமானவர், சின்மயானந்தகுரு 7

(iii) "செம்புறுகளிம்பென்ன மூலமல மூழ்கி இருள் சேருமலா் விழி"

— செப்பறை அகிலாண்டேஸ்லரி பதிகம்

என்னும் பாடல்கள் இறைவனுடைய இப்பேருபகாரத் தன்மையைச் செம்பாகமாக எடுத்து விளக்குதல் காணலாம். இவ்வகையில் உயிரை உகந்த வகையில் வினையூட்டி, இறைவன் வழி நடத்துதல் வகையால் காலகதியில் இவ்வாணவ சக்திகள் மெல்ல மெல்லப் பலனிழந்து வந்து ஒரு எல்லையில் அதனை விட்டு நழுவும் நிலையினவாகும். அவ்வியல்பே மலபரிபாகம் என சைவ சித்தாந்த பரிபாஷையிற் குறிக்கப்படுகின்றது. விடியா இரவு விடிந்தது போலாகும் இந்த நிலை. ஆன்மீக வாழ்க்கைப் போக்கில் ஒரு திருப்பு முனை எனத்தக்கது. இருவினையொப்பைத் தனக்கு முன்னோடியாகவும் சத்தினி பாதத்தை பின்விளைவாகவுங் கொண்டியலும். இம்மலபரிபாகம் கண்டேதான் திருவருள் ஞான குருவாய் வந்து உயிரை ஆட்கொள்ளும் உண்மை குறிப்பிடத்

தக்கதாகும். கால அடைவில் மலசக்திகள் எத்தனைக் கெத்தனை விலகிக் கொள்கின்றனவோ அத்தனைக்கத்தனை உயிருடனாயுள்ள திரோதான சக்தி திருவருட்சக்தியாய் வியாபிக்கும். இந்நிலை சத்தி நிபாதம் எனப்படும்.

## மலநீக்கம்:

உயிர்க்கு மலபரிபாகம் நிகழுஞ் செவ்வியை இடமாகக் கொண்டு அவ்வுயிரினுள் இருந்து அதனை இயக்குவதாகிய இறைவன் திருவருளே யாதானுமோர் குருமூர்த்தி வேடத்தில் ஆவேசித்து வந்து அவ்வுயிர்க்குத் தீக்ஷை புரிந்தருளும். தீ — என்பது கொடுத்தல்; க்ஷை – என்பது கெடுத்தல். அதுவரை அஞ்ஞான சம்பந்தியாய் இருந்த உயிருக்கு மெய்ஞ்ஞானத்தைக் கொடுக்கும் ஆற்றால் அதுவரை அதற்குத் தடையாய் இருந்த மலத்தையும் மற்ற பந்தபாசங்களையும் கெடுத்தலே தீக்ஷையாகும். சிவஞானபோதத்திலும் சிவஞானசித்தியாரிலும் எட்டாஞ் சூத்திரப்பொருள் இந்தத் தீட்சை உபகாரமேயாகும். அடுத்து வரும் ஒன்பதாஞ் சூத்திரம் ஞானப்படியேற்ற நிலைகளாகிய தசகாரிய நிலைகளில் ஆன்மசுத்தி எனப்படும் ஞான திரோதகமாகிய இந்த ஆணவப்பிடிப்பு அதி ஆழமும் அழுத்தமும் மிக்கதொன்றாதலால் அதன் நீக்கம் எடுத்த எடுப்பில் முற்ற முடிய ஏற்பட்டுவிடாது. ஆன்மசுத்தி நிலையுற்ற உயிர் அந்நிலையைத் தொடர்ந்து அந்நிலையிற் கிடைக்கும் சிவதரிசனத்தை ஆதாயப்படுத்திக் கொண்டு அதன் வாயிலாகச் சிவபொருளோடு ஏகனாகி இறைபணி நிற்க மலத்தின் தாக்கம் பெருமளவில் அற்றொழியும். "ஏகனாகி இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினையின்றே" — என்கின்றது சிவஞானபோதம். இப்பத்தாஞ் சூத்திரப்பொருள் பாச நீக்கம் என்றல் பிரசித்தம். பாசநீக்கம் பெற்ற வாய்ப்பினாலே இறைவன் தனக்குள்ளாயிருந்து தனக்கு கண்டு காட்டும் நிலையை உணர்கின்ற உயிர் அவ்விறைவன்பால் அயரா அன்பு செய்து அவனடிக்கீழ் ஒன்றும். இந்நிலை சிவப்பேறாம். பதினோராஞ் சூத்திரப்பொருள் சிவப்பேறு. இச்சிவப்பேற்று நிலையிலும் உயிர் தன் முன்னைய உடற் சூழ்நிலையிலேயே அவ்வுடற்குரிய பிராரத்த எல்லை கழியும் வரை இருக்கவேண்டுதலின் விட்ட ஆணவம் வாசனை மாத்திரையால் மீளவுந் தொட்டுக் கொள்ளவும் கூடும் என்ற முன்னெச்சரிக்கையோடு நோய் நீங்கிய அந்திய நாளையில் நோயாளி போன நோய் மீளவும் பற்றாமை வேண்டிப் பத்திய பாகங்களில் மிக விழிப்பாயிருத்தல் போல தன் கூட்ட நாட்டங்களிலும் சகவாசங்களிலும் மிக விழிப்பாயிருந்து தனக்கு விருத்தியாகும் ஞான நீரினாலே வாசனா மலச் சார்பாக ஏதும் இருக்கக்கூடுமாயின் அதனைக் கழுவிக்கொள்ளும் என்ற பொருள் நிலை பன்னிரண்டாஞ் சூத்திரத்தால் உணர்த்தப்படும். மலநீக்கத்தின் முற்ற முடிந்த நிலை இதுவாகும்.



பதினோராஞ் சூத்திரத்திற் கண்டாங்கு 'அயரா அன்பின் அரன் கழல் செய்கையில்' ஆணவ சக்திகள் உயிரின் தொடர்பிலிருந்து நீங்கியே விட்டன என்பதே சித்தாந்த நூல்களின் ஏகோபித்த முடிவாகும். உயிரை மும்மலம் பற்றியிருத்தற்கு அரிசியை முளை தவிடு உமிகள் பற்றி இருக்குமாற்றைச் சித்தாந்த நூல்கள் உதாரணமாகக் காட்டுதல் ஒன்றே இவ்வுண்மைக்கு நிதர்சனமாகற் பாலது. நெல்லை அவித்து பாகம் பண்ணிக் குற்றுமளவில் உமி அதை விட்டு விலகியே போய்விடுகின்றது. அதுபோல உயிரின் ஆணவமல சக்திகளும் படிப்படியாக வலியிழந்து விலகும் பக்குவமுற்ற தசையில் திருவருளால் முற்ற விலகியே போகும்.

## மெய்கண்டார் உவமை நலம்:

இங்ஙனம் மலம் நீங்கும் உண்மையின் சுயரூபம் முழுமையும் புலப்படுமாறு மெய்கண்டார் தம் சிவஞானபோதத்துப் பதினோராஞ் சூத்திரத்து உதாரண வெண்பா ஒன்றில் பெய்துரைக்கும் உவமைநலம் பொருள் உண்மையைத் தெளித்துக் காட்டுவதாதலோடு உற்றுணர்ந்து சுவைத்தற்கும் அரியதாகும்.

"பொன்வாள்முன் கொன்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாற் றன்மைபோல் – முன்வான்
மலத்துள் மறைந்து (உ)ள்ளம் மற்றுலகை உண்ணும்
மலத்தி (து+இ) ரித்துச் செல்லும் வரத்து"

— சிவஞா 11ம் சூத் 2ம் அதிகரணம்

வாள் — ஒளி, பொன் வாள் — சூரியன், கொண்மூ — மேகம் உள்ளம் — ஆன்மா, உலகை — ஐம்புல விடயங்களை, உண்ணும் — அநுபவிக்கும் மலத்துஇரித்து — மலத்தைப் பற்றறக் களைந்து, வரத்துச் செல்லும் வியாபகமாய் அறிவு விளங்கி அவனது சீ பாதத்தை அணைந்து சுத்தப்படும் வரத்து வரமாகிய திருவடிக்கு. வரம் — வரமாகிய திருவடி சீபாதம்.

இச்செய்யுளில், பொன்வாள் முன்கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத் தன்வானே எங்குமாந்தன்மை உபமானம். இதில் மூன்று பொருட் பகுதிகள் உள. மூன்றில் ஒவ்வொன்றும் ஆன்மாவின் மூவகை அவத்தை நிலையில் ஒவ்வோர் அவத்தை நிலைக்கு உவமையாம்.

| உபமானம் | உபமேயம் |
|---|---|
| 1. பொன்வாள் முன் கொண் மூவிற் புக்கொடுங்கல் | ஆன்மா அநாதியாயே ஆணவ மலத்தில் மறைந்திருத்தல் |
| 2. போய் அகலல் | கலை முதலிய தத்துவங்களின் உபகாரத்தால் ஆணவ இருள் சிறிது விலகியிருத்தல் |
| 3. தன்வானே எங்குமாந் தன்மை | உயிர் ஆணவ மறைப்பு முற்ற நீங்கித் தன் பிரகாசமாதல். |

இவ் உவமைகளில் (1) ஆன்மாவின் கேவலாவத்தை நிலைக்கும் (2) அதன் சகலாவத்தை நிலைக்கும் (3) அதன் சுத்த அவத்தை நிலைக்கும் உவமையாம். முகிலால் முற்ற மறைபட்டு முகில் வடிவினுள் தன் வடிவு தோன்றாதிருந்த சூரியன் ஒரு சிறு காற்று அசைவினாலே முகில் சற்று விலக கொஞ்சம் ஒளி தோற்றக் கூடியதாகிறது. அதுபோல, கேவலத்தில் ஆணவ வடிவில் தன் வடிவு புலப்படாதிருந்த ஆன்மா கலை முதலிய தத்துவத்தின் சிறு உபகாரத்தாலே சிறிது தன் அறிவு தொழில் விளங்கும் நிலை எய்திற்று. இங்கு, சிறு காற்றசைவு, கலையாதி தத்துவங்களுக்கு உவமை. அங்ஙனம் சிறிதே ஒளி விடும் நிலையில் இருந்த சூரியன் பெருங் காற்று எழுந்து அசைப்ப முகில் மறைப்பு முழுவதும் அடிபட்டு ஒதுங்குதலால் தன் பிரகாசம் குறைவின்றித் திகழ நிற்கின்றது. அதுபோல, தன் அறிவு தொழில்கள் சிறிதே விளங்கும் நிலையிலிருந்த ஆன்மா, கலையாதிகளின் அற்ப விளக்கம் போலாது, பெரும் அண்டாகார விளக்கமாகிய சத்திநிபாத (பராசத்தி) நன்மையால் தன் பிரகாசம் முழுமையுறத் திகழ்கின்றது. முகில் பெருங் காற்றால் அடிபடுகையில் சூரியனை மறைக்கும் தன்மையில் நின்று விலகியதே தவிர முகில் இல்லாமற் போய் விடவில்லை. அதுபோல சத்திநிபாதத்தால் ஆணவசத்தி, சம்பந்தப்பட்ட அவ்வுயிரை மறைத்தலில் இருந்து விலகினதே தவிர ஆணவம் இல்லாமற் போய் விடவில்லை. சூரிய பிம்பத்தை மறைக்கும் தன்மையிலிருந்து அகன்ற முகில் சூரிய பிம்ப எல்லைக்கு அப்பால் இருந்து கொண்டே இருக்கிறது. அதுபோலச் சம்பந்தப்பட்ட உயிரை மறைக்குந் தன்மையிலிருந்து விலக்கப்பட்ட ஆணவம், அவ்வுயிர் அல்லாத மற்றை உயிர்கள் சார்பில் இருந்து கொண்டே இருக்கிறது. அதன் நித்தியங் கெடவே இல்லை.

## ஆசங்கையொன்று

இந்நிலையில் பலத்த ஆசங்கையொன்றுக்கு இடமுண்டு. ஆணவசத்தி கெட்டது ஆணவம் இருக்கிறதெனில் ஆணவம் வேறு அதன் சக்தி வேறோ என்பது ஆசங்கை. இங்கு சக்தி என்றது அதன் செயற் பகுதியையே என அறிதல் வேண்டும். செயல் காரியம் ஆணவம் காரணம். காரியத்துக்கு அழிவு நிகழலாம். காரணத்துக்கு அது பொருந்தாது. அந்நியமப்படி சம்பந்தப்பட்ட உயிரை மறைத்த ஆணவ சக்தியாகிய காரியம் அழிந்தது. காரணமாய ஆணவம் அழிந்திலது எனக் கொள்வதில் தவறில்லை. இந்நிலைமை குறித்தன்றே உமாபதி சிவாசாரியார் ஆணவ இலக்கணம் வகுத்துரைக்கும் போதே "ஏகமாய்" என்றும் "தங்கால எல்லைகளின் நீங்கும் எண்ணரிய சக்தியதாய்" என்றும் பகுத்தோதி வைத்துள்ளார். நாம் இங்கு சற்று முன்பாக அவதானித்த தத்துவப்பிரகாசப் பாடலிலும் ஆணவத்தின் பக்தி இயல்புகளில் பரிபாக எல்லையில் தன் சக்தி மாய்தல் அதன் விசேடம் என்ற

இயல்பாகக் குறிக்கப்பட்டிருத்தல் கண்டோம். மறப்பித்தல், மறைத்தல் என்பன எங்ஙனம் அதன் குணமாகுமோ அங்ஙனம் "தன்சக்தி மாய்தல்" அதன் விசேடம் எனப்பட்டுள்ளது.

ஆணவம் ஒன்று. அது நித்தியம். அதன் சக்திகள் பல. ஒன்றாகிய ஆணவம் பலவாயுள்ள உயிர்களை மறைப்பதாய் இருக்கையில் அதற்குச் சக்திகள் பல என்பதை மறுத்தல் இயலாது. ஆனால் சக்திகளும் ஆணவம் போல நித்தியமல்ல. அவை அநித்தியம். நித்தியம் அழியாது. சக்தி அழியும். எனில் இத்தொடர்பில் மற்றோர் ஆசங்கையும் எழுதல் இயல்பேயாம். தன் சக்திகளில் ஒரோவொன்று ஒரோவோர் காலத்தில் அழிந்து கொண்டிருக்க முடிவில் ஆணவம் முற்றாகச் சக்தி கெட்டதாய்ப் போய்விடுமே என்பது ஆசங்கை. இந்த ஆசங்கை யதார்த்தமானதாகும் எனில் இது சம்பந்தமாக பின்வரும் இரு கேள்விகளுக்கு நாம் விடை கூறியாக வேண்டும். ஆணவ சக்திகள் எல்லாமாக மொத்தம் எத்தனை? ஆன்மாக்கள் எல்லாமாக மொத்தம் எத்தனை? இவற்றிற்கு விடையிருப்பின் மட்டுமே அந்த ஆசங்கை அர்த்தமுள்ளதாகும்.

குறிக்கப்பட்ட இவ்விரண்டும் அநேகம் அநந்தம் என்ற பெயர் நிலைச் சுட்டுக்குரியவை என்பது சர்வ சைவ சித்தாந்த சாத்திர சம்மதமாயிருக்கையில் இவற்றுக்குரிய எண்ணிக்கை பற்றி சிந்திப்பது நிரர்த்தமேயாம். அவ்வகையில் மேற்குறித்த ஆசங்கையும் நிரர்த்தகமாகும். ஆணவமே அநாதி நித்தியம். அதற்கும் உயிருக்கும் உளதாந் தொடர்பு அநாதியேயன்றி நித்தியமன்று. அநாதியாயுள்ளது ஒவொன்றும் நித்தியமாதல் ஒரு தலையான் வேண்டப்படும் என்ற இலக்கணம் திரவியத்துக்குரியது. ஆணவ உயிர்த்தொடர்பு திரவியமன்று. அது காரியம். காரியத்துக்குக் கேடு நிகழ்தலில் ஆசங்கைக்கு இடமில்லை என்பதே சித்தாந்த சாத்திர கர்த்தாக்களின் உள்ளக்கிடை என்பது தெரிகிறது.

இவ்வுண்மை அவர்கள் காட்சியில் கண்ட விஷயம்; "இது திருவருள் உபகார நீதி" என்று உணர்ந்த விஷயம்.



"சேணார் இருள் வடிவஞ் செங்கதிரோன் பால்நிற்கக்
காணா தொழியுங் கணக்கே போல் – ஆணவத்தின்
ஆதி குறையாமல் என்பால் அணுகாமல்
நீதி நிறுத்தும் நிலை போற்றி."

என்னும் போற்றிப் ப:றொடைப் பகுதி குறிப்பிடத்தக்கது. "முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ" என்றவாறு சுத்தநிலையில் திருவருள் பராசக்தியாய் உயிரிற் பிரகாசிக்க ஏன்று கொண்டமையால் இது நடக்கக் கூடியதே என்பதைத்தான் இவ்வடிகள் நினைவுறுத்துகின்றன. செங்கதிரோன் பால் நிற்க இருள்வடிவம் காணாதொழிதல் என்ற உவமை இதனை விளக்குதற்கே வந்துள்ளது. பால்நிற்க — பக்கத்தில் நிற்க, வெளிப்படையாய் இருக்க.

## முத்தி நிலையில் ஆணவம்

மேற் போந்தவற்றால் முத்தியில் ஆணவம் இல்லையாயிற்று (முத்தியடைந்த உயிர் விஷயத்தில்) என்ற முடிவே தோன்றுகின்றது. அது அங்ஙனமாக உண்மை விளக்கம் என்ற சித்தாந்த நூலில் 51 ஆம் வெண்பா முத்தியினில் மூன்று முதலும் மொழியக் கேள் எனத் தொடங்கி,

1. சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு
2. இன்பங்கொடுத்தல் இறை
3. இத்தை விளைவித்தல் மலம்

அன்புடனே கண்டு கொள் அப்பா" என முடிகின்றது.

இவ்வெண்பாப் பொருள் சித்தாந்த அறிஞர்களை வெகுதூரஞ் சிந்திக்க வைக்கின்றது. முதலாம் இரண்டாம் பகுதிகள் பற்றி யாருக்கும் ஆட்சேபமில்லை. ஆனால் முன்றாம் பகுதி கொடுக்கும் பிரச்சினைகள் மிகப்பல.

"முத்தியிலே முப்பொருளும் உள்ளன" என்று முதலிற் பொதுவகையால் மொழிந்து பின் ஒவ்வொன்றும் எவ்வெவ்வகையில்

இருக்கின்றன எனக் காட்டுவது இச்செய்யுள். அவ்வொழுங்கில் மலத்தைக் குறிப்பிடும் போது "இத்தை விளைவித்தல்" என்கிறது. இதனை எடுத்த எடுப்பில் நோக்குவார்க்கு முத்தியிலும் ஆணவமோ ஆணவசக்தியோ முத்தி பெறும் உயிரை விட்டு விலகவில்லை என்ற விளக்கம் பொள்ளெனப் புலப்பட்டு விடுவதாகத் தெரிகின்றது. இவ்வகையில் வெளியான சில அறிஞர் அபிப்பிராயங்களின் பொருந்துமாற்றைப்பற்றிச் சற்றுச் சிந்தித்தல் தகும்.

1. "முத்தியில் ஆணவம் திருந்திய நிலையில் உள்ளது."

— டாக்டர் தேவசேனாபதி

2. ஆணவம் குறைவது மிகுவது திருந்துவது உபசாரமே.

— திரு. நல். முருகேசுமுதலியார்

3. ஆணவம் எவ்விடத்தும் தொழிலாற்றிக் கொண்டே இருக்கும். நித்தியப் பொருளுக்கு என்றும் அதன் கூறுகள் ஒரு படித்தாயேயிருக்கும். அதனால் முத்தியிலும் ஆணவம் உண்டு. ஆனால் தொழிற்படுவதில்லை.

— திரு. பழ. இரத்தினம் செட்டியார்

1975 ஆம் ஆண்டு அக்டோபர் மாசமும் அதற்கு முன் பின்னாகவும் வெளிவந்த சித்தாந்தம் பத்திரிகையில் "முத்தி நிலையில் ஆணவம்" என்ற பொருள் பற்றி ஒரு கருத்துப் பரிமாறல் இடம்பெற்றிருந்தது. அதன்கண் அவதானிக்கக்கிடந்த கருத்துக்களே மேற்காட்டியவையாம். இத்தை விளைவித்தல் மலம் என்ற உண்மை விளக்கத் தொடரின் பருமட்ட மான விளக்கமளவில் வைத்து முத்தி நிலையிலும் சம்பந்தப்பட்ட உயிரிடத்தில் ஆணவம் விலகாமலே இருக்கிறது எனக் காட்டுதலே குறித்த மூவருக்கும் பொது அபிப்பிராயமென எண்ணக் கிடக்கின்றது. இவ் அபிப்பிராயம் இதற்கு முன் இக்கட்டுரையில் நாங்கள் கவனித்த சித்தாந்த சாஸ்திர அபிப்பிராயங்களுக்கு மாறுபடாமல் இருப்பதானால் மட்டுமே ஏற்புடையதாகும்.



குறித்த அறிஞர்கள் அறிவியல் ஆராய்ச்சி ரீதியில் தத்தம் அபிப்பிராயத்துக்கான விளக்கங்களும் உதாரணங்களும் தந்துள்ளார்கள். டாக்டர் அவர்கள், (டாக்டர் தேவசேனாபதி) ஆணவம் திருந்திய நிலையில் இருப்பது என்பது 'திரோதான சக்தி சிற்சக்தியாய் மாறியது போல்' என உபமான விளக்கங் காட்டுகிறார்கள். திரோதான சக்தி சிற்சக்தியாய் மாறுதலுக்கும் எடுத்துக் கொண்ட உபமேயப் பொருட்குமிடையில் வேறுபாடுண்டு. சத்தி சித்துப் பொருளாதலால் அது தன்னிஷ்டமாக மாற்றமடைதலில் ஆசங்கை கொள்ள இடமில்லை. ஆணவமோ சடம். அது தன் நிலை மாறி மற்றொன்றாம் என்றற்கு இயைபில்லை. அது தானே மாறிற்றன்று தன்னை இயக்கும் திருவருளால் அங்ஙனம் ஆயிற்றெனில், அதற்குச் சாஸ்திர சம்மதமில்லை. அருள் மலத்தைத் துரந்தது என்று காட்டும் சாத்திர அபிப்பிராயங்கள் அன்றி அருள் மலத்தை மாற்றியது என்ற அபிப்பராயம் எங்கும் காணப்பட்டதில்லை.

1. 'மன்னும் அருளே மலந் துரந்து'

— சிவஞானபோதம் 11.2

2 'விண்டகலும் மலங்களெலாம்'

— சித்தியார் 9 7 (3ம் அதி)

3. 'வரவர வந்திடுவன் பின் மலமான தறுமே'

— சித்தியார் 9—10 (3ஆம் அதி)

4. 'எல்லா மலங்களும் பின் காயமொடு மாயுமன்றே'

— சித்தியார் 10.6 (2ஆம் அதி)

5. 'தாணுவின்தன் கழலணையத் தவிரும் மலம்'

— சித்தியார் 11.5 (ஆரம்பம்)

6. 'அடியிற் பொருந்த மலம் போமே'

— சித்தியார் 11.5

7. 'தங்கால எல்லைகளின் மீளும் எண்ணரிய சத்தியதாய்'

— சிவப்பிரகாசம் 20

8. 'அழிந்திடும் சத்தி நித்தம் அழிந்திடா'

— சிவப்பிரகாசம் 88

9. 'மூல நிறைமிருள் இரிய அடங்கி'

— சிவப்பிரகாசம் 93

இவ்வெல்லாக் கூற்றுகளும் மலமாற்றத்தையல்ல நீக்கத்தையே ஒரே குரலாக எடுத்திசைக்கின்றன.

மேலும் டாக்டர் அவர்கள் திருந்திய நிலையில் ஆணவம் உண்மைக்கு மெய்யடியார்கள் கூற்றிலும் அவர்கள் ஒழுகலாற்றிலும் இருந்து உதாரணந் தருகின்றார்கள்.

'இறுமாந் திருப்பன் கொலோ' — திருநாவுக்கரசர்

'வாக்கியலால் வார்கழல் வந்துற்று இறுமாந்திருந்தேன்'
— மாணிக்கவாசகர்

மதுரைக்குச் செல்வதில் அப்பரும் சம்பந்தரும் நான் முந்தி நீ முந்தி என நின்றமை — பெரியபுராண வரலாறு

இவற்றின் மூலம், மெஞ்ஞான நிலையிலும் அவர்களிடத்தில் இவை வெளிப்பட்டது திருந்திய ஆணவ முனைப்பினால் என நிறுவ முற்படுகின்றார்கள். நால்வர் பெருமக்கள் நிலை பந்த நிலை என்பார் யாருமிலர். அதற்கெதிர் யான் எனது முற்றக்கெட்ட சுத்தநிலையே அவர் நிலையாதல் பலருமொப்பும் உண்மையாகும். "ஊனமிலா ஞானந்தான் உதிப்பின் அல்லால் ஒருவருக்கும் யான் எனது இங்கு ஒழியாதன்றே" என்பது சித்தியார் கூற்று. அவர் செயல் திருந்திய ஆணவத்தால் (Proper pride) நிகழ்ந்ததெனில் அவர்களுக்கு நான், எனது அற்றதில்லை, அவை அறாமையின் ஞானம் உதித்ததில்லை என்ற விபரீத முடிவை ஏற்க வேண்டி வரும். அல்லாமலும் அவனருளாலல்லது எதனையுஞ் செய்யாராதல் என்ற ஞானிகள் இலக்கணமும் வழுவுறும். அன்றியும் இவை போல்வன அவர்களின் திருந்திய ஆணவ முனைப்பின் விளைவதென்பதாயின்,

"என்னடியான் உயிரை வெளவேல் என்றடற் கூற்றுதைத்த பொன்னடியே பரவிநாளும்" — என்ற சம்பந்தர் தேவாரத்தில் குறிக்கப்படும் சிவன் செயலும் அவர்தம் (Proper pride)[1] இன் விளைவென்றே கொள்ளவரும். இவற்றை அவ்வாறு கொள்ளும் சமயிகளும் இருக்கலாம். அவர்கள் பிறர் பிறர் சைவசித்தாந்த சமயிகள் அல்ல என்பதை அறிதல் மேல். உண்மையால் நோக்குவார்க்கு (pride) முனைப்பு என்ற சொற் சுட்டுக்குரியது எதுவாயினும் அது proper திருந்தியது ஆயிருப்பினுஞ் சரி (false) திருந்தாதது ஆயிருப்பினும் சரி அது பந்த நிலைக்குட்பட்டதே என்பது விளங்கவரும். திருவள்ளுவர் 'மாண்பிறவாமானம்' என ஒன்றை உய்த்துணர வைக்கின்றார். அது இத் திருந்திய முனைப்பு (Proper pride) என்பதையே சுட்டும் என்றல் சாலும். ஆனால், அது சுத்த நிலைக்கல்ல.



ஏகனாகி இறைபணி நிற்கும் சுத்த நிலையாளர்க்கு பிறரால் நிகழ்வன, அவர்களால் நிகழ்வனவற்றில் எதுவும் அவர் முனைப்பால் ஆவதன்று. அவ் ஒவ்வொன்றும் திருவருளால் ஆவதே. அவர் நினைவு, சொல், செயல் எதுவும் முனைப்பு முத்திரை பெறுதல் சாலாது. முனைப்பு என்ற சொல்லே அங்கு அநுமதிக்கப் படுதற்கு இடனின்றாம். அவர்களது அத்தகு நிலைகளைக் குறிக்க நமக்குச் சொல் வேண்டும் எனில் திருவருள் வீறு அல்லது திருவருள் விலாசம் என்றவாறு சொல்லுதல் அமையும்..

'வேண்டும் பரிசொன்று உண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே' — திருவாசகம்

'எனதுரை தனதுரையாக ஏறுகந்தேறிய நிமலன்'
— சம்பந்தர் தேவாரம்

இத்திருமுறை வாசகங்களின் பயனாக நாம் உணரக் கிடப்பது இதுவேயாம்.

இனி, ஆணவம் குறைவது மிகுவது திருந்துவது உபசாரமே என்கின்றது மேல் எடுத்துக்கொண்ட இரண்டாமவர் கருத்து. உயிர், மலம், பந்தம், மோக்ஷம் என்பன சைவ சித்தாந்தத்தில்

---

1. "இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா உவகையும் ஏதம் இறைக்கு" — அரசியல் குற்றங்கடிதல் 3

இதன் உரைக் குறிப்பில் மாட்சியான மானத்தின் நீக்குதற்கு மாண்பிறந்த மானமென்றார் எனப்பரிமேலழகர் குறிப்பிடுவார். **இம்மாட்சியான மானம்** என்பது proper pride என்பதற்குச் சமமாகலாம். அது உலகியல் நோக்கிக் கூறப்பட்டது. இங்கு பெயராட்சி அளவுக்கு அது தழுவப்பட்டது என்க.

உண்மை. சித்தாந்த ரீதியாக உரைக்கும் அவற்றது இயல்புகளும் உண்மை. இவற்றின் விஷயத்தில் உபசாரப் பிரயோகம் சென்மதியாமோ என்பது சிந்திக்கத்தக்கதாம். திருந்துவது என்ற நிலை ஆணவ விஷயத்தில் இல்லாதது ஒன்று. இல்லாதது என்ற கருத்தில் உலகர் உபசாரம் என்ற சொல்லை உபயோகிப்பது உண்டேனும் நூல் வழக்கில் அது அக்கருத்தில் வழங்குமாறில்லை. காரணம், காரியம்; குணம் குணி; பண்பு, புலன்; பொருள், வினைகள்; என்பவற்றில் ஒன்றை மற்றொன்றில் ஏற்றியுரைக்கும் ஏற்றுரையே நூல் வழக்கில் உபசாரம் எனப்படுவது. இங்கு திருந்துவது என்பது குறித்த வகைகளில் ஒன்றினும் அடங்குவதாகக் காணவில்லை. ஏலவே கலாதி தத்துவங்களின் சேர்க்கையால் ஆணவம் ஒரு சிறிது குறைதலும் பின் சத்திநிபாதத்தாற் பெருமளவு குறைதலும், பின் ஏகனாகி நிற்றலால் முற்றக் குறைதலும் பொன் வாள் முன் கொண் மூவில் — என்ற சிவஞானபோத உதாரண வெண்பாவில் ஏலவே கண்டோம். ஆதலின் இவை உண்மைகள் அன்றி உபசாரங்கள் ஆகா. அப்படியன்று ஆணவசக்தி குறைவதையே இங்கு ஆணவம் குறைவது என்று எடுத்துக் கொண்டமையே உபசாரமாவது எனில் அ:.தொக்கும். ஆனால் திருந்துவது என்பதனோடு ஒரு தொடராக வந்தமையின் அக்கருத்து நிலையும் சந்தேகிக்கப்பட வேண்டியாயிற்று.

இனி மேற்குறித்தவற்றில் மூன்றாமவர் கருத்து முத்தியிலும் ஆணவத்தின் கூறுகள் குறைவதில்லை. முத்தியிலும் ஆணவம் உண்டு ஆனால் தொழிற்படுவதில்லை எனப்பேசுகின்றது. இங்கு கூறுகள் என்பது எதைக் குறிக்கும் என்பது முதல் விசாரமாகும். உடற்கூறு பொருட்கூறு என்பவற்றிற் போல பங்கு என்ற பொருளில் அச்சொல் உபயோகிக்கப்பட்டதெனில் அதில் தவறில்லை. ஆணவம் எந்நிலையிலும் தன் உருவம் குறையாதென்பதே நம்மவர் துணிபுமாம். அன்றி கூறு என்பதனால் ஆணவ சக்திகள் குறிக்கப்படுமெனில் அது பொருந்தாததாய் முடியும். சக்தி குறைதற்குச் சாஸ்திர சம்மதம் மிகவும் இருத்தலை முன்பே கண்டோம். மேலும் ஆணவம் ஏகமாயிருந்ததினாலும் அதன் மறைப்புக்கு விஷயமாகும் ஆன்மாக்கள் அநேகம் ஆதலினாலும்



ஒன்று அனைத்துடனும் தனித்தனி நின்று மறைக்குமெனல் பொருந்தாது. எனவே தனிப்பட்ட உயிர்கள் ஒவ்வொன்றையும் மறைப்பன அதன் வெவ்வேறு சக்திகளேயாதல் ஒரு தலை.

> கதிதருங் காழிமன் காட்டுமப் பாசங்கள் மூன்றவைதாம்
> பொதிதரு மாணவம் போகஞ்செய் கன்மமு மாயையுமாம்
> முதியது தானொன்று முன்பினிலாதது சேதனன் கண்
> அதிகம் மறைப்பன ஆயிரகோடி விருத்திகளே
>
> – தத்துவவிளக்கம் 19

(இந்நிலையில் சக்திகளைச் சுட்டாது ஆணவக் குறைவு பேசுதற்கு அவகாசமுமில்லை ஆதலின் செட்டியார் அவர்கள் கூறுகள் என்றதனால் சக்திகளையே குறித்திருப்பதாகவே கொள்ளவேண்டி இருக்கின்றது)

இவ்வாற்றால் மறைந்த ஆணவ சக்திகள் தொழிற்படாமல் அப்படியே இருந்தாங்கிருப்பன என்று இவர்கள் கொண்டதற்குக் காரணம் கடவுளால் முடியாதவை என்ற பெயரில் வெளிவந்த இவர்கள் நூல் ஒன்றில் ஒரு கட்டுரையில் அறிய வருகின்றது. அதண் கண் அவர்கள்,

'If any part whatever in an individual were to vanish or alter it would no longer be that individual at all'[2] தனிப்பட்ட எந்த ஒரு பொருளிலாயினும் எந்த ஒரு அம்சமாயினும் மறையவோ மாற்றமுறவோ நேரின் அப்பொருள் அதே பொருளாய் நிலையுறுதல் சாலாது — என்ற மேலை நாட்டறிஞர் ஒருவரின் கருத்தை எடுத்துக்காட்டி இதே கருத்தை விபரித்திருக்கிறார்கள். இக்கருத்து சைவ சித்தாந்தத்திற்குப் புதிதன்று. இக்கட்டுரையின் முன்பகுதியில் நாம் அவதானித்த பௌஷ்கராகமக் கருத்துகளுள் இதுவும் இடம் பெற்றிருத்தல் காணலாம். ஆணவ சக்தி உயிரறிவை மறைக்கிறதோ மழுக்குகின்றதோ (அப்பிரகாசமாக்கல்) என்ற ஆசங்கையை விடுவிக்கும் சந்தர்ப்பத்தில்.

---

[2]. William James

அநாதி ரபி சம்பந்த்; ப்ரோக்தோ யதி மலாத்மனோ:
மலாத் கிம் க்ரியதே தத்ர சக்தே ராவரணம் து வா
அப்ரகாசீ க்ருதிர் வாபி தத்ராத் யஸ்து நசோபதே
தஸ்யாச் சாபின்ன ரூபத்வாத் ஆத்மனோபி ப்ரசங்கத
நாப்யப்ர காசி கரணம் விநாசித்வ ப்ரசங்கத
ப்ரகாசஸ்யாப் ரகாசோபி விநாசாத் நாவசிஷ்யதே. 155-157

மலமானது ஆன்ம சிற்சத்தியை மறைக்கின்றதோ அப்பிரகாசஞ் (மழுக்குதல்) செய்கிறதோ? மறைக்கிறதெனில் சிற்சத்தியோட பின்னமாயிருக்கிற ஆன்மாவும் மறைபடும். அப்பிரகாசஞ் செய்யுமெனில் அப்ரகாசத்திற்கு நாசம் வருமாகையால் இரண்டு பக்ஷமும் (கருத்துநிலை) கூடாதென்று கொள்க.

இங்ஙனம் ஆன்ம சிற்சக்தி மழுக்கப்படுமாயின் அதற்கு நாசம் வருமென்று தானே சொன்ன சைவ சாஸ்திரத்திற்கு ஆணவ சக்தி விலக்கப்படுமாயின் ஆணவத்திற்கு நாசம் வருதல் உண்மை என்ற காட்சி இருக்குமாயின் வெளிப்படச் சொல்லியே இருக்கும். அது உண்மையில் இல்லை. அதனால் ஆகமம் சொல்லவில்லை என்பதே துணிபு.

நஸாதிகாரே தமஸி முக்திர் பவதி
அதிகாரோபி 'தச்சக்தே; பரிணாமாத் நிவர்த்ததே

– மிருகேந்திரம் 7.16

மலத்திற்கு அதிகாரமிருக்கும் வரையில் ஒருவனுக்கு முத்தி உண்டாகிறதில்லை. மலம் நீங்குதலே முத்தி எனப்படுகையால் மலாதிகாரமும் மலசக்தி பரிணமித்த பின் தான் நீங்குவதாகும். பரிணமித்தல் (பரிபாகமுறுதல்)

இவ்வாறு சைவ சாஸ்திரமே சொல்வதிலிருந்து நாம் உய்த்துணர வேண்டியதொன்றுண்டு. குறித்த பொதுநிலைக் கருத்திற்கு உட்படாமல் தன் சக்தியின் ஒரோவோர் கூறு ஒரேவோர்கால் விலகியும் தான் மாயாதிருக்கும் நிலை ஆணவத்துக்கு உண்டென்பது ஆகமக் காட்சி கண்ட உண்மை



என்பதே அங்ஙனம் உய்த்துணரக் கிடப்பதாம். ஆதலால், முத்தி நிலையில் ஆணவசக்தி, உயிரைவிட்டு நீங்கியே விடும் என்பதே முடிநிலைப் பொருளாகின்றது. இன்னும் இதுபற்றி நிகழக்கூடிய வாதப் பிரதிவாதங்கள் வரம்பின்றி நீளக்கூடியன. அதற்கு அவகாசமின்மையின் இம்மட்டில் ஒழிகின்றோம். இம் முடிபுக்கு நாம் முற்கூறிய சாஸ்திர ஆதாரங்கள் அத்தனையும் ஒத்தியலுமாறு காண்க.

## உண்மை விளக்கப் பொருளுண்மை

இங்ஙனேல் 'இத்தை விளைவித்தல் மலம்' என்ற உண்மை விளக்கக் கூற்றுக்குத் தாற்பரியம் யாது?

இதை விளங்க முயலுமுன் நாம் ஒரு கருத்தை மனத்திருத்திக் கொள்ளவேண்டியது ஆவசியகமாகும். நமது சைவ சித்தாந்த சாத்திரங்கள் தமிழ் செய்யுள் நூல்கள் ஆகமக் கருத்துக்கள் அவற்றிலுள்ளனவே தவிர அவை தமிழியல் நூல்களேயாதற்குத் தடையில்லை. இவற்றின் ஆசிரியர்கள் தாம் கூறுந் தத்துவக் கருத்துக்களை வசன நடையிலேயே கூறிவிடத் தெரியாதவர்களல்ல. அவர்கள் செய்யுள் நடையையே விரும்பி மேற்கொண்டது பற்றி நாம் அறியவேண்டுவ தொன்றுண்டு. தமிழிலுள்ள சாஸ்திர நூல்களுக்குப் பொருள் காண்கையில் செய்யுள் உத்தி முறைகளைத் தழுவியே பொருள் காணவேண்டும் என்பது அவ்வாசிரியர்களின் உள்ளக் கிடையாகும். மெய்கண்டார் வசன வடிவில் தந்த [3]மேற்கோள் ஏது என்பவற்றிற் பலவற்றுக்கும் செய்யுள் உத்தி முறையிலேயே பொருள் தெளிய வேண்டியிருத்தல் இதற்கு நிதர்சனமாகும்.

செய்யுள் உத்திகள், சொல், பொருள், யாப்பு, அணி இலக்கண நுட்பங்களையும், தருக்க விதிகளையும் தம் உறுப்பாகக் கொண்டவை. குறித்த இப்பகுதிகளிற் பயிற்சியின்றிச் சித்தாந்த சாஸ்திரச் செய்யுட்களை விளங்கிக் கொள்ளுதல் இயலாததாகும்.

இவ்வுண்மைக்கிணங்கப் பொருள் கொள்ள வேண்டிய

சித்தாந்த சாஸ்திரச் செய்யுள் தொடர்களில் **இத்தை விளைவித்தல் மலம்** என்பது மெத்தப் பிரதானமான ஒன்றாகும். இத்தை விளைவித்தல் மலம் என்புழி எத்தை என்றறியும் அவாய் நிலையுள்ளது. முன் சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு என்றும் இன்பங் கொடுத்தல் இறை என்றும் சொல்லப்பட்டாயிற்று. சுட்டுப் பெயரொன்று முன் வந்த ஒன்றையே சுட்ட வேண்டும். அந்நியமத்தில் இங்கு இதுவென்ற சுட்டுக்குப் பொருளாயிருப்பது எதுவென்று பார்க்கில் அது அணுவும் (ஆன்மாவும்) ஆகாது இறையும் ஆகாது. அவை ஏலவே தொழினிலை பெற்றுக் கொண்டன.

இனி இச்சுட்டு இன்பத்தைக் குறிக்குமோ எனின் அதுவும் பொருந்தாது. இன்பத்தை விளைவிப்பது மலமன்று: இன்பம் விளைவிக்கப்படுவதொன்றுமன்று. உயிரைப் பந்தித்த மலம் திருவருளால் விலக இறைவன் உபகாரத்தால் விளைவதே இன்பம். எனில் இத்தை என்பதனால் குறிக்கப்பட்டது இன்பவிளைவாகிய இச்சூழ்நிலை என்றே கொள்ளக்கிடக்கிறது.

இனி இச்சூழ்நிலை விளைவுக்கு மலம் எப்படிக் காரணமாகும் என்பது கேள்வி. இக் கேள்விக்குத் தருக்க ரீதியாகவும் இலக்கண ரீதியாகவும் செய்யுட் கற்பனை உத்தி வழியாகவும் பொருள் கொள்ள இடமுண்டு.

பொருள் நிச்சயத்துக்கு உதவும் காரணிகளில் ஒன்று ஏது. அது உண்மை தழுவிய ஏதுவாய் வருதலும், இன்மை தழுவிய ஏதுவாய் அமைதலும் இயல்பு. மழையுண்மை பயிர் விளைவுக்குக் காரணமாதல் போல் மழையின்மை திறந்த வெளியரங்கிற் கூட்டம் நிகழக் காரணமாதலும் உண்மையில் உள்ளனவே. இவ்வகையில் இயல்பாயிருந்த ஆணவத்தினது மறைப்பு இல்லையாதல் அதனால் தடையுண்டிருந்த பேரின்ப விளைவுக்குக் காரணமாகிறது. இந்நிலையில், சம்பந்தப்பட்ட உயிரைச் சார்ந்து அதன் ஞானக் கிரியைகளை மறைக்கும் பாங்கிலிருந்து விலகிக்கொண்ட ஆணவசத்தியானது அதேவேளை அவ்வுயிருக்கு உலகந் தோன்றாவாறு மறைத்து நிற்றலும் கருதிக் கொள்ளற் கிடமுண்டு.



இத்தை விளைவித்தல் மலம் — இப்பேரின்ப அனுபவம் விளைதற்கு மறைமுகமாக ஏதுவாதல் மலத்தின் செயல். உலகத்தை மறைத்துச் சிவத்தை மறையாது நிற்குமாற்றால்.

— வச்சிரவேலு முதலியார் தெளிவுரை

இப்பாடல் இறுதியில் வரும் **அன்புடனே கண்டுகொள் அப்பா** என்ற தொடரும் குறிப்பிடத்தக்கது. சித்தாந்த உண்மை முடிவில் அன்பு வைத்து அந்த அன்புக் கண்ணோட்டத்தில் இதன் தாற்பரியத்தை அதற்கேற்ப உணர்ந்து கொள் அப்பா என்பது இத்தொடரின் பொருளாகும். இவ்வுண்மையைப் பிராமண நூல்களின் கூற்றுக்களில் அன்பு வைத்துக் கண்டு கொள் என்றே குறித்த சித்தாந்த நல்லறிஞராகிய வச்சிரவேலு முதலியாரும் இதற்கு உரைத்திருப்பக் காணலாம். இங்ஙனங் கூறுதலால் இப் பொருளுண்மை அன்புக் கலப்பற்ற வெறும் அறிவுக் கண் கொண்டு காணலுறின் சந்தேக விபரீதங்கட்கிடமாகும் என்பது குறிப்பு. இதற்கு உரை கொள்வார் எவரும் இவ்விறுதியடியை முதலில் உற்று நோக்கியுணர்தல் கடனாகும்.

'கெடுப்பதூஉங் கெட்டார்க்கு' என்ற திருக்குறட்கு உரையுரைக்கும் பரிமேலழகர் கெடுப்பதூஉம் என்ற தொடர்க்கு 'தான் பெய்யாது நின்று கெடுப்பதும்' என உரை வகுத்துள்ளார். இங்கு பெய்யாமை என்ற எதிர்மறை கெடுத்தலுக்கு எங்ஙனங் காரணமாகின்றதோ அங்ஙனமே அங்கும் மறையாமை என்ற எதிர்மறை இன்பவிளைவுக்குக் காரணமாகின்றது. இவ்வகையால் அத்தொடர்க்கு மேற்போந்தவாறு உரை காண்பதற்கு இலக்கிய பரமான சான்றுண்மையும் பெற்றாம்.

இனி செய்யுள்களில் பொருளுண்மை கற்பனை வழியால்

---

**அடிக்குறிப்பு:**

[3]. (இக்காலத்துச் சைவசித்தாந்தக் கல்வியில் ஊக்கங்குன்றி வருவதற்கு இக்குறைபாடே முழுக் காரணமாகின்றது, சித்தாந்த சாஸ்திரச் செய்யுட் பகுதிகளை, வசனங்களைப் பார்ப்பது போலப் பார்த்து விட்டு அர்த்தங்கொள்ளும் வகையால் மரபு வழிப்பட்ட சித்தாந்த முடிபுகளோடு முரண்பட்டுக் கொண்டு அம்முரண்பாட்டை விடுவிக்கப் பிற பிற நூலாதாரங்கள் தேடும் நிலையும் வேறேயுள்ளது.

தோற்றப்படுதலுக்கு ஒரு உதாரணங் காண்போம்.

"பொய் வாய்மை பெருக்கிய புன்சமயப்
பொறியில் சமண் நீசர் புறத்துறையாம்
அவ்வாழ்குழி யின்கண் விழுந்தெழுமா
றறியாது மயங்கி அவம்புரிவேன்
மைவாச நறுங்குழல் மாமலையாள்
மணவாளன் மலர்க்கழல் வந்தடையும்
இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக்
கெதிர் செய் குறை என் கொல் எனத் தொழுவார்"

— திருத்தொண்டர்புராணம் — திருநாவுக்கரசர்

சூலை நோய் தீர்த்து சிவனருட்பேறுற்ற திருநாவுக்கரசர் அப்பேறு தாமுறச் செய்ததாகிய சூலைக்குத் தாம் கைம்மாறென்? எனக் கருதுவதாக இச்செய்யுட் கற்பனை அமைகின்றது. புறநோக்கிற் கற்பனையே ஆனாலுங் காரணங் காரணமே தான். சூலை அவரைப் பீடித்திராவிடில் அவர் சமண வாழ்வை உவர்த்தலும் தமக்கையாரை நினைந்து மீளவும் திருவதிகையிற் சென்று திருப்பதிக மிசைத்தலும் சிவனருட் பேற்றுக்கு ஆளாதலும்

**அடிக்குறிப்பு (தொடர்ச்சி):**

3. ஆகமங்கள் சித்தாந்தமாகும் என்பதோருண்மை. தமிழ்ச்சித்தாந்த சாஸ்திரங்களும் ஆகமப்பொருளையே கூறுவன. அளவை முறைபற்றிச் சித்தாந்த சாஸ்திரப் பொருளை நிச்சயிக்கையிலும் ஆகமப்பொருள் முடிபுக்கு விரோதமாகா வகையில் அளவை இலக்கணத்தைக் கையாள வேண்டும் என்பதே சித்தாந்த ஆசிரியர்களின் திருவுள்ளம். ஏலவே தருக்க நூல்கள் பல இருப்பவும் வடமொழியில் பௌஷ்ராகமும் தமிழில் சிவஞான சித்தியாரும் அளவை இலக்கணத்தைத் தமக்கொரு அம்சமாகக் கொண்டிருத்தல் இதற்கு நிதர்சனமாகின்றது. சிவஞானசுவாமிகள் தமது உரையில் இடமிடங்கள் தோறும் ஆகமப்பொருளுக்கு அமைவான அளவைப் பிரயோக முறையை வற்புறுத்திச் செல்லுதலின் நோக்கமும் அதுவேயாம்.

ஆகமநூற்கல்வி சித்தாந்தக் கல்விக்கு அத்தியாவசிய மாதலும் ஒரு பெரும் பேருண்மையாதல் அறியத்தகும். எனவே பிறநூற் கருத்தொன்று சித்தாந்தக் கருத்துக்கு மாறுபாடாகக் காணுமிடத்து அதற்கேற்ப இதைத்திருத்திக்கொள்ளமுயலல் உண்மையோடுபட்ட முயற்சியன்றால் என்பதுங் காண்க.)



கூடாவாம். அதே போலவே ஆணவம் என ஒன்றில்லாப் பட்சத்தில் உயிர் பிரபஞ்ச வாழ்வில் உவர்ப்படைதலும் மேல்கதி வீடுபேறுகளைக் கருதி முயல்தலும் குருவைத் தலைப்பட்டுத் தீக்ஷையுறுதலும் அதன் தொடர்பான அகமுக விருத்திகள் பெறுதலும் முடிவில் முற்றாக ஆணவம் விலகிச் சிவானந்தப் பேரின்பமுறுதலும் கூடாவாம். அங்கு அப்பர் அருள் பேற்றுக்குச் சூலை காரணம் என்ற அதே பாணியில், இங்கு சிவானந்தப் பேற்றுக்கு ஆணவம் காரணமென்று காட்டப்பட்டிருக்கின்றது. இத்தகைய பொருள் நோக்கு யதார்த்த வாதமாகாதென்பார் உளரேல், அவர் இலக்கணப்பயனறியார் என விடுதலே மேல்.

இனி குறித்த தொடர்க்கு இலக்கண நுட்ப வகையாற் பொருள் கொள்ளுமாறு!

இச்செய்யுள் குறிக்கும் பிரதான பொருள் பேரின்ப நுகர்ச்சி. அது ஒரு வினை. அதற்கு வினைமுதல் ஆன்மா. ஒரு வினைக்கு எட்டுக் காரணங்கள் உளவாகத் தொல்காப்பியமும் நன்னூலுஞ் சாற்றும். அவை செய்பவன், கருவி, நிலம், செயல், காலம் செய்பொருள், இன்னதற்கு இது பயன் எனப் பெயர் பெறும். இவ்வெட்டில் வினைமுதல் ஒன்றே செய்பவன். ஏனைய ஏழும் செய்விப்பன என்ற பிரிவில் அடங்கும். இச்செய்யுட் சார்பில் இன்பங் கொடுப்பதான இறையும் விளைவிப்பதான மலமும் கருவிகள். இறை உபகரிக்கும் முகாந்திரமான கருவியும் ஆணவம் தான். முன்னெல்லாஞ் செய்தவாறு தற்பொழுது இன்பப்பேற்றுக்குத் தடையாகாது விலகிநிற்கும் முகாந்திரத்தாற் கருவியும் ஆம். இங்ஙனம் இலக்கணக் கண் நோக்கில் சித்தாந்தப் பொருண் முடிபுக்கு விரோதமாகாவண்ணம் இச்செய்யுட்குப் பொருள் உரைக்கும் முறையை அறிமுகஞ் செய்தவர், காஞ்சிபுரம் **ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்.**

இவ்வுரை விளக்கச் சார்பாக அவர்கள் கூறும் இலக்கண நுட்பங்களும் இலக்கிய ஆதாரங்களும் இப்பொருள் நிலையை ஆதரிக்கும் ஞானநூற் கருத்துக்களும் பிறவும் அவர்கள் இயற்றிய உண்மை விளக்க உரை என்ற நூலில் 96—106 ஆம் பக்க

இடைவிற் கண்டு தெளியலாம். 1967 இல் புரசைப் பாக்கம் மாணிக்கம் பதிப்பகத்தார் வெளியீடாக வெளிவந்துள்ளது இந்நூல்.

இன்னும், சிவஞானபோதம் 6 ஆம் சூத் 2 ஆம் அதிகரணத்தில் சிவஞான சுவாமிகள் தரும் விளக்கமொன்று மேற்போந்த பொருளமைதியின் விளக்கத்திற்கு இன்றியமையாதாதலை அறிதல் நலமாகும்.

அதுவதுவாய் நின்று அநுபவிக்கும் ஆன்மா ஏனைய வற்றையும் அறிவுழிச் சிவாநுபவ விளைவிற் குறைவுபடும் ஆதலின் ஏனையவற்றை அறிதல் முத்திப் பெரும் பயனுக்கு இடையூறு என்பதும் ஏனையவற்றை அறியாமையே முத்திப் பெரும் பயனுக்குச் சிறந்த காரணம் என்பதும் உணராது, இக்கருத்தே பற்றியன்றே. இன்பங் கொடுத்தல் இறை இத்தை விளைவித்தல் மலம் என்று ஓதியதென்பதும் உணராது ............ என்பது அப்பகுதியாம். ஆணவம் சம்பந்தப்பட்ட உயிரை விட்டு விலகும் அதே வேளை முத்தி அநுபவப்பேற்றிற்குத் தடையாயிருக்கக்கூடிய உலகை மறைத்து நிற்றலால் விளையும் உபகாரத் தன்மையை விளக்குகின்றது இப்பகுதி.

மேலும் ஆன்மா முப்பொருள் உண்மையை உணரும் வாய்ப்புப் பாச அறிவாலும் நிகழாது. பசு அறிவாலும் (பசு ஞானம்) நிகழாது. பதியுடன் ஒற்றித்து நின்றறியும் பதி அறிவால் மட்டுமே நிகழும் என்ற உண்மையைத் தெரிவிக்கவே "அன்புடனே கண்டுகொள்" என இச்செய்யுள் கூறிற்று என்றலும் ஒன்று. இப்பொருளில் அன்பு என்ற சிவத்தைக் குறித்ததாக கொள்ளல் சாலும். அன்பே சிவம் என்னும் நயம் பற்றியது இப்பொருள் கோள் ஆதல் அறிக.

## முடிவுரை:

"தென்னாடுடைய சிவனே போற்றி" என்றார் மாணிக்கவாசகர். சைவசித்தாந்தம் தமிழர் ஆக்கம் என இன்றைய உயர்மட்ட அறிவியலாளர் பலரும் ஏகோபித்துக் கூறிவிட்டார்கள். இதன் விபரம் இந்நூலின் முதலாவது கட்டுரையிற் கண்டுள்ளோம். சைவசித்தாந்த



சாஸ்திரங்கள் தமிழ் மொழியிலேயே வாய்த்துள்ளன. இவை அனைத்தையும் ஒரு கூட்டாகச் சேர்த்து எண்ணுவார்க்கு தமிழ்க் கலாச்சாரப் பின்னணியிலேயே சைவசித்தாந்தக் கலை சோபிப்பது புலனாகும். தொல்காப்பியம், சங்கஇலக்கியம், திருக்குறள், திருமுறைகள் முதலிய அனைத்து நூல்களிலும் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் செறிந்து கிடக்கும் நிலையும் சுவாரஸ்யமானதொன்று. ஆதலால், சைவசித்தாந்த விளக்கம் தமிழ்மொழி விளக்கத்தை இன்றியமையாத தென்பது சொல்லாமே அமையும். இதனால் உயர் தமிழ் இலக்கிய இலக்கண மரபு வழிப்பாடான தமிழ் அறிவு நிலை சைவ சித்தாந்த விளக்கத்துக்கு ஒரு அடிப்படைத் தேவை என்பதை நாம் கருத்திற் கொள்ள வேண்டும். சிவஞான சுவாமிகள் உரைவளம் இதற்கு நிதர்சனமாகின்றது. நமது பாரம்பரியத்தில் அத்தகைய அறிவு நிலை வாய்க்கப் பெற்றவர்களே சைவ சித்தாந்த அறிவில் வியுத்பத்தி உடையவர்களாக விளங்கியிருக்கிறார்கள். இவர்களில் இங்கு நாம் கவனித்த ஞானப்பிரகாச சுவாமிகளும் ஒருவர். அவர்களும் அவர்கள் போல் தமிழ் இலக்கிய இலக்கண மரபின் அடிப்படையில் சைவ சித்தாந்த நூல்களுக்கு விளக்கந்தரும் மெய்யறிஞர்களுமே நமக்கு ஆதர்ஷபுருஷர்கள். அவர்களது உரை மரபு என்றென்றும் பின்பற்றப்பட வேண்டியது. சைவசித்தாந்தம் ஒரு உயிர் மூச்சாக இம்மண்ணில் நிலவுவதற்கு அது மிக மிக இன்றியமையாததாகும். இந்த மரபு தவிர்ந்து நிகழுஞ் சித்தாந்தக் கல்வியும் கட்டுரை கருத்துரை விளக்கங்களும் ஒன்றில் பொய்ப்படும் அல்லது புனை பூணும். இன்றைய சூழ்நிலையில் இதற்கு உதாரண விளக்கம் வேண்டியதில்லை. உண்மையை அறிந்து கடைப்பிடித்தல் அறிஞர் கடனாகும்.

---

# 5. மாயா விவகாரம் (1)

மெய்ப்பொருளாராய்ச்சிக்கு உட்பட்ட முப்பொருள்களில் ஒன்று பாசம். அப்பாசத்தின் முப்பிரிவுகளில் ஒன்று மாயா.

வடமொழி தென்மொழி என்னும் இரு மொழிகளிலும் உரிமை கொண்டாடப்படும் சில பதங்களில் ஒன்றாயிருக்கின்றது மாயா. வடமொழியில் இது மா + யா எனப் பகுக்கப்பட்டு மா — தோன்றல் யா — ஒடுங்கல் எனப் பொருள் கொள்ளப்படும். அவ்வகையில் பிரபஞ்சம் தோன்றி மீள ஒடுங்குதற்கிடனாயுள்ளது மாயா எனப் பொருள் விரிக்கின்றார்கள்.

தென்மொழியில் மாய்+ஆ எனப்பிரிக்கப்பட்டு மாய் — மாய்தல், ஆ — ஆதல் என முதனிலைத் தொழிற்பெயர்ப் பொருளில் பிரபஞ்சம் மாய்ந்து ஒடுங்குதற்கும் ஆகித் தோன்றுதற்கும் இடனாயுள்ளது மாயா எனக் கொள்ளப்படும். தென்மொழியாய்க் கொள்ளும் இவ்விளக்கத்தில் ஒடுக்கம் முன்னும் தோற்றம் பின்னுமாய் நிற்கும் ஒழுங்கில் "மெய்கண்ட தேவநாயனார்" தமது சிவஞான போத முதற் சூத்திரத்தில் மேற்கொண்ட உணர்த்து முறையழகும் இருத்தல் புலனாகும். "ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி யில்லை" என ஒடுக்கத்தை முன்னும் தோற்றத்தைப் பின்னுமாக வைத்துத் தமது சூத்திரக் கூற்றுக்குத் தாமே விளக்கமுந் தருவர் மெய்கண்டர்.

இவ்வாற்றால் உலகம் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் இடனாயிருப்பது மாயை என்ற உண்மை அதன் பெயர்க்காரணம் அளவிலேயே அறியப்படக்கூடியதாய் இருக்கிறது. இங்ஙனம் காரியத் தோற்ற ஒடுக்கங்களுக்கு மூலமாயிருக்கும் அம்மாயை ஒரு பொருள் (matter) என்றே துணிதற்கிடமுண்டு.

இது இவ்வாறாக இம் மாயையை உள்பொருளென்பர் ஒரு சாரார்: இல் பொருள் என்பர் ஒரு சாரார். அது பிரபஞ்ச முதற் காரணம் என்பர் ஒரு சாரார், அன்றென்பர் ஒரு சாரார். அது பிரபஞ்சத்திற்கு வேறானது என்பர் ஒரு சாரார், பிரமத்திற் சேர்ந்துள்ளது என்பர் ஒரு சாரார். பிரமத்தின் அபின்னா சக்தி என்பர் சிலர். அதன் பின்னா சக்தி என்பர் சிலர். இவ்வாறு மெய்ப்பொருள் ஆராய்ச்சியாளர்க் கிடையே அபிப்பிராய பேதங்கள் உள.

மாயை இல் பொருள் எனில் உலகத் தோற்ற உண்மைக்கு முரணாகும். அது பிரமத்தின் ஒரு பகுதியெனில் பிரமத்தின் கலப்பற்ற தனித் தன்மைக்கு விரோதமாகும். பிரமத்தின் அபின்னா சக்தியெனின் பிரமத்தின் சித்தாந்த தன்மைக்கு ஒவ்வாததாகும். நிலைமை இவ்வாறாதலின் இதனியல்பைச் சற்று விரிவுபட ஆராய்தல் பயனுடைத்து.

வேதத்தில் மாயை என்னும் இச்சொல் எவ்வகைப் பொருளில் ஆட்சிபெற்றுள்ளதென்பதை முதலிற் காண்போம்.

**"புனாதி தீர: புவனானி மாயா"** அவ்வீரன் தனது அமானுஷ்ய சக்தியினால் புவனங்களைத் தூய்மை செய்தான் — ருக்வேதம் முதலாம் மண்டலம் 160 ஆம் சூக்தம் 3 ஆம் மந்திரம்.

**'மாயினாம் அமினா :** பர உதமாயா" — (இந்திரன்) வஞ்சனையாளனாகிய விருத்திரனது தந்திரங்களை அழித்தான். ருக்வேதம் 1—32 : 4

**"அஸ்வாபயத் ஹதை :** தாசனாம் இந்த்ர மாயயா" — இந்திரன் சுவாசத்தினாலே தாசர்களது தீமையை அடக்கினான். 4. 30. 21

தான் யஜ்ஞஸ்ய மாயயா ஸர்வா வை யஜா மஹே — பூசையின் பலத்தினால் எல்லாம் விலகிப்போகுமாறு வேண்டுகிறோம். — யசுர்வேத சதருத்ரீய நமகம் ஐந்தாம் மந்திரம்.

இவற்றிலிருந்து மாயை என்னும் பதம் வேதத்தில் அமாநுஷ்ய சக்தி (mysterious power) பலம் (art) வஞ்சனை (fraud) தந்திரம் (trick) என்ற பொருள்களிற் பிரயோகமாயிருக்கக்

காண்கிறோம். இவையும் இவற்றின் சாயலாய் அமையக்கூடியனவுமான பொருள் நிலையில் இச்சொல் உபயோகிக்கப்பட்ட சந்தர்ப்பங்கள் வேத சங்கிதைகளிற் பல.

இனி உபநிடத வழக்கைக் கவனித்தல் பொருத்தமாகும்.

"சந்தாம்ஸி யஜ்ஞ: க்ரதவோ வ்ரதானி
பூதம் பவ்யம் யச்ச வேதா வதந்தி
அஸ்மான் மாயீ ச்ருஜதே விஸ்வ மேதத்
தஸ்மின் சான்யோ மாயயா சந்நிருத்த" — வேதமந்திரம்,

யாகம், இங்குத் தோன்றியிருப்பன, இனித் தோன்றவுள்ளன ஆகிய எல்லாவற்றையும் அந்த மாயவான் இதிலிருந்து படைத்தார். அவரிடத்தில் சம்பந்தமுற்றிருக்கும் மற்றவர் (உயிர்) மாயையினால் தடையுண்டிருக்கிறார்.

சுவேதாஸ்வதர உபநிடதம் 4 ஆம் அத்தியாயம் 9 ஆம் மந்திரம்.

இம்மந்திரத்தில் மாயீ, மாயை என வந்துள்ளவை யாவை என்பது அடுத்துவரும் மந்திரத்திற் காட்டப்படுகிறது.

"மாயாம் து ப்ரகிருதிம் வித்யாத்
மாயினம் து மஹே ச்வரம்"

மாயை என்றது பிரகிருதி என அறிக, மாயீ எனப்பட்டவர் பரமேச்வரன் என அறிக, என்கின்றது இம்மந்திரம். இங்ஙனம் இவ்வுபநிடதத்தில் மாயை என்னுஞ் சொல் முற்காணப்பட்டதற்கு வேறான ஒரு பொருளில் நிற்கக் காண்கிறோம். மாயா — பிரகிருதி, மாயீ — மாயையைத்தன் உடமைப் பொருளாகக் கொண்டவன் (பரமேச்வரன்) என்ற கருத்து இங்கே அமைகின்றது.

பிரகிருதி என்றால் பிறபொருள்கள் தோன்றுதற்கு மூல காரணம் (material cause) என்ற பொருள் பிரசித்தமானது. இதே உபநிடதத்தில் இப் பொருளுணர்த்த யோனி என்ற சொல்லும் இடம்பெற்றிருத்தல் காணலாம். யோனி என்பதற்கு பிறப்பிடம், பிறப்பு மூலம் என்ற பொருளிருத்தல் வெளிப்படை. அதனால் அது பிரகிருதியையே குறிக்கும் என்பதை மறுத்தல் இயலாது.



மற்றைய உபநிடதங்களில் இப்பிரகிருதி பெயர்ச்சுட்டி உணர்த்தப்பட்ட இடங்கள் சில. பெயர் சுட்டாமல் வேறு வகையால் உணர்த்தப்பட்டுள்ள இடங்களுஞ் சில. வேறு வகை என்றது உய்த்துணர வைத்தல் போன்ற உத்தி வகைகளாம்.

"யதோ வா இமானி பூதானி ஜாயந்தே
யேன ஜாதானி ஜீவந்தி
யத் ப்ரயந்தி அபிசம் விசந்தி ச
தத் விசிஜ்ஞாஸஸ்வ தத் ப்ரஹ்ம"

— எதிலிருந்து இப்படைப்புக்கள் உண்டாகின்றனவோ, எதனால் படைக்கப்பட்டவை வாழ்கின்றனவோ, அவை மீள எதில் ஒடுங்குகின்றனவோ அதுவே பிரமம் என அறிவாயாக. இது தைத்திரீய உபநிடத மந்திரங்களில் ஒன்று. இதன் கண், குறித்த பிரகிருதி என்பது நேரே கூறப்படாமல் சார்பு வகையால் அறியப்படுமாறு வைக்கப்பட்டிருக்கின்றது. இதன் விளக்கத்தைப் பின்னால் விபரிப்போம்.

"யதா ஊர்ணநாபி: ச்ருஜதே க்ருஹ்யதே வாச
யதா ப்ருதிவ்யாம் ஓஷதய: சம்பவந்தி
யதா சத: புருஷாத் கேச லோமானி
ததா அக்ஷராத் சம்பவதி இஹ விச்வம்"

— சிலந்தி எவ்வாறு நூலை வெளியேற்றி ஒடுக்கிக் கொள்கிறதோ, வயலில் பயிர் வகைகள் எவ்வாறு முளைக்கின்றனவோ, மனிதனில் கேசங்களும் உரோமங்களும் எவ்வாறு தோன்றுகின்றனவோ அவ்வாறே அழிவில் பொருளாகிய பிரமத்திலிருந்து பிரபஞ்சம் உண்டாகின்றது எனப் பேசுகின்றது. முண்டக உபநிடதம் மந்திரம் ஒன்று. இம்மந்திரத்தில் பிரகிருதி என்ற பொருள் எடுத்துச் சொல்லப்படாமல் உய்த்துணர வைக்கப்பட்டிருக்கின்றது. இதன் விபரமும் பின்னால் விளக்கப்படும்.

இவற்றால், சுவேதாஸ்வதர உபநிடதத்தில் மாயை என்னுஞ் சொல் பிரபஞ்ச தோற்றத்திற்கு முதற்காரணமாகிய பிரகிருதியையே உணர்த்தி வந்துள்ளமையையும், தைத்தீரீயம், முண்டகம் என்ற மறு உபநிடதங்களும் ஒவ்வோராற்றால் பிரகிருதி உண்மையை ஒத்துக் கொண்டுள்ளமையையுங் கண்டோம்.

இனி நம் கவனத்துக்குரியவை சிவாகமங்கள், மிருகேந்திரம், பௌஷ்கரம், மதங்க பாரமேஸ்வரம் முதலிய ஆகமங்கள், மேற்கண்ட நூல்கள் போலாது, முப்பொருள் உண்மையை வெகு விஸ்தாரமாக விரித்துக் கூறும் நூல்களாம். வேத உபநிடதங்களில் அருகிக் காணப்படும் மாயை இலக்கணம் பற்றிய சகல விபரங்களும் சிவாகமங்களிற் பெருக விஸ்தரிக்கப்பட்டுள்ளன.

மிருகேந்திரத்தில் மாயை விஷயமாக, 'மாயா பிரகரணம் என்றே ஒரு தனி அத்தியாயம் உண்டு.

"தத் ஏகம் அசிவம் பீஜம் ஜகத் சித்ர சக்திமத்
ஸஹகார் யதிகாராந்த ஸம்ரோதி வியாப்ய நச்வரம்"

மாயை என்பது ஏகப் பொருளாகவும், மயக்குவதாகவும் பிரபஞ்சத்துக்கு மூல காரணமாகவும் தன் துணையாகிய கன்மத்துக்குப் பிரவிருத்தி உள்ளவரையில் ஆன்மாக்களை மறைப்பதாயும் வியாபகமாயும் நித்தமாயும் உளது என அதன் வரைவிலக்கணம் முதற் சுலோகத்திற் காணப்படுகின்றது. இதைத் தொடர்ந்து அவ்வாகமங்கள் கூறும் மயாவிலக்கணம் வருமாறு:

ஆடைக்கு நூல் முதற்காரணமாதல் போலப் பிரபஞ்சத்திற்கு மாயை முதற் காரணமாகும். கரியமாகிய பிரபஞ்சம் சடமாயிருப்பதால் காரணமாகிய மாயையுஞ் சடமே. அவ்வாறல்லாவிடிற் காரணகாரிய நியமம் பங்கமடையும். இம்மாயை பிரளயத்தில் அழியுமென்றால் மீளப் பிரபஞ்சம் எதிலிருந்து உண்டாகும் என்னும் ஆசங்கை வரும். ஆதலால் மாயை நித்தியமே. அது எங்குமுள்ள எல்லாச் சீவன்களுக்கும் அங்கங்கு வேண்டிய தநு, கரண, புவன போகங்களைத் தந்து கொண்டிருப்பதால் அது வியாபகமான பொருளேயாம். சடமாய்ப் பலவாயுள்ளன அனைத்தும் அழியும் என்பது விதியாதலால் அழிவின்றி நித்தியாயிருக்குமென அறியப்பட்டுள்ள இம்மாயை ஏகப்பொருளேயாம். சேதன பிரம்மத்திலிருந்தே அசேதனமான மாயை உண்டாகுமென்பர் சிலர். அவ்வாறு, காரணமொன்றிலிருந்து அதற்கு விரோதமான காரியமொன்று தோன்றுமேல் ஜலத்திலிருந்து புகை தோன்றிற்றெனவுங் கொள்ள வேண்டி வரும். வைசேடிகரும் பிறரும் மாயையினின்றல்ல பரமாணுக்களினின்றே பிரபஞ்சந் தோன்றுமென்பர். அசேதனங்களாய்ப் பலவாயிருத்தலால் பரமாணுக்கள் அழியுந் தன்மையனவாம். அழியும் பொருள் நித்தியமாதல் இல்லை. எனவே, அவை பிரபஞசத்திற்கு முதற் காரணமாதல் பொருந்தாது. என்றிங்ஙனம் மாயை பற்றிய விளக்கங்களை மிருகேந்திர மாயாப் பிரகரணம் உணர்த்தக் காண்கிறோம்.



மதங்க பாரமேச்வர ஆகமத்தில் மாயா படலம் என்ற தனி அத்தியாயமொன்றுள்ளது. அதன் கண்.

"சூக்ஷ்மம்–சர்வகதம்–நித்யம்–அற்புத குணாவகம்
சைதன்ய நிலையம் விச்வம் அசேதனம் அரூபகம்"

என மாயா விலக்கணங்கள் அடுக்கி உரைக்கப்படுகின்றன. மேலும் அதன் உண்மை இயல்பு பின்வருமாறு விஸ்தரிக்கப்படுகின்றது.

"சக்தய: ச அத்ர சம்பூர்ணா ஸவவியாபார சுபேஷலா
அவ்யாஹத குணாகீர்ணா யஸ்யாசௌ பரமேஸ்வர:
ஸ்வதந்த்ர: சர்வகர்த்ருத்வே தஸ்ய கிம் ப்ரவிசார்யதே
மாயாபி தத்வசா யஸ்மாத் நித்யம் ப்ரசவ தர்மிணீ"

அம்மாயை சமபூர்ணமானவையும் தடை படாத ஆற்றல் உள்ளவையுமாகிய சக்திகள் மூலம் ஸ்வதத்திரனான பரமேஸ்வரன் வசப்பட்டு இயங்குதலால் தினந்தினம் சிருஷ்டிகளைப் பெற்றுப் பெற்றுப் பெருக்கிக் கொண்டிருக்கிறது என மாயையின் தொழிற் பாட்டியல்பும் இங்கே சுட்டி உணர்த்தப்பட்டிருக்கின்றது. 122 சுலோகங்களைக் கொண்ட விரிவான இப்படலத்தில் மாயையைப் பற்றி அறிய உள்ளன அநேகம்.

பௌஷ்கராகமத்தில் பாச பதார்த்த படலம், பும்ஸ்தத்வ படலம் என்ற இரு பெரிய படலங்கள் 348 பக்கங்களுக்கு மேல் இடம்பெற்றுள்ளன. இவற்றில் மாயை இலக்கணம் தர்க்க ரீதியாக உத்தாரணஞ் செய்யப்பட்டிருக்கின்றது. சிந்தியம் சுவாயம் புவம், விச்வசதாக்கியம் முதலிய ஆகமங்களும் மாயை இலக்கணந் தெரிவிப்பதில் இத்தகையனவே.

இங்ஙனம் ஆகமம் கூறுவதாகக் காணும் மாயை இலக்கணங்களில், ஏலவே நாம் வேதத்திலுள்ளனவாகக் கண்ட அமாநுஷ்ய ஆற்றல், பலம், வஞ்சனை முதலாங் கருத்துக்களும் இடம் பெறக் காண்கின்றோம். உபநிடதத்திற் காணப்பட்ட பிரகிருதி என்பதன் சார்பில் அமையக்கூடிய பல்வேறு கருத்துப் புதையல்களையும் காண்கின்றோம். உபநிடத்தில் பிரகிருதியென்று நாமம் மாத்திரமே தெரிவிக்கப்பட்டது. இங்கு அதன் அந்தரங்க இயல்புகள், விசித்திரச் செயல்முறைகள் எல்லாமே வெளியிடப் பெறுகின்றன. இவற்றைவிட எவ்வளவோ அதிகமான கருத்துக்களும் விளக்கங்களும் இங்கு இன்னும் பெறக் கிடக்கின்றன.

ஆகமங்கள் தரும் விளக்கத்தின் பிரகாரம், பிரகிருதி என்பது மாயையினது முழுவிரிவில் அதன் கீழ்ப்பாகமாகிய மூன்றிலொரு பகுதி என அறியப்படுகிறது. இதற்கு மேலும் அசுத்தா மாயை சுத்த மாயை என்ற இரு பகுதிகளை ஆகமங்கள் விபரிக்கின்றன. இதனால் உபநிடதம் குறிப்பிடும் மாயை, சுத்தமாயை என்ற இரு பகுதிகளை ஆகமங்கள் விபரிக்கின்றன. இதனால் உபநிடதங் குறிப்பிடும் மாயை இலக்கணத்திலிருந்து மேலும் இரு மடங்கு வளர்ந்து காணப்படுகின்றது. ஆகமக் காட்சியிற் காணும் மாயை இவ்விரிசின் மூலம் இன்றியமையாத சித்தாந்த நுண்பொருட் கூறுகள் ஆகமத்திற் செவ்வனே விளக்கம் பெற்றிருக்கின்றன. நுணுக்கமான பல பிரச்சனைகள் இதனால் விடுவிக்கப்படுகின்றன.

ஆன்மா தேகபந்தப்பட வந்த வகை யாது? அது ஏகதேசியாய், கிஞ்சிஞ்ஞனாய், வசித்திட வரும் வியாபியாய் நிற்றற்கு உதவிய சூழ்நிலை எது? ஆன்மா தனது ஞானக் கிரியை விளக்கங்கங்களைப் பெறக் கருவி கரணங்களில் தங்கியிருக்கும் என்றதன் விபரம் யாது? சித்தாகிய ஆன்மா புருடதத்துவம் என்ற ஒரு தத்துவ நிலைக்கு ஒதுக்கப்பட்டதன் சூஷ்மம் என்ன? — இத்தகைய பிரச்சனைகளை விடுவிப்பதற்கு உபகாரப்படுவது ஆகமங்கள் தரும் அசுத்தமாயா வரலாறே என்பது குறிப்பிடத்தக்க விசேடமுடையதாகும்.



ஏலவே மலபந்தமுற்றிருக்கும் ஆன்மாவுக்குப் பின்னும் பிரதிபந்தமாகத் தக்க நிர்ப்பந்தத்தை வருவிக்கும் ஏதுக்களாய் அமைந்தவை அசுத்த மாயையிற் தோன்றும் கலை முதலிய தத்துவங்களே என்கின்றது ஆகமம். இத்தத்துவங்களினாற் சிறங்கணிக்கப் பட்டதனாலன்றோ புருடன் என்ற தத்துவ நிலையும் ஆன்மாவுக்கு உளதாயிற்று.

இங்ஙனம், சித்தாகிய ஆன்மாவைச் சடமாகிய தத்துவங்கள் பந்தப்படுத்த வந்ததெங்ஙனம் என்பது அடுத்த கேள்வி. இதற்குப் பொறுப்புள்ளவை சிவ தத்துவங்களான சுத்த கருவிகள் ஐந்துமே. அவை பற்றிய விளக்கம் முழுமையும் ஆகமங்கள் விரிக்கும் சுத்தமாயை விரிவினால் அறியக்கிடக்கின்றன. இன்னும், இறைவனால் தனது சுத்தக் கருவிகளாகிய சிவ தத்துவங்கள் மூலம் இயக்கப்பட்டாலொழிய மாயை எதுவும் செய்தல் இயலாது என்ற பாரமார்த்திக உண்மையும் இச்சுத்தமாயை விரிவின் மூலமே உறுதியாகின்றது. இவ்வாற்றால் வேதத்திற் கால் கொண்ட மாயை இலக்கணம் ஆகமத்தில் முழுமையான வளர்ச்சிநிலை பெற்றிருக்கக் காண்கின்றோம். சித்தாந்தச் சார்பான மற்றை விஷயங்களிற் போலவே மாயைக்கு விளக்கந் தரும் விஷயத்திலும் வேதம் பொது நிலையும் ஆகமம் சிறப்பு நிலையும் வகிக்கும் விதமும் புலனாகின்றது.

இங்ஙனம் ஆகமங்கள் தரும் மாயை விளக்கத்தையே சைவசித்தாந்த நூல்கள் அமைவு படுத்திக் கூறும். சிவாகமங்கள் சித்தாந்தமாகும் என்பதன் அர்த்தம் இதுவே.

"நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் உலகத்துக்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்கோர்
சக்தியாய்ப் புவனபோகந் தநுகரணமு முயிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யுமன்றே"

என்ற சிவஞான சித்தியார்ச் செய்யுள் சர்வாகம சங்கிரகமாய் அமைந்திருத்தல் வெளிப்படை.

முப்பொருள் இலக்கண தத்துவ தாற்பரியங்களை உருவக நடைப்படுத்தி அவற்றைக் கதாபாத்திரங்களாக நிறுவிக் காவியம் படைத்திருக்கின்றார் கச்சியப்ப சிவாசாரியார். அவருடைய கந்தபுராணக் கதாபாத்திரங்களில் ஒன்று மாயை. அவர்காட்டும் மாயை பிறள் எவளுமன்று. முப்பொருளில் ஒன்றான முப்பாசங்களில் மூன்றாவதான மாயையே என்பது அவர் வாக்கிலேயே வெளிவந்திருக்கின்றது.

"அருவினள் சேறலும் அற்பு தத்தவண்
வருபொரு ளியாவையும் மறைந்து போயின"

என்ற மாயை நீங்கு படலச்செய்யுள் மாயையை அருவினள் என்று குறிப்பிட்டிருக்கின்றது. "சூக்ஷ்மம்", "அரூபகம்" என மிருகேந்திரம் கூறியதும் 'அருவாய்' என அருணந்தி சிவாசாரியார் கூறியதும் இங்கு "அருவினள்" எனக் கச்சியப்பர் தெரிவிப்பதும் ஒன்றே. 'அற்புதத்தவண் வரு பொருள்' என்றதில் மதங்கபாரமேச்வரத்திற் கூறப்பட்ட அற்புத குணாவகம் என்ற இலக்கணந் தொனிக்கின்றது. 'அவண் வரு பொருள்' என்றதனாலே புவன போகந் தநு கரணமும் உயிர்க்காய் வைத்தோர் பொருளாய் எனச் சிவஞான சித்தியார் கூறிய இலக்கணம் புலனாகின்றது. மதங்கங்கூறிய 'பிரசவதர்மிணீ' என்ற இலக்கணமும் இதிலே விளங்குகிறது. 'அவள் சேறலும் யாவையும் மறைந்து போயின' என்றதனால், தோன்றுதற்கு இடமாயிருந்த அதுவே அனைத்தையும் ஒடுக்கியுங் கொள்ளும் என்னும் பொருளில் வந்த 'யத்பிரயந்தி அபிசம் விசந்தி ச' என்ற தைத்திரீய மந்திர உண்மை புலனாகின்றது. இம்மாயை பற்றிக் கச்சியப்பர் தருஞ்செய்திகள் இன்னும் உற்று நோக்கத்தக்கவை.



காசிபர் தவஞ் செய்திருந்த இடம் நீரும் நிழலுமற்று வெறுங் கற்பாற் படையாய்க் கிடந்த வன்னிலம். மாயை கணப் பொழுதிலே அதனை வாவியுஞ் சோலையுஞ் செய் குன்றுகளும் நிறைந்த சித்திர வனமாக்கினாள். அதன் கண் ஐம்புல நுகர்ச்சிக்கு அமைந்த நானாவிதமான படைப்பு விசேடங்களையுந் தோற்றுவித்தாள். தானும் அற்புத லாவண்ய அழகு சுந்தரியாய் அவர் முன் உருக்கொண்டு தோன்றினாள். இதனால் காசிபர் பால் கருவற வரண்டு போய்க்கிடந்த காம உணர்ச்சியைக் கிள்ளி விட்டாள். பாலை நிலத்தை தளிர்க்கச் செய்தது போலவே காசிபரின் காம உணர்ச்சியையுந் தளிர்க்கப் பண்ணிய விந்தையை என்னென்பது!

அவள் தோன்றிய மறுகணமே தான் மறைந்து அதன் மூலம் காசிபரின் ஆவலை நீள வளர்த்துப் பெருக்கி அருமை காட்டினாள். பின் பண்டுபோல் எதிர் தோன்றி ஆசை காட்டி மோசஞ் செய்தாள். இரவோடிரவாக ஒரு மூன்று பெருவீரர்களையும் ஒரு வீராங்கனையையும் எண்ணிறந்த பல்லாயிரம் வெள்ளக் கணக்கான அவுண சைன்னியங்களையும் பெற்றுப் பெருக்கித் தான் பிரசவதர்மிணி என்பதைக் காட்டினாள்.

பின் காசிபர் மக்களுக்கு மெய்ப்பொருள் உபதேசஞ் செய்ய அடியெடுத்த போது இடைமறித்துக் குறுக்கிட்டுத் தடுத்து,

"பிள்ளைகளே உங்களுக்கு வேண்டுவது பதி, பசு, பாச விளக்கமல்ல. செல்வமும் வெற்றியும் அழிவிலாயுளும் சீர்த்தியும் கீர்த்தியும் பிரதாபமுமே" என்று லௌகீக போதனையை முன் வைத்தாள். பொருட்செல்வத்தை விடக் கல்விச்செல்வமே சிறந்தது என்ற ஆத்திக உண்மையைக் கூடத் தலை கீழாய்ப் புரட்டி.

'வளத்தினிற் சிறந்தது மற்றொன்றில்லையே' எனப் பொருட்செல்வ போதையைப் புகட்டி மருட்டினாள். இங்ஙனம் அநித்தியத்தை நித்தியமென்றும் அநாவசியத்தை ஆவசியகமென்றும் ஆன்ம நன்மைக் கொவ்வாதனவற்றை ஒவ்வுவனவென்றும் காட்டி மயக்கும் மாயையியல்பன்றே சிவஞானசித்தியாரில்

"மாயை மயக்கமுஞ் செய்யுமன்றே" என்பதனாற் பிரதிபலிக்கப்பட்டிருக்கின்றது. அத்தனையுஞ் செய்தாள் இந்த மாயை. அவள் மறையவே அனைத்தும் மறைந்தன. மாயையின் நிலையா இயல்பு இது. இங்ஙனம் மறைந்தும் காசிபர் பால் அவளால் ஏற்பட்ட தாக்கம் மறைந்தபாடில்லை.

எனை விட்டேகுதல் நீதியதாகுமோ! என அறிவிலி போல் அரற்றுகின்றார். அவர் கயிலாய மலைதான் என்னும்படி நீறு பூசி அசைவற்ற தவக்கோலத்திலிருந்த காசிபர் இவ்வகையில் தானாந் தன்மையே முற்றாய் அழிந்து ஒழிந்து விடுகின்றார். "ஆண்நலம் அழிவுற அழுங்குவான் ஆயினான்" என்கின்றார் கச்சியப்பர். அவரைப் பழைய நிலைக்கு மீட்க, அவரின் தந்தையாகிய பிரமாவே ஒரு கால் வரவேண்டியதாயிற்று. என் செய்வார் பாவம்!

இன்னும், இம் மாயை தன் மைந்தர்க்கு வேண்டும் போதெல்லாம் வேண்டுமிடமெல்லாந் தோன்றித் தோன்றி விசித்திரமான ஆலோசனைகளையும் விதம் விதமான அளவிறந்த செல்வங்களையும் அற்புதகரமாக வழங்கியுள்ள செய்திகளும் கந்தபுராணத்தில் ஆங்காங்கு வருவன. எந்தப் புவனத்தும் எந்த உலகத்தும் எந்த ஒருயிர்க்கும் வேண்டுவனவற்றைத் தோற்றும் மூலப்பொருள் மாயைதான் என்பது இதனால் நிரூபணமாகின்றது.

இவ்வகையில் முப்பொருளில் ஒன்றான மாயையின் இயல்பை இலகுவில் யாவரும் மனங் கொள்வதற்குக் கணிசமான அளவு உதவுகின்றது, கச்சியப்பரின் கந்தபுராணத்து மாயை. இனி, இது பற்றிய மற்றொரு கருத்தம்சத்தைக் கவனித்தல் அவசியமாகும்.

கந்தபுராண உண்மைப்படி இந்த நிகழ்ச்சி இவ்வளவும் மாயையின் சொந்தச் செயலன்று. சாக்ஷாத் பரமசிவனேயன்றோ இவ்வளவும் செய்வித்திருக்கின்றான். "சிவனுக்கேன் இந்த வம்பெல்லாம்" என்றால், அவன் தனக்காகவல்ல. தன் இரட்சிப்பிக்குரிய தேவர்களுக்காக என்பது பதில். தேவர்களுக்காக, தேவர்களை வருத்தும் அவுணர்களை உற்பத்தியாக்குவதோ? அவுணர்கள் மூலம் வருத்தித் துன்புறுத்தப்படுதல் தேவர்களுக்கு நன்மையாகுமோ? எனில்,



தேவர்கள் முன்னொருகால் தக்கன் யாகத்திற் பங்குபற்றி இருந்தார்கள். அது சிவனை நிந்திக்கும் முறையில் நிகழ்ந்த ஒரு யாகம். அதனால் அது முழுக்க முழுக்கச் சிவாபரதம் என்ற மீளாத் தோஷத்தின் பாற்பட்டது. "சாவ முன்னாள் தக்கன் வேள்வித்தகர், தின்றவர்கள்" என்று அவர்களின் பாபதோஷக் கனதியை உணர்த்துகிறார் மாணிக்கவாசகர். கன்மக் கோட்பாட்டின் வண்ணம் அந்தத் தோஷபலனை அவர்கள் அனுபவித்தேயாதல் வேண்டும். சிவாபராத தோஷம் எவ்வளவுக்கு வன்மையானதோ அவ்வளவுக்கு வன் கண்மையான துஷ்டர்களால் தான் அதற்குப் பரிகாரம் நிகழவேண்டியது வாஸ்தவமே! ஆதலின் தேவரை அவுணர் வருத்தும்படியாகச் செய்தது தேவர் நன்மைக்காகவேதான். ஐயமில்லை. எனில்,

ஒருவர் நன்மைக்காக மற்றவரைப் பலியிடுவதா? தேவர்கள் நன்மை பெறுதற் பொருட்டு அவுணரைப் படைத்து அலைத்து அழிக்கலாகுமா? என்றால், அந்த அவுணர்களுக்குந்தான் அப்படியே அலைந்து அழிந்து விமோசனம் பெறவேண்டியதற்கான "சாபம்" ஒன்று பெருமளவில் இருந்ததாகக் காட்டுகிறது அவர்களின் பூர்வீக வரலாறு.

எனவே தனக்கு வேறான பொருளாகிய மாயையை இறைவன் தனது சக்திகளால் தானே இயக்குகின்றான். அதன்கண் விநோத படைப்புகளை எல்லாந் தோற்றுவிக்கின்றான். அவற்றினாற் பெறும் விபரீத அனுபவங்களோடு உயிரை மருவப் பொருத்தி மயக்குகிறான். அதன் மூலம் அவ்வுயிர்க்குரிய வினைப்போக அனுபவ நிலைகளிலே ஒவ்வோருயிரையுஞ் செலுத்துகிறான். அவ்வுபகாரத்தினால் உயிர்களை மலபந்தம் நீக்கி இறைவன் ஈடேற்றுகின்றான். இந்த நிக்கிரக அநுக்கிரகச் செயல்கள் நிறைவேறும் பொருட்டாக இறைவனால் தன் கைக்கருவியாக பரிக்கிரஹ சக்தியாகக் கொள்ளப்பட்டிருப்பது மாயை. இந்த மாயாவிலக்கணத்துக்குக் கச்சியப்பர் தரும் மாயை சிறந்த இலக்கியமாதல் இவ்வகையால் அறியப்படும்.

---

# 6. மாயா விவகாரம் (2)

இனி மெய்ப்பொருள் ஆராய்ச்சியாளர்களிடையே இம்மாயை பற்றி ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளையும் அவற்றின் அடிப்படைகளையும் விளைவுகளையும் அலசி ஆராய்தல் அமைவுடைத்து. அதனாலும் மாயை பற்றி அறியக்கிடப்பன அதிகமாதலின்.

பிரபஞ்சம் எதிலிருந்து தோன்றிற்று? என்ற எண்ணத்தின் விளைவே மாயை ஆராய்ச்சியாயிற்று. இந்த ஆராய்ச்சி உண்மைப் பொருளியல்பு பற்றி வேதங் கூறும் முடிபுக்கு மாறுபடாதிருத்தல் வேண்டும் என்பது பொது நியதி.

'ஸத் ஏவ சோம்ய இதம் அக்ர ஆசீத். ஏகமேவ அத்விதீயம் — ஸத்' என்ற இதுவே ஆதியிலிருந்து அது ஏகமும் அத்வீதியமுமாய் உள்ளது என சாந்தோக்கியம் 6. 2. 1 இல் பிரஸ்தாபிக்கப்பட்ட அதுவே வேதத்தின் முடிவான உண்மை. வேதாந்தியரும் பாஞ்சராத்திரரும் இத்தொடரிலுள்ள ஏகம், அத்விதீயம் என்ற இரு சொற்களும் ஒரே பொருள் பற்றி வந்த இரு சொற்களாகக் கொண்டனர். அதாவது ஏகம் எனில் ஒன்று. அத்விதீயம் என்றாலும் ஒன்று. அப்பொருள் 'ஸத்' எனப்பட்ட பிரமமே எனத் துணிந்தனர். அதனால் இரண்டாம் மூன்றாம் பொருள்களாகிய உயிர் மாயை என்பவற்றுக்கு இருப்புக் கொள்ளுதல் அவர்க்குப் பிரச்சினையாயிற்று. அப்பிரச்சினையைச் சமாளிக்கும் முகத்தால் உயிரையும் மாயையையும் எப்படியாவது பிரமத்தோடு ஒன்றாகக் காட்ட முனைந்தனர்.

அவருள் வேதாந்தியர், பிரம்மத்தை விட உயிர் என ஒன்றில்லை. பிரமமே அவித்தையோடு கூடியமையாற் பல்வேறு உயிர்கள் எனும்படி தோன்றுகிறது. தன்னிலையில் அது பரப்பிரமம். அவித்தையொடு கூடிய நிலையில் அது ஜீவப்பிரமம் என்றனர். இனி, அதே பிரமந்தானே தன் மாயா சக்தியாற் பரிணமித்தலால் பிரபஞ்சமாயிற்று எனவுங் கொண்டனர்.

பாஞ்சராத்திரிகள் மற்றொரு விதத்தில் இதை முடிவு செய்தனர். உயிர், மாயை என்ற இரண்டும் பிரமத்துக்கு வேறான இரண்டாம் மூன்றாம் பொருள்கள் எனினும், அவை வேறென இல்லாமல், பிரமத்தோடு பிரமமாய் அதற்கு விசேடணமாய் இருப்பன. ஆதலால், ஏகம், அத்விதீயம் என்ற சொற்கள் இரண்டும் உணர்த்தியது ஒன்று என்ற ஒரே பொருளைத்தான் என்பது பாஞ்சராத்திர முடிபு.

இதனால் மாயை பற்றிய கருத்தில் இருவருக்கும் வேறுபாடிருத்தல் வெளிப்படை. பிரமம், தான் பிரபஞ்சமாகப் பரிணமித்தற்குச் சாதனமாகக் கொள்ளும் ஏதோ ஒரு தன்மையே (உபாயமோ, தந்திரமோ) மாயை என்றனர் வேதாந்தியர். உயிர், மாயை (சீவன், அசித்) என்ற இரண்டையும் உடலாகக் கொண்டு பிரமம் தன் சூக்கும நிலையிலிருந்து தூலநிலைக்கு மாறுதலே பரிணாமம் என்றனர் பாஞ்சராத்திரியர். தோற்றிய பிரமம் மீள ஒடுங்கும் ஒடுக்கத்தின் போது உயிரும் மாயையும் பிரமத்தில் உறங்கிக் கிடக்கும் என்பது அவர் கருத்து.

உபநிடத உண்மைகளின் சாராம்சமாயுள்ளது பிரமசூத்திரம் என்னுமொரு நூல். அதுவே வேதாந்தியர்க்கும் பாஞ்சராத்திரர்க்கும் மூலவேதம் போல்வது. உபநிடதங்களிற் பரிணாமம் என்ற பதம் இடம் பெறவில்லை. பிரமசூத்திரத்திலேயே அது இடம்பெறுகின்றது. அதன் முதலாம் அத்தியாயத்து நாலாம் பாத 27 ஆம் சூத்திரம் "பரிணாமாத்" என்றிருக்கிறது. இதற்கு உரை கூறுகையில் இதனை இதற்கு முன் வந்துள்ள "ஆத்மக்ருதே" என்ற சூத்திரத்தோடு சேர்த்து இரண்டையும் ஒரு தொடராக வைத்தே உரை கூறினர் வேதாந்தியர். அவர் கூறும் பொருள் விபரம்ஹ —

"ஆத்மக்ருதேஹ தனக்கோர் கர்த்ருத்வஞ் சொல்லுகையாலே பிரமம் முதற்காரணம். (அது எப்படி வாய்க்குமெனில்) பரிணாமாத் — பிரபஞ்சமாகத் தன்னைப் பரிணமிப்பிக்கையாலே" இது வேதாந்த உரை.

பாஞ்சராத்திரர் அப்படி இரண்டு சூத்திரத்தையும் ஒரு

தொடராக்காமல் "பரிணாமத்" என்றதை ஒரு தனிப்பொருள் முடிவுள்ளதாக வைத்து, "சிதசித் வஸ்து சரீரகமான பிரமமே பிரபஞ்ச ரூபகமாகப் பரிணமிக்கையாலே" என்று உரை கூறினர்.

இதன் பிரகாரம், பரிணாம உண்மை பற்றி உண்மையில் இருவர்க்கும் அபிப்பிராய பேதம் இருந்தாலும் பிரபஞ்ச தோற்றத்திற்குப் பிரமமே முதற்காரணம் என நிறுவுவதற்குப் பரிணாமத்தை ஒரு பொது ஏதுவாகக் கொண்ட அளவில் ஒற்றுமை இருத்தல் காணப்படுகின்றது.

இப்படிக் கொள்வதனால், பிரபஞ்சத்தின் சார்பினால் நிகழும் சுக, துக்க மயக்க நிலைகளாகிய விகார இயல்புகள் நிர்க்குணம் என்றும் நிர்விகாரி என்றும் சொல்லப்படுகின்ற பிரமத்துக்கும் உள்ளதாக ஒப்புக்கொண்டதாக முடியுமே என்ற ஆசங்கையும் அவ்விருவர்க்கும் ஏற்பட்டே இருக்கின்றது. அதற்கு, இருவரும் இருவிதமாகச் சமாதானம் சொல்லிக் கொள்கின்றனர்.

"ஸத் ஸத்யஸ்ய அபவத்" என்ற தைத்திரீய மந்திரத்தை ஆதாரமாகக் காட்டி, "சத்தாகிய பிரமம் சத்தியத்தின் மயமாயிருப்பதால் அதற்கு அப்படிப்பட்ட விகாரமேற்பட இடமில்லை". இது வேதாந்தியர் கூறிய சமாதானம்.

பிரமம் அவித்தையினால் ஆவரிக்கப்பட்டுப் பிரபஞ்சமாகிற தென்னும் வேதாந்தியர்க்குத்தான் அத்தோஷம் சம்பவிக்க இடமுண்டாகும். சூக்குமமான "சிதசித்" சரீரகமான பிரமம் தூலமாதலே பரிணாமம் என்றது எங்கள் கருத்தாதலால் சொல்லப்பட்ட அவ்விகாரங்கள் அச் சிதசித்துக்களோடேயே கிடந்து கொண்டிருக்குமல்லாமல் பிரமத்தைச் சாரமாட்டா. உடலுக்கு உள்ளனவான கறுப்பு வெளுப்புக்கள் உயிரைச் சாராமை போல, இது பாஞ்சராத்திரியர் கூறுஞ் சமாதானம். இதில் இவர்கள் வேதாந்தியரைக் குறித்துக் கூறும் வசனம் வேதாந்தபரமான பரிமாணக் கருத்தை இவர்கள் ஒத்துக் கொள்ளாமையைக் காட்டும். இது இருவர்க்கும் உள்ள ஒற்றுமைக்குள் ஒரு வேற்றுமையாகும்.



பிரமம் தானே பிரபஞ்சமாய்ப் பரிணமித்தற்கு மாயையை ஒரு கருவிக் காரணமாகக்(cause instrumentality) கொண்டிருக்கிறது என்பது வேதாந்தியர் விளக்கம். பிரமம் என்ற பொருள் மாயையோடு ஒன்றாய்த் தன் தூலநிலைக்கு வந்தமையால் பிரபஞ்சம் ஏற்பட்டது என்பது பாஞ்சாராத்திரர் விளக்கம். பிரமமே பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் என்று நிறுவ முயன்ற கொள்கையின் வரலாறு இதுவாகும். வேதாந்தியருக்கு மாயை அவித்தை (Illusion) மாத்திரமே. பாஞ்சராத்திரர்க்கு மாயை ஒரு தனிப்பொருள். மாயாகாரியமாகிய பிரபஞ்சம் முழுவதிலும் பிரமம் சாந்நித்தியமாயிருக்கும் காட்சி இருவருக்குமே இருந்திருக்கின்றது. ஆனால் அது ஏற்பட்டதெப்படி என்று விளங்குதலில் இருவருமே கஷ்டப்பட்டிருக்கிறார்கள். தான் நிமித்த காரணமாய் நின்று முதற்காரணமாய மாயையிலிருந்து பிரபஞ்சத்தைத் தோற்றுவித்த பிரமம் தான் அவற்றுடன் கலப்பினால் ஒன்றாய் நிற்கிறது என்பது சைவசித்தாந்தப் பொருள் நிலை. படைத்தல், ஒன்றாய் நிற்றல் என்ற இரு தன்மைகள் இங்கே இடம்பெறுகின்றன. பாஞ்சராத்திரியர் இந்த இரு தன்மைகளையும் ஒன்றாகச் சேர்த்தெடுத்துக் கொண்டதனால் அவர்கள் கொள்ளும் பொருள் நிலை சைவ சித்தாந்தப் பொருள்நிலையோடு வேறுபடுகின்றது. மாயைக்கே உரியதாகிய முதற்காரணமாந் தன்மையில் பிரமத்தையுஞ் சம்பந்தப்படுத்திவிட்ட ஒரு குறைபாடு அவர்கள் பொருள்நிலையில் இடங்கொண்டு விட்டதெனலாம். இனி,

சைவ சித்தாந்தப் பொருள் நிலைக்கு முற்றிலும் ஒத்து வரக்கூடிய ஒரு விளக்கம் தைத்ரீய உபநிடதத்தில் இருப்பதைக் கவனித்தல் உசிதமாகும். "ஸ இதம் சர்வம் அஸ்ருஜத யத் இதம் கிம்ச தத் ஸ்ருஷ்ட்வா தத் ஏவ அனுப்ராவிசத் — தத் அனுப்ராவிஷ்ய — சத் ச த்யத் ச அபவத" தைத் 2. 61 பிரமம் இது எல்லாவற்றையுஞ் சிருஷ்டித்தது. சிருஷ்டித்து அவற்றிற் பிரவேசித்தது. பிரவேசித்து "சத்" ஆகிய உயிர்களாயும் "தியத்" ஆகிய பாசப்பொருள்களாயும் ஆயிற்று. "இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும் காற்றுமாகி நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே" என்பன போலவரும் திருமுறைக் கருத்தும் இவ்வுபநிடதக் கருத்தும் ஒன்றே. வேதாந்தியரும் பாஞ்சராத்திரரும்

இவ்வுபநிடதக் கருத்தைப் புறக்கணித்துக் கொள்கை விளக்கஞ் செய்ய முயன்றிருக்கிறார்கள் என்பதை இங்கே கவனித்தல் தகும். மேலும்,

உபநிடதத்தில் மாயையைக் குறித்த பிரகிருதி என்ற பதம் பிரமசூத்திரத்தில் இடம்பெற்றிலது. அதற்கெதிர் பிரதானம் என்ற பெயரில் பிரகிருதியைப் பற்றி விளக்கிய சாங்கிய மதம் அதிற் கண்டிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் மாயா என்ற பதம் ஒரிடத்திலும் அதற்குப் பிரதி பதமான யோனி இரு இடங்களிலும் வந்துள்ளன.

"மாயா மாத்ரம்து கார்த்ஸ்யேன அநபி வியத்த ஸ்வரூபத்வாத்" என்பது பிரம்ம சூத்திர மூன்றாம் அத்தியாய 2 ஆம் பாதத்தில் 2 ஆஞ் சூத்திரம். பூரணமாக விளக்கம் பெறாத சொரூப முடைமையினாலே சொப்பனத்திற் காண்கின்ற வஸ்த்துக்கள் மாயை மாத்திரமே. என இதற்குரை கூறும் வேதாந்தியர் அவ்வளவில் அமையாது "உண்மையானவையன்று" என்ற தொடரையும் குறிப்பெச்சமாகச் சேர்த்துக் கூறி முடித்திருக்கின்றனர். மாயை என்ற பதத்திற்கு "உண்மையானதன்று" என்பது இங்கே தோன்றும் புது விளக்கமாகும்.

"இனிப் பூரணமாகப் பிரகடனஞ் செய்யும் சொரூபம் இல்லாமையால் ஆச்சரியகரமான சொப்பன பதார்த்தங்கள் எல்லாம் பிரமத்தினால் சிருஷ்டிக்கப்படுகின்றன" என்று அச் சூத்திரத்திற்கு உரை கூறுவர் பாஞ்சராத்திரர். இவ்வுரையில், மாயை என்றால் ஆச்சர்யகரமானது என்ற பொருள் தொனிக்கின்றது.

இவ்வுரைகளிரண்டில் முன்னையது நம் கவனத்துக்குரியது. "பிரபஞ்சம் வெறும் பொய்த் தோற்றம், கானல் நீர், கயிற்றரவு கிளிஞ்சிலில் வெள்ளி போல்வது" என்ற கருத்தின் முளையை இதிற் காண்கின்றோம். "உண்மையானவையன்று" என்ற சொல் வடிவிலே அக்கருத்து முளை விட்டிருக்கின்றது. இம் முளை வேதாந்தத்தில் ஒரு கிளையையும் தோற்றுவித்திருத்தல் கண்கூடு. பிரபஞ்சம் வெறுந் தோற்றம் என்ற விவர்த்தவாதக் கொள்கையே இக் கிளையாகும். இக் கொள்கையாளராகிய பிற்கால வேதாந்தியர் மாயாவாதிகள் என ஒரு தனிப்பிரிவாயினமை பிரசித்தம்.



குறித்த சூத்திரத்தில் கனவிற் காணும் பொருள் உள் பொருளல்ல; எனக் காட்ட வேதாந்தம் மாயை என்ற சொல்லைப் பயன் செய்துள்ளது. அதே கனவுப் பொருள் உள் பொருள் எனக் காட்ட பாஞ்சராத்திரம் அச்சொல்லைப் பயன்படுத்தியுள்ளது. இதன் மூலமும் வேதாந்தத்திற்கு மாயை உள் பொருளல்ல: பாஞ்சராத்திரத்திற்கு மாயை உள் பொருள் எனத் தெளிவாகத் தெரிகிறது

இன்னும், "யோனி; ச ஹி கீயதே" என்பது பிரம்மசூத்திர 1 ஆம் அத்தியாய 4ஆம் பாத 27 ஆம் சூத்திரம். அதிலுள்ள யோனி என்ற சொல்லுக்கு முதற் காரணம் என்றே இருவரும் பொருள் உரைக்கின்றனர். ஆனால் அது பிரமத்தையே சுட்டியது என்பது இருவர் கருத்துமாம். பிரபஞ்சத்திற்குப் பிரமமே முதற் காரணம் என்றதே இருவர் கொள்கையும் என்றதற்கு இது ஆதாரமாகின்றது. இதற்கு உரை கண்ட ஸ்ரீ கண்டர் என்பவர் மட்டும் உபநிடதக் கருத்து வழி நின்று இங்கு யோனி — பிரகிருதி என்று பொருள் கொண்டார். கொண்டும் அதிகரண இயைபு நோக்கிப் போலும் "பிரமமே பிரகிருதியுமாம்" என்று பாடப்படுகிறது என்று பொருள் விரித்து விட்டார்.

இதுவரை அவதானித்தவற்றின் மூலம் பின்வரும் முடிபு ஏற்படுகின்றது.

1. தன் ஏகக் கொள்கையை வலியுறுத்தும் பொருட்டு மாயையை ஒரு கருவிக் காரகமாகப் பயன்படுத்தியிருக்கின்றது வேதாந்தம்.

2. ஏகக் கொள்கைக்கும் துவிதக் கொள்கைக்கும் இடையிலுள்ள வேறுபாட்டை மறைப்பதன் மூலம் தன் விசேடண சகித ஏகக் கொள்கையை — விசிட்டாத்துவிதக் கொள்கையை — நிலைநாட்டுஞ் சாதனமாகப் பாஞ்சராத்திரம் மாயையைப் பயன்படுத்தியுள்ளது.

குறித்த இருமதங்களும் "அத்விதீயம்" என்ற சொல்லுக்கு ஏகம் எனப் பொருள் கொண்டமையால் ஏற்பட்ட விளைவுகள் இவை என அறிதல் சுவாரஸ்யமானது.

---

# 7. மாயா விவகாரம் (3)

சைவ சித்தாந்தம் ஏகமேவ அத்விதீயம் என்ற தொடருக்கு வேதாந்தியரும் பாஞ்சராத்திரருங் கொண்ட பொருளை அங்கீகரித்திலது. அப்பொருள் அத்தொடர்க்குரிய பொருளல்ல என நிறுவுவதற்கு அத்தொடரிலேயே அது ஆதாரமுங் கண்டிருக்கின்றது. பொருள் ஒன்றே தான் எனக் காட்டுதல் இத் தொடர்க் கருத்தாயின் முன் "ஏகம்" என்றதே போதுமே; பின் அத்விதீயம் என்பானேன்? என்பது கேள்வி, அது அடுக்கு மொழியென்ற சொற்றொடர் இலக்கணப்படி வந்தது என்று கொள்வதாயின் அது பொருந்தாது. அடுக்குமொழி யெனில் ஒரே சொல்லன்றோ அடுக்கி வந்திருக்க வேண்டும். வெவ்வேறு சொல் அடுக்கி வருதல் அடுக்கு மொழி இலக்கணமாதல் செல்லாது. இன்னும் "ஏகம்" என்ற அளவில் நில்லாது ஏவ என்றுங் கூறியதனால் ஒன்றேதான் எனப் பொருள் தோன்றி எடுத்துக் கொண்ட விஷயம் பற்றிய துணிவு ஸ்தாபிக்கப்பட்டதாயிற்று. பின், மேலும் அப்பொருளே சுட்டி ஒரு சொல் வருதல் புனருக்தி — கூறியது கூறல் — என்ற வாக்கிய தோஷமாகும். ஆதலால் அத்தொடர்க்கு அப்பொருள் பொருந்தாதென மறுத்துச் சைவ சித்தாந்தம் வேறுபொருள் கொள்கின்றது.

அதன் கருத்திற்கிணங்க இத்தொடரில் "ஏகமேவ" என்பது ஒரு தனிப்பொருட் பகுதி. "அத்விதீயம்" மற்றொரு பொருட்பகுதி. முன்னைய பகுதி பிரமப் பொருளின் தன் நிலையைச் சுட்டுவது; பின்னைய பகுதி அப் பிரமப் பொருள் ஏனைய பொருள்களோடு கொண்டிருக்குந் தொடர்பு நிலையைச் சுட்டுவது. அந்தக் கண்ணோட்டத்தில் இத்தொடர்க்குப் பொருள் கண்டால் ஏகம் ஏவ — பிரமப்பொருள் ஒன்றேதான், அத்விதீயம் — அது ஏனைப் பொருள்களுடன் இரண்டன்மை தோன்ற நிற்கும் என விளங்கும், இன்னொரு வகையிற் சொல்வதாயின் பிரமம் தன்னுண்மை இயல்பைப் பொறுத்து ஒன்றேயாகவும்; கலப்பியல்பால் ஒன்றுபடுந் தன்மையைப் பொறுத்து ஏனைப் பசு, பாசப் பொருள்களோடு இரண்டன்மை தோன்றவும் நிற்கும் எனலாம். இதுவே இத்தொடர்க்குச் சைவசித்தாந்தங் கொள்ளும் பொருள்.



இப்பொருள் கொண்டமையால் பிரமம் அல்லாத உயிருக்கும் மாயைக்கும் இருப்புக் கூறி அவற்றின் இயல்பை உள்ளது உள்ளபடி உணர்த்துதலில் சைவ சித்தாந்தத்துக்கு எவ்வித கஷ்டமும் ஏற்படவில்லை. இந்நிலை இருப்பதால், பிரமம் பிரபஞ்சத்திற்கு முதற் காரணமாதல் செல்லாது எனத் தர்க்க ரீதியாக மறுத்து ஒதுக்குவதோடு பிரமமே முதற் காரணம் என்றதற்கு ஆதாரமாக மற்றவர்கள் காட்டும் உபநிடத மந்திரங்களையும், மாயையே முதற் காரணம் என்ற தனது கொள்கைக்கு ஆதாரமாக அணைத்துக் கொண்டு விளக்குகின்றது சைவ சித்தாந்தம்.

நாம் முன்பு குறிப்பிட்ட உபநிடத மந்திரங்களில் இரண்டு இத்தொடர்பில் கவனிக்கற்பாலன.

"யதோ வா இமானி பூதானி ஜாயந்தே யேன ஜாதானி ஜீவந்தி
யத் ப்ரயந்தி அபிசம் விசந்தி ச தத் விஜிஜ்ஞாசஸ்வ தத் ப்ரஹ்ம"

எதிலிருந்து இந்தப் பூதங்கள் தோன்றினவோ, தோன்றியவை எதனால் வாழ்கின்றனவோ, இவை மீளவும் எதனிடம் செல்கின்றனவோ எங்கு ஒடுங்குகின்றனவோ அது பிரமம் என்பது தைத்திரீய மந்திரம். இதில், தோன்றியன எல்லாம் பிரமத்திலிருந்து தோன்றின என்ற கருத்து தூல அறிவாற் காணப்படுகிறது. ஆராய்ச்சி அறிவாற் காண்கின்றபோது அனைத்தும் மாயையிலிருந்தே தோன்றியன எனக் கொள்ளுதற்கு போதிய இடமுண்டு. ஆதாரம் ஆதேயம் என்பவற்றில் ஒன்றை மற்றதன் பெயராற் குறிப்பிடும் தன்மை உலக வழக்கிலும் உண்டு. செய்யுள் வழக்கிலும் உண்டு. இங்கே பிரமம் என்ற ஆதாரத்தின் பெயரால் ஆதேயம் என்ற பிரகிருதி (மாயை)யே குறிக்கப்பட்டுள்ளது. இதற்கு இலக்கண அனுமதியும் உண்டு. இலக்கணையின் வகைகள் ஐந்தில் இது ஆதார இலக்கணை எனப்படும்.

பிரமம் — ஆதாரம் — பிரகிருதி — ஆதேயம். சிவஞான சித்தியார் 216ஆம் செய்யுளால், ஆன்மாவை முந்தனென்னும் வழக்குண்மை குறிக்கப்படுகின்றது. முந்தன — இறைவன். இறைவன் ஆதாரம்.

ஆன்மா ஆதேயம். ஆதேயமாகிய ஆன்மாவை ஆதாரமாகிய இறைவன் பெயராற் குறிப்பது ஆதார இலக்கணை. அது போல பிரமம் என்ற சொல்லாற் பிரகிருதியையே இச்சுலோகம் குறிப்பதாகத் தாரளமாகக் கொள்ளலாம். இங்ஙனம் இலக்கண வகையானன்றி அநுபவ வகையாலும் இது பொருந்துவதேயாம்.

மருந்தினால் நோய் தீர்வதாயிருக்கவும் வைத்தியனால் நோய் தீர்ந்த தென்கிறோம். இவ் உதாரணத்தில் வைத்தே மாயை பிரமங்களின் தொடர்பை விளங்குதல் சாலும், வைத்தியன் மருந்து என்பனவும் ஆதார ஆதாயங்களே. இவற்றில், மருந்து தானே நோயை அறிந்ததுமன்று. குறித்த நோய் ஒன்றுக்குக் குறித்த மருந்தொன்று, தானே தகுதியானதெனத் தானாகச் சென்று சேர்ந்தது மன்று. அறிய வல்லானாகிய வைத்தியன் அறிந்து கொடுப்ப அவன் செயலால் அது நோய் தீர்க்க வல்லதாகின்றது. நோயாளியும் உய்தி பெற வாய்ப்பாகின்றது. மருந்து — சடம். வைத்தியன் — சித்து, மருந்து — கருவி, வைத்தியன் — கர்த்தா.

இதே பாங்கில், அறிய வல்லதாகிய பிரமம் ஆன்மாவின் மல நோயை அறிந்து அதற்கேற்ற மருந்து மாயை எனக்கண்டு, உயிருக்கு அதைச் சேர்த்து விட அதன் ஆற்றலால் மாயை மலந்தீர்க்கும் வலுவுடையதாகின்றது. இங்ஙனம் உயிரின் பொருட்டு பல்வேறு உடல்களாகவும், பல்வேறு உலகங்களாகவும், பல்வேறு பொருள்களாகவும் இறைவன் சேர்த்துவிட்ட அத்தனையும் "இமானி பூதானி" என்று குறித்த சுலோகத்திற் குறிக்கப்பட்டன. இவை அனைத்தும் ஆன்மாவின் மலபரிபாகத்திற்கு உதவுவன. அதனால் மருந்துபோல் கொள்ளத்தக்கன. இவை தோன்றியது மாயையிலே தான் பிரமத்தில் அல்ல. இனி மறு உபநிடத மந்திரத்தையுங் கவனிக்கலாம்.

"யதா ஊர்ணநாபி; ச்ருஜதே க்ருஹ்யதே வா ச
யதா ப் ருதிவ்யாம் ஒஷதய; சம்பவந்தி
யதா ஸத; புருஷாத் கேச லோமானி
ததா அக்ஷராத் சம்பவதி இஹ வீச்வம்"

எவ்வாறு சிலந்தி நூலைத் தோற்றுவிக்கிறதோ, எவ்வாறு



பூமியில் பயிர்கள் தோன்றுகின்றனவோ எவ்வாறு மனிதனிலிருந்து தலைமயிரும் பிற ரோமங்களும் தோன்றுகின்றனவோ அவ்வாறு அழிவறு பொருளாகிய பிரமத்திலிருந்து இப்பிரபஞ்சம் தோன்றுகிறது, என்பது முண்டக மந்திரம். பிரமத்திலிருந்தே பிரபஞ்சம் ரம்பவிக்கின்றது என்றே இச்சுலோகங்கள் கூறுவதாகப் பொது நோக்கில் தெரிகிறது. ஆனால் ஆராய்ந்து பார்க்கும்போது பிரகிருதி என ஒன்று இங்கே உய்த்துணர வைக்கப்பட்டிருத்தல் புலனாகின்றது. உய்த்துணர வைத்தல் என்பதும் கருதிய பொருளைத் தெரிவித்தற்கு நூல்கள் கையாளும் உத்திவகைளில் ஒன்றாகும்.

சிலந்தியிலிருந்து நூல் தோன்றிற்றென்றால் சிலந்தியாகிய ஆன்மாவிலிருந்து நூல் தோன்றிற்றெனலாமோ?. வயலிற் பயிர் தோன்றிற்றென்றால் மண்தானே முளை ஆயிற்றெனலாமோ? மனிதனிலிருந்து உரோமந் தோன்றிற்றென்றால் மனித உயிரிலிருந்து தோன்றிற்றெனலாமோ? ஆகாது. பின்னை, இதனைத் தெளிவது யாங்ஙனம்? சிலந்தியின் உடலிலிருந்து நூல் தோன்றிற்று. வயலிற் பதிந்த விதையிலிருந்து முளை தோன்றிற்று. மனித உடலிலிருந்து உரோமம் தோன்றிற்று என ஆராய்ச்சி உணர்வால் அறிந்து கொள்வதே அதைத் தெளியும் வழியாகும். சிலந்தியுடல், வித்து, மனிதவுடல் மூன்றும் இதன்கண் இருக்கின்றன. ஆனால், சொல்லப்படவில்லை. யுக்தியினால் அறிந்து கொள்ள விடப்பட்டிருக்கின்றன. இதுவே, உய்த்துணர வைத்தல் ஆகும்.

வெறுஞ் சிலந்தியுடலில் நூல் தோன்றாது. உடல் முதற் காரணமாயிருக்க, சிலந்தி உயிர் நிமித்த காரணமாய் உடனிருக்கும் போதேதான் நூல் தோன்றுகின்றது. அதுபோலவே மண் குளிர்ச்சி நிமித்த காரணமாய் இருக்கும்போதே வித்தாகிய முதற் காரணத்திலிருந்து முளை தோன்றுகின்றது. அங்ஙனமே மனிதனாகிய ஆன்மா நிமித்த காரணமாயிருக்க உடலில் உரோமம் தோன்றுகின்றது. ஆதலால், சிலந்தி, மண், மனிதன் என்பன முதற் காரணம் எனக் கொள்ளுதற்கு இடமில்லையாகும். இதுபோலவே பிரமம் நிமித்த காரணமாயிருக்க அதன் சந்நிதியில் அதை ஆதாரமாகக் கொண்டு விளங்கும் மாயையிலிருந்தே

பிரபஞ்சம் தோன்றுகிறது. இந்நிலையில் மாயையே பிரபஞ்சத்திற்கு முதற் காரணமெனல் தவறு என அறியலாம்.

இனி, சத்து அசத்து என்ற உபநிடதக் குறியீடுகள் சார்பிலும் நாம் ஆவசியகம் அறிய வேண்டிய மாயாவிலக்கணம் ஒன்றுளது. மாயை இல்பொருள். வெறுந் தோற்றம் மாத்திரமே எனக் கொண்ட மாயாவாதிகள் அசத்து என்றால் இல்பொருள் என்று விட்டனர். இது பற்றிய விளக்கம், சதசத் ஆராய்ச்சி என்ற முன்னைய கட்டுரையிற் பெற்றுள்ளோம் ஆதலால் இங்கே விரிவு வேண்டியதில்லை.

"அசத்" என்ற சொல்லுக்குப் பாசம் அனைத்தும் விடயமாமினும் சந்தர்ப்பத்திற்கேற்ப இங்கு மாயையை மட்டுமே கருத்திற் கொள்வோம். மாயை இல் பொருளாதல் எவ்வாற்றானும் ஒவ்வாதென்பது மேற் கண்ட விளக்கங்களால் இனிது பெறப்படும் எனினும், இனியுஞ் சிந்திக்க இடமுண்டு. இல்லாதவொன்று எந்தவொரு காரியப் பாட்டுக்கும் உதவியதில்லை. ஆகாயத்தாமரை என்றாமினும் மாலை தோன்ற உதவியதில்லை. ஆகாயத்தாமரை இல்லை. அதனால் மாலையும் இல்லை. அதுபோலவே மாயை இல்லையெனில் பிரபஞ்சமும் இல்லை என்றாய் விடும். பிரபஞ்சம் இல்பொருள் என்பதாமின் மாயாவாதிகளுக்குப் போல எல்லோர்க்கும் அது வெறுந் தோற்றமாதல் வேண்டும். அது சுருதி யுக்தி அநுபவம் மூன்றுக்கும் ஒவ்வாததாய் இருக்கின்றது.

பிரபஞ்சம் என்றும் இருந்து கொண்டே இருக்கிறது. அதனால் அதன் முதற் காரணமாகிய மாயையும் என்றும் இருந்து கொண்டே இருப்பதாகும். அதனாலன்றே எல்லா ஆகமங்களும் ஒரே குரலாக மாயை நித்தியம் என்றுள்ளன. மாயை உள் பொருளே எனினும் என்றும் ஒரே தன்மையான உள்பொருள் அன்று.

பிரபஞ்சம் தோன்றிமிருக்கும்போது மாயை தூலமாகிய உள்பொருள், பிரபஞ்சம் ஒடுங்கிமிருக்கும்போது அது சூக்குமமாய உள்பொருள். எனவே, அதன் நித்தியத்திறகென்றும் குறைவில்லையாம். ஆதலில் அசத்தென்பதற்கு இல்பொருள் என்றல் பொருந்தாது என்பதே சைவசித்தாந்தத் துணிபு.



மாயையின் நித்தியத் தன்மைக்குப் பங்கம் ஏற்படாத வகைமில் சைவ சித்தாந்தம் "அசத்" என்ற சொற்குப் பொருள் கொண்டிருக்கும் அருமை அறியத்தக்கது. சைவசித்தாந்தத்தின்படி "அசத்" என்றும் ஒரு படித்தாய் இல்லாத உள்பொருள். அதாவது, ஒருகால் வெளிபட்டுத் தூலமாயும் ஒருகால் ஒடுங்கிச் சூக்குமமாயும் நிலைக்கும் உள்பொருள்.

மாயை அவ்வியல்பினது. ஆகவே அது அசத், பிரமம் அதற்கு நேரெதிரானது அதாவது நிர் விகாரமாய் என்றும் ஒரு படித்தாய் நிலைத்திருப்பது. ஆதலால் பிரமம் "சத்". மாயை "அசத்" எனப் பெற்ற காரணம் இதனால் விளக்கமாகிறது. சத் என்பதன் பொருட்கு விடயமாகிய பிரமத்திற்குப் பரிணாமங் கூறுதல் அடாது என்பது இதனாலும் பெறப்படும்.

நிர்விகாரம் — நிலைவேறுபடாமை, பரிணாமம் — நிலை வேறுபடுதல். இரண்டும் ஒன்றிற் காணப்படுதல் அசம்பாவிதம் அன்றோ.

மாயா வியவகாரம் என்ற விடயம் மாயையின் வியவகாரம் ஆதலோடு மாயாத வியவகாரமும் ஆதல் சிந்திக்கத்தக்கதாகும். எனினும் ஓரளவுக்கு அது பற்றிய முக்கிய அம்சங்கள் இக்கட்டுரைத் தொடரில் ஆராயப்பட்டுள்ளன. அவை வருமாறுவ —

1. வேத சங்கிதைமிலும், உபநிடதத்திலும் மாயை என்ற பதப் பிரயோகம்.
2. ஆகமங்களில் மாயை பற்றிய விளக்கம்
3. கந்தபுராணத்தில் இடம் பெறும் மாயை மூலம் மாயாவிலக்கணம் அறியப்படுமாறு
4. வேதாந்தியரும் பாஞ்சராத்திரரும் மாயை பற்றிக் கொண்ட கருத்து முரண்பாடுகள்.
5. மாயை பற்றிய விளக்கத்தில் சைவசித்தாந்தத்தின் நிலை.
6. ''சதசத்'' நோக்கில் மாயையின் பொருள் நிலை.

---

# 8. திரோதான மான்மியம்

"ஹிரண்மயனே பாத்ரேண சத்யஸ்ய அபிஹிதம் முகம்
தத் த்வம் பூஷன் அபாவ்ருணு சத்ய தர்மாய த்ருஷ்டயே"

— பொன்மயமான ஒரு பாத்திரத்தினால் சத்தியத்தினுடைய முகம் மறைக்கப்பட்டிருக்கிறது. ஓ பூஷன் நாம் சத்தியத்தை தரிசிப்பதற்கு உபகாரமாம்படி அதனை விலக்கி விடுவாயாக என்பது ஈசா வாஸ்ய உபநிடதத்தில் பதினைந்தாம் மந்திரம் மெய்ப்பொருளைத் தரிசிக்க முயலும் தியானயோக அனுபவசாலி ஒருவர் அதற்கு முன்னோடியாகத் தான் பெற்றுள்ள தத்வ தரிசனத்தின் முடிவிற் செய்து கொள்ளும் ஒரு பிராத்தனையாகத் தோன்றுகிறது இம்மந்திரம்.

உயிரிடத்துள்ளதென்று பெரும்பான்மையாக ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கும் மறைப்புத் தன்மைக்குக் காரணம் ஆணவம் என்பர் ஆணவத்தை இருண்மலம், கருமலம், அஞ்சனம் என்பதே வழக்கம். இங்கு பொன்மய பாத்திரம் என்ற சொல்லாற் குறிக்கப்படுவது அதுவாதல் பொருந்தாது. ஆதலின் இப் பொன்மயமான பாத்திரம் எதுவென்பது சிந்தனைக்குரியதாகும். இதை இனங்கண்டு கொள்ளல் இன்பம் பயப்பதாகும்.

இது இவ்வாறாக, இத்தகைய தியான யோக அனுபவசாலியாகிய மற்றொருவரின் அநுபவம் பின்வருமாறு காணப்படுகின்றது.

தே த்யான யோகா நுகதா அபச்யன்
தேவாத்ம சக்திம் ஸ்வருணைர் நிகூடாம்
ய; காரணானி நிகிலானி தானி
காலாத்ம யுக்தான் யதிதிஷ்டத் யேக;

தியான யோக சாதனையாளர்களாகிய ரிஷிகள் இறைவ னுடைய சக்தியைக் கண்டார்கள். அது உயிர்களின் சிற்றறிவுக்கறிய வாராத அளவுக்கு அவற்றின் குணங்களினால் மறைக்கப்பட்டதாய் இருந்தது. அச் சக்தியாளனாகிய இறைவனே கால ஆத்ம தத்துவங்களோடு கூடிய அனைத்தையும் நிர்வகித்து நிற்பவனாவான்



என்கின்றது சுவேதாஸ்வதர உபநிடதம் 1 ஆம் அத்தியாயம் 3 ஆம் சுலோகம். இச்சுலோகத்தில் வரும் "ஸ்வகுணைர் நிகூடாம்" என்ற தொடர் தனது குணங்களால் என்றும் தமது குணங்களால் என்றும் இரு வகையில் பொருள் கொள்ள நிற்கும். நிகூடா என்ற சொல்லும் மறைப்பது மறைக்கப்பட்டது என இரு பொருள் கொள்ள நிற்கும். இவ்வாறிருத்தலால் ஸ்வகுணை; நிகூடாம் என்ற **தொடர்:—**

1. தனது குணங்களால் மறைப்பது
2. தமது(உயிர்களின்) குணங்களினால் மறைக்கப்பட்டது

என இரு பொருள் தரக்கூடியதா யிருக்கின்றது. இவ்விரு பொருளும் பிரதானமானவையே என்பது பின்னால் அறியவரும்.

இவ்வகையில் தேவாத்ம சக்தி உயிரோடு உடனாய் நிற்பதென்பதும் பெறப்படுகின்றது. இச்சக்தியை ரோத சக்தி ரோதயித்ரீ என்ற பெயர்களால் ஆகமங்களில் குறிப்பிடக் காண்கின்றோம்.

இச் சொற்கள் "ருத்" என்ற வடமொழி வினையடியிலிருந்து தோன்றி, தடு, மறை என்ற தமிழ் வினையடிகளில் தோன்றும் கருத்தாப் பெயர்ப்பொருள் தருவன. இவற்றில் மறை என்பது மறைப்பது, மறைக்கப்படுவது, என்ற இரு பொருட்கும் பொதுவாயிருத்தல் குறிப்பிடற்பாலதாம். சித்தாந்த நூல்களில் இச்சக்தி திரோதாயி, திரோதானம் என்ற பெயர்களால் குறிப்பிடப்படுகின்றது. இச்சொற்கள் திரோதா (திரஸ் + தா) என்ற கூட்டு வினையடியில் தோன்றியவை. இத் திரோதா என்பதற்கு மறை (to hide, to conceal) ஒளி (to disappear, to vanish) என்ற இரு பொருளும் உள்ளன. அவ்வகையால் மறைத்தல், மறைத்திருத்தல் என்ற இரு பொருட்கும் பொதுவாகத் திரோதானம் என்ற சொல் நிலைபெறக் காண்கிறோம்

இவ்வளவில் மேற்குறித்த சுவேதாஸ்வதர உபநிடத மந்திரத்தில் "ஸ்வகுணை; நிகூடா எனப்பட்ட தேவாத்ம சக்திப் பண்பும் சித்தாந்த நூல்களில் திரோதானம் என்று குறிக்கப்படும் சிவசக்திப் பண்பும் ஒன்றாதல் காண்கின்றோம். இதன் பண்புகள் இரண்டில் தன் குணங்களினால் மறைத்தல் என்ற பொருள்

வெளிப்படையானது. அதன் விபரம் பின்னால் அறிவோம். உயிர்க்குணங்களினால் மறைக்கப்படுதல் என்றதன் விளக்கம் இச்சக்தியின் தன்மையைத் தானும் அநுசரிப்பது போல் வெளிப்படையாகாமலே உள்ளது. எனினும் மறைந்திருப்பது என்ற திரோதானச் சொற்பொருள் விளக்கில் அறியப்படக்கூடியதாய் விடுகின்றது. இத்திரோதானம் தெய்வசக்தி. ஆதலால் இது பிற சக்திகளால் மறைக்கப்படும் என்றல் பொருந்தாது ஒளியை இருள் மறைத்தல் எவ்வாற்றானும் இல்லாத காரியமே. இத்தொடர்பில் தணிகைப்புராணச் செய்யுள் ஒன்றை கவனித்தல் பொருந்தும்.

"விழிப்புணர்ப்புறு மிருளென விரவிய தன்னை
அழிப்ப முற்றிய சத்தியுந் தன்வழி யாக்கி
ஒழிப்பின் மூன்றிடத் திருதிறத் தவத்தை யோரைந்தும்
கழிப்பி லாதுயி ருறப்பல சத்தியிற் கதுவும்"

கண்ணைக் கவ்வும் இருள் போல உயிரைக் கவ்விக் கலந்து கொண்டிருக்கும் ஆணவமாகிய தன்னை அழிக்கும் பொருட்டாகச் சேர்ந்த இறைவன் சக்தியையும் தன்வழி நிற்பதாக்கி எல்லாவித அவஸ்தைகளும் உயிர்க்கேற்படுமாறு பல்வேறு சக்திகளால் அந்த ஆணவம் கதுவிக்கொண்டிருக்கும் தணிகைப்புராணம் நந்தியுபதேசப்படலம் செய் 104 குறித்த திரோதான சக்தியின் இயல்பு இங்கு ஆணவத்தின் தொடர்பில் வைத்து உணர்த்தப்படுகின்றது தன்னை அழிப்பதற்காகச் சேர்ந்த சிவசக்தியை ஆணவம் தன்வழிநிற்கச் செய்கிறதாகக் கூறுகிறது இச்செய்யுள். இப்படி இருளாகிய ஆணவத்திற்கு ஒளியாகிய சிவசக்தி பின்னிற்குந் தன்மை சித்தாந்தத்து அற்புதப் புதிர்களில் ஒன்று.

இந்த ஆணவமே ஒரு அற்புத வஸ்துவாக இருப்பது கணவர்க்குந் தோன்றாத கற்பாஸ்திரி என்ற பிரத்தியேகமான ஒரு புகழ் அதற்குண்டு. தன்னைக் கொண்டவனாகிய உயிர்க்குந் தோன்றாமல் மறைந்திருப்பது ஆணவம். அத்தன்மையில் அவ் ஆணவத்தையும் வென்று விடுகின்றது இத்திரோதானம். தன்னை ஒளித்த கள்வியாகிய ஆணவத்துக்குப் பின்னே தானும் ஒரு கரந்துறை செல்வியாக அமைகின்றது. இச்சக்தி. அதற்குத்



தக்க ஆற்றல் அதற்குண்டு. அந்த ஆற்றற் பெருமையை அறிவித்தற்கே "ஸ்வகுணைர் நிகூடா" என அதனை அறிவித்தது சுவேதாஸ்வதர மந்திரம். இதனால் ஆணவம் அதனை தன் வழிப்படுத்திக் கொண்டதென்பது உபசாரம். அதுவே தானாக ஆணவத்தின்பின் நின்றதென்பதே உண்மையாதல் புலனாகின்றது. இங்ஙனம் ஆணவத்தின் பின் நின்றதென்றதனாலே அந்த ஆணவத் தன்மையாகிய மறைத்தல் தொழிலுக்கு உபசரிப்பதே இதன் தன்மையும் எனத் தெரிகிறது. அது அதற்கின்றியமையாத ஒரு நியமமாகும்.

எவ்வாறெனில், சித்தினுடைய சேர்க்கையில்லாமற் சடம் தொழிற்படாதென்ற அறுதியிடப்பட்ட உண்மையினாலாம். ஆணவம் சடம் அதன் மறைத்தற் சக்தி இதனாலேயே செலுத்தப்படுகின்றது. அது மறைக்குமளவுக்கு இதுவும் மறைத்தலையே செய்கின்றது எனவுஞ் சொல்லலாம். குறித்த செய்யுளில் ஆணவத் தொடர்பில் வைத்து இச் சக்தியியல்பு உணர்த்தப்பட்டதிலிருந்து மறைத்தலும் தான் மறைந்திருத்தலும் ஆகிய இரண்டும் இதன் பண்பாதல் இனிதில் அறியக்கிடக்கின்றது. தான் சார்ந்த உயிரறிவை மறைத்தலோடு தன்னையும் மறைத்து வைத்திருக்கும். ஆணவச் சார்பில் அவ்விரு தன்மையும் தன் தன்மையாகக் கொண்ட இச் சக்தியியல்பைத் தோற்ற வைத்தமை இச் செய்யுட்கு ஒரு சிறப்பாகும்.

மிருகேந்திரம் என்ற ஆகம நூலில் பாசலக்ஷணப் பிரகரணம என்பது ஒரு பகுதி. அப்பிரகரணத்திலும் ஆணவத் தொடர்பில் வைத்தே திரோதான சக்தியின் இயல்பு பேசப்பெறுகிறது. அது ஏன் தான் மறைந்திருக்கிறது? என்ற ஆசங்கையும் அங்கே விடுவிக்கப்படுகின்றமை காணலாம். அப்பிரகரணத்தில் முதற் பத்துச் சுலோகங்களில் ஆணவ இலக்கணம் தெரிவிக்கப்பட்டுப் பதினோராம் சுலோகம் பின்வருமாறு அமைகின்றது.

"தாஸாம் மாஹேஸ்வரி சக்திஸ் ஸர்வானுக்ரஹா சிவா
தர்மானு வர்த்தனாத் ஏவ பாசஇத் யுபசர்யதே"

அவ்வாணவ சக்திகளுள் நின்றியலும் மாஹேஸ்வர திரோதான

சக்தியானது எல்லாவகையாலும் உயிர்க்கு அநுக்கிரகிக்கும் முகாந்திரம் உள்ளதாய் சிவத்தன்மை வாய்ந்ததாய் இருந்தும் உயிரின் ஞானக்கிரியா சக்திகளை மறைக்கும் ஆணவ தர்மத்தின் வழி நிற்பதால் பாசம் என்று உபசாரமாகச் சொல்லப்படுகின்றது என்பது அச்சுலோகம். இதில் வரும் "தர்மாநுவர்த்தனம்" என்ற தொடர் முக்கியமானது. முன்கண்ட தணிகைப் புராணச் செய்யுளில், தன்னை அழிப்ப முற்றிய சக்தியுந் தன்வழியாக்கி என்ற வசனப் பொருளின் அந்தரங்கத்தை இது வெளியாக்குகின்றது. இது ஆணவத்தின் பின்நிற்குந்தன்மை ஆணவத்தால் விளைந்ததன்று. இது தன்னளவில்தான் மேற்கொண்டதே என்ற உண்மையியல்பு வெளியாகிறது. திரோதானம் பாசம் போலக் கருதப்பட்டுப் பஞ்ச மலங்களில் ஒன்றாக எண்ணப்பட வந்த காரணமும் இத்தொடரால் விளக்கப்படுகின்றது. தத்தர்மம் — ஆணவதர்மம். அநுவர்த்தனம் — தொடர்ந்தியலல், அநுசரித்தல், வழிநிற்றல்.

இங்ஙனம் அநுவர்த்தித்து நின்று கொண்டே அத்திரோதான சக்தி நிகழ்த்தும் தொழிற்பாடும் அதன் நுட்பங்களும் அவைபற்றிய விளக்கங்களும் மேல் பன்னிரண்டு சுலோகங்களிற் பேசப்படுகின்றன.

அநுவர்த்தித்து நின்று கொண்டு அது மல சக்திகளைப் பரிணமிக்கச் செய்கின்றது. (பரிணமித்தல் — பக்குவமாதல்) கூட இருந்த குற்றத்துக்காக எள்ளோடு எலிப்பிலுக்கையுங் காய்தல் போல இத்தொழிலில் தான் ஈடுபட்டதால் பாசம் எனப்பட்டதே தவிர அது தன்னுண்மையில் அருட்சக்தியேதான். அது மலத்தை பரிணமிக்கச் செய்வதால் மலத்துக்கு அநுக்கிரகித்து அதன் வாயிலாக உயிரை வருத்துகிறதே. அது அநுக்கிரகமாகுமா? என்றால் மலத்தை பரிணமிக்கச் செய்வது மலத்துக்கு அநுக்கிரகம் பண்ணவல்ல அவ்வகையில் அம்மலசக்திகளைத் தொழிற்படுத்தி அவை தாங்களே தம்பாட்டில் தேயும்படி செய்து உயிரை அம்மலப் பிணிப்பிலிருந்து விடுவிப்பதற்காக ஆதலால் அது உயிருக்கு அநுக்கிரகம் தான். விரண வைத்தியன் ஒருவன் விரணத்திலுள்ள சவ்வு முதலியவற்றை நீக்குவதற்காகக் காரம் போன்றவற்றை இட்டு நோயாளியை வருத்தல் போல நிகழ்வது இதுவாகும். ஆதலால் அச்சக்தி மலத்தைப் பரிணமிக்கச் செய்தல் அதன்



அநுக்கிரகத் தன்மைக்கு விரோதமாக மாட்டாது. இப்படியான அச்சக்தியின் கைங்கரியம் மலசக்திகள் மடங்கும் வரைதான் நிகழும். அதன் மேல் அது தன் சுயநிலையிற் பராசக்தியாய் விளங்கும்.

இவ்வுண்மைகள் மிருகேந்திர பாசலக்ஷணப் பிரகரணத்தில் உள்ளன. இவற்றுக்கு வேறான திரோதான உண்மைகள் பிற ஆகமங்களிலும் உள்ளன. அவற்றிலுஞ் சிலவற்றை அறிதல் நலமாகும்.

"ரோயித்ரீ அணுசங்கஸ்ய ப்ரளயே நியமஸ்திதிம்
போகேஷ் வபிரதஸ்யாபி விததாதி யதஸ் தத:"

ஆன்மாக்களுக்கு அவையவை நிற்கும் அவ்வவ் விஸ்தானங்களுக்கு ஏற்றவாறு போகங்களிலே நியதிப் பிரகாரத்தை அச் சக்தி கொடுக்குங் காரணத்தால் "ரோதயித்ரீ" என்று பெயர் பெறுகிறது.

— பௌஷ்கராகம பதி படலம் 75

ஆன்மாக்களைப் போகங்களில் நிறுத்தல் இச்சக்தியின் தொழில் என்பது இச்சுலோகந் தரும் விளக்கம். போகங்களில் நிறுத்தல் என்பது பற்றிய விளக்கத்தைச் சற்று விரிவாகத் தெரிந்து கொள்ளுதல் நலம். போகங்கள் இருவகையானவை. அவற்றில் இன்ப போகங்கள் பிரீதிகரமானவை. ஆனால் அவற்றையடுத்து வரவிருக்கும் துன்பபோகங்கள் அதற்கு நேர்மாறானவை. பிரீதிகரமான போகங்களில் ஆன்மா விரும்பி நிலைத்தல் சாலும். ஆனால் அந்நிலையிலும் தொடர்ந்து வர இருக்கும் துன்ப அநுபவங் காட்சிப் படுமானால் உயிருக்குத் தான் நிற்கும் இன்ப போகத்திலே மனம் லயிக்காமற் போய்விடும், அதற்காக அது தோன்றாமல் மறைக்க வேண்டும். அந்த மறைப்பு நிறுத்தலின் விசேட பண்பாயிருக்கும். இனி இன்பாநுபவம் முடிந்து துன்பாநுபவத்தில் நிலைப்பதென்றால் உயிர்க்கு மிகக் கஷ்டமாயிருக்கும். அந்நிலையில் ஏதேனும் தந்திரங்களால் அதற்கு மனமயக்கத்தையோ வைராக்கியத்தையோ ஊட்டி அதே போகத்தில் நிலைக்கச் செய்ய வேண்டும். இது நிகழா விட்டால் துன்ப போகங்கள் முறைப்படி அனுபவித்தொழிய

மைப்படாமை காரணமாகப் பிறவி நீடிக்கும். இங்ஙனம் அத்திரோதான சக்தி எது செய்யினும் அது ஏதேனுமொரு வகையில் மறைப்புடன் கூடியதாகவே இருத்தல் அறிதற்பாலதாகும்.

"திரோதாயி நிறுத்தலாகும்" எனச் சிவப்பிரகாசம் 18 ஆம் செய்யுள் கூறுவதும் குறித்த இச்சுலோகப் பொருளும் ஒன்றே.

இப்பொருளுண்மை இதனினுங் கூடிய அழுத்தத்துடன் மதங்க பாரமாஸ்வரம் என்ற ஆகமத்தில் இடம்பெற்றிருக்கக் காண்கிறோம்.

''ரோதயாத்ரீ யா பத்யு ராவ்ருத்ய ஜகதோ துரம்
ருணத்தி ஸ்திதயே அத்யர்த்தம்
நேச் சன்னபி பசும் பலாத்''

— பர்த்தாவின் சத்தியாகிய ரோதயித்ரீ என்பது உயிர்களை ஊட்டும் பொறுப்பைத் தானே வகித்துக் கொண்டு விரும்பப்படாத விஷயங்களிலுங் கூட உயிரைப் பலவந்தமாகத் தடுத்து நிறுத்தி அநுபவிக்கச் செய்கின்றது.

— மதங்கபாரமேஸ்வரம் சக்திபடலம் 38

மேற்கண்டவாறு போகத்தில் நிறுத்தல் என்னும் விஷயத்திற் பலவந்தம் பிரயோகிக்கப்படுமாற்றை இது தெரிவிக்கின்றது. குழந்தையை அடித்து அடக்கி வைத்து மருந்தூட்டுவது போல்வது இது. இதுவெல்லாம் உயிரின் ஈடேற்றமான முடிவான நன்மைக் காதலின் குறித்த ஒருயிர் ஈடேற்றம் பெற்றபின் இது மருந்தூட்டியவாறன்று. சர்க்கரை தீற்றியவாறு என எண்ணி இறும்பூதெய்தவரும் என்பதையும் அறிதல் நலம். 'அடித்து அடித்து அக்காரம் முன் தீற்றிய அற்புதம் அறியேனே' குரம்பையிற் புகப்பெய்து அடித்தடித்து அக்காரமுன் தீற்றிய அற்புதம் இது என்கிறார் மாணிக்கவாசக சுவாமிகள். இத் திரோதானத் தொழில்கள் ரோதயித்ரீ சக்தியால் கோப்த்ரீ முதல் ச்ரத்தா ஈறான வெவ்வேறு ரூபங்களில் இயலும் வகையையும் இவ்வாகமம் விஸ்தரிக்கக் காணலாம்.



"தர்மா தர்ம விபாகேஷு போக்து ரப்யுத்யதஸ்ய ஹி
அஸமஞ்சஸ ஹானார்த்தம் ரக்ஷணாய ச ஸர்பிதா
கோப்த்ரீ சோபயிதும் சக்தா ஜகத் ஏதத் சராசரம்"

தர்மா தர்ம அநுபவங்களில் முயல எத்தனிக்கும் உயிருக்கு அப்போதைக்கப்போது உசிதமல்லாததை மறைத்து உசிதமானதில் மட்டும் அநுபவம் நிகழப் பண்ணிக் கொண்டிருக்கிறது கோப்த்ரீ சக்தி என்கின்றது 42 ஆம் சுலோகம் போகாநுபவத்தை அச்சக்தி தன்கட்டுப்பாட்டின் கீழ்க்கொண்டிருக்கும் திறம் இதனாற் பேசப்படுகின்றது.

இனி 59ஆம் சுலோகத்தில் "ச்ரத்தா" என்ற ஒரு சக்தியின் பேரால் திரோதானத்தின் அதிமுக்கிய அம்சமொன்று உணர்த்தப் படுகின்றது. சிலர் மனப்பூர்வமாக விரும்பி நாடும் சில போகங்களைப் பலர் பார்த்து அருவருக்கிறார்கள். அதனால் அவர்களை அவமதித்தலுஞ் செய்கிறார்கள். ஆனால் அதில் சம்பந்தப்படுபவர் களுக்கோ அது சற்றும் தெரிவதில்லை. அம்மட்டிலுமல்லாமல் அப் போகங்களில் அவர்களுக்கு அத்தியந்தமான இரசனையுமல்லவா ஏற்பட்டு விடுகிறது. தம் இயல்பைத் தடுக்கவோ புத்தி சொல்லவோ முயல்வார்மேல் வஞ்சஞ் சாதிக்கவும் அவர்கள் பின் நிற்பதில்லை. அவ்வளவுக்கு அவ்விடயங்களில் அவர்களுக்குச் சுவை தழும்பிப் போய் விடுகின்றது. குடித்துக் களித்துக் கேவலமான கோலத்தில் நிற்பவனைப் பெற்றதாயே முகங்கொடுத்துப் பார்க்க நாணுகிறாள் என்கிறார் திருவள்ளுவர். ஆனால் அவனுக்கோ அதுபற்றிய பெருமிதமே தலை தூக்குவதன்றித் தாழ்வுணர்வு தலைக்கொள்வ தில்லை. ஏன் இப்படி? இதன் இரகசியத்தை அச்சுலோகம் அழகாக வெளிப்படுத்துகின்றது.

"குத்சிதேஷு அபி போகேஷு சிரத்தயா ஆத்ம சீக்ருத
ஸ்வாசாரம் அவமத்யாசு தத்வ்ருத்தௌ சம்ப்ரவர்ததே"

இந்த உயிரானது சிரத்தை என்ற சக்தியினால் வசீகரிக்கப்பட்டுத் தனக்குள்ள ஆசாரம் அனைத்தையும் அவமதித்து அருவருப்பான போகங்களில் ஆவலாய்ப் பிரவர்த்திக்கின்றது என்பது இச்சுலோகம்.

இங்ஙனம் இத்திரோதானம் சுவை பிறப்பிக்கும் பாங்கைப் போகத்தில் அழுத்தல் என்பர் சித்தாந்திகள். போகத்திற் சுவை பிறப்பித்தல் என்பர் நிரம்ப அழகிய தேசிகர் "இச்சையினச் சுறுவித்தல்" என்பர் தத்துவப்பிரகாசர்.

திரோதான சக்தி இயல்புகளை விரிவாகக் கூறுகின்றது தத்துவப்பிரகாசம் என்னும் சைவ சாஸ்திரநூல். இந்நூலின் 37ஆம் 38ஆம் செய்யுள்கள் திரோதான இலக்கணங்களைப் பகுத்து வகைப்படுத்துந் திறம் அவதானிக்கற் பாலதாகும். அது கூறுமாறு:-

திரோதானமானது மலமென்று பெயர் பெறினும் இறைவனது சக்தியாம். இது ஆன்மாக்களை கன்ம மலம் பற்றியிருக்குமளவும் மறைத்து மலச்செறிவு நீங்குமளவும் உயிரின் விரோதி போல மறைவாக மறைத்து நின்று கொண்டிருக்கும் அந்தத் திரோதானமே மாயையிலிருந்து கலாதி தத்துவங்களைத் தோற்றிக் கொடுப்ப அவற்றின் உதவியால் உயிர் வேதகலைகளை எல்லாங் கற்றுத் தேறிய பொழுதிலும் கன்மம் இருக்கும் வரை இத்திரோதான சக்தியே உயிருக்குச் சிவனைத் தோன்ற விடாமல் மறைத்துக் கொண்டிருக்கும் அதனால்தான் இம் மேலான அருளை மலமென்றும் சொல்லுகிறார்கள். இதே சக்திதான் இருவினையொப்பும் மலபரிபாகமும் உயிர்க்கு நிகழும்போது சிவனையுந் தெரிந்து கொள்ளும்படி பராசக்தியாய் நின்று கருணை செய்யும்.

இத்திரோதானத்திற்கு

1. உருவம் — இருளும் ஒளியுமாயிருத்தல்
2. சொரூபம் — கண்ணாடி போல வழிபடுவார்க்கு வெளிப் பாயும் மற்றையோருக்கு இருளாயுமிருத்தல்
3. சுபாவம் — ஆணவமலத்தின் குணமாயே நிற்றல்
4. வியாத்தி — பராசக்தியினுள் அடங்கியதாயிருத்தல்
5. வியாபகம் — கூகையின் கண்ணில் சூரியன் புலன்படு மாறு போல இருளாகத் தோன்றுவித்து நிற்றல்
6. குணம் — உயிர்க்கு இருவினை யொப்பு வருவித்தல்
7. விசேடம் — சேர்ந்த சேர்ந்த கன்மத்தை ருசிப்பித்தல்



8. நிறம் — ஞான வடிவாயிருத்தல்
9. தரிசனம் — சத்திநிபாதம்
10. சுத்தி — திருவருளல்லது மலமல்ல என்னும் தெளிவு

இச்செய்யுள்களால் திரோதானத்தின் இலக்கணத்தை இங்ஙனம் வகைப்படுத்துணர்த்தும் தத்துவப்பிரகாசர் மற்றோர் செய்யுளில் திரோதானத்தை தொழில் வகையால் ஜவகைப்படுத்தி உரைப்பர்.

உத்தமமாம் திரோதானம் வெளியை இருளாக்கல்
உயர் பொய்யை மெய்யாக்கல் கலாதிகளில் நிறுத்தல்
எத்தனையோ தத்துவத்தும் இறையுணரா தாக்கல்
இச்சையினச் சுறுவித்தலென ஐந்தாம் வகையே

என்பது அச்செய்யுட் பகுதி.

"பொய்யை மெய்யாக்கல்" என்ற காரியம் இன்றைய எமது நாடோடி அநுபவத்தில் தண்ணீர்பட்ட பாடாயிருக்கிறது. எத்துறையிலும் அரைப்பொய்யும் (quasi lie) காற்பொய்யும் (quarter lie) ஆவது இடம்பெறாமல் இருப்பதில்லை. கீழ்மட்டத்திலுஞ்சரி, மேல்மட்டத்திலுஞ்சரி, உயர் மட்டத்திலுஞ்சரி இது ஒரு வாழ்க்கைக் கலையாகத் தாண்டவமாடுகிறது. இது ஏன் இப்படி என்றால் இது திரோதானத்தின் தொழிலே என்று தெளிவாகக் கூறுகின்றார் தத்துவப் பிரகாசர்.

இவ்வளவும் திரோதான சக்தியின் இயல்புகளை ஒரு வகையில் அலசிக் கண்டு கொண்டோம். விஷயத்தை முடிக்கு முன், திரோதான இயல்பு பற்றி பொதுவாக எழும் ஒரு ஆசங்கையை விடுவிக்க வேண்டும்

ஏன்? இச்சக்தி வெளிவெளியாய் நின்று தன் செயல்களை நிகழ்தலாகாதா? மறைந்தே தான் நிற்கவேண்டிய அவசியம் யாது? என்பது ஆசங்கை.

இச்சக்தியின் நோக்கம் உயிரை விடுதலை அடையச் செய்வதே. அதாவது, உயிரைக் கவ்வியுள்ள ஆணவத்தை நீக்குதலே. சூரியன் தன் இயல்பில் எதிர் தோன்றிய அளவிலே

இருள் விலகிப் போகின்றது. அது போல் இச்சக்தியும் தன் இயல்பில் எதிர் நிற்குமானால் ஆணவம் விலகாமலிருக்க முடியாது. ஏனெனில், சூரியன் போல ஒளிமயமானது இச் சக்தி, இருள் போல இருண்மயமானது ஆணவம் என்ற ஒப்புமையால். ஆனால், வெறுமனே ஆணவத்தை விலக்குதல் மட்டும் இதன் நோக்கமன்று. உயிரின் கன்மானுபவம் அறுதியாய்க் கழியும் வரையும் ஆணவத்தை வைத்து அதற்கு சிசுரூஷை (nursing) பண்ணுவதும் அதன் நோக்கமாகும். அன்றியும் ஆணவச் சார்பினால் உயிரிடத்தில் ஏற்பட்டிருந்த கோணல்கள் (சிந்தைத் திருகு) விகாரங்கள் அகங்கார மமகாரங்கள் முதலிய அத்தனையும் போயொழிய வேண்டும். அப்போது தான் உயிருக்குச் சாஸ்வதமான விடுதலையாகும்.

சத்தினியல்பை அவமதித்து அசத்தினியல்பை நாடுதல் உயிரினிடத்து விளைந்த ஒரு கோணல். பொருள் அல்லவற்றைப் பொருளென்றுணரும் 'மருள்' என இதனை வருணிப்பர் திருவள்ளுவர். காமம், குரோதம், லோபம், மோஹம், மதம் மார்ச்சரியம் என்பன ஆணவச் சேர்க்கையால் உயிரில் விளைந்த விகாரங்கள். எதற்கும் "நான்" என முனைந்து எழுவது அதன்பாலுற்ற அகங்காரம். தன்னைச் சார்ந்த எதனையும் "எனது" என்று அபிமானித்தல் அதற்கேற்பட்ட மமகாரம். இந்த மமகாரங் காரணமாக ஆசை, கோபம், வாட்டம், அசூயை, ஈர்ஷ்யை முதலான எத்தனையோ தீக்குணங்கள் அதிற்படிந்து விடுகின்றன.

அசூயை என்றால் பொறாமை. அதாவது பிறர் ஏற்றங் கண்டாற் சகிக்கமாட்டாமை. ஈர்ஷ்யை என்றால் தான் படுங் கஷ்டநஷ்டங்கள் தன் அயலோனும் படவேண்டும் என்னும் துர்ப் பாக்கியவசமான ஒரு மனோபாவம். ஆகத்தீரக் கெட்ட கொடிய குணம் இதுபோல் வேறெதுவும் இருத்தல் இயலாது. இப்படி இவைகளெல்லாம் விளைந்தது இந்த ஆணவத்தினால் தான்.

இத்தனையும் பற்றறக் கழிவதானால் முதலில் ஆணவ சக்திகள் பெருகிக் கன்மத்தில் ஊக்குவிக்க வேண்டும். அக்கன்ம அனுபவம் மூலமாகவே மலசக்தி தேயவேண்டும். மலசக்திகள் தேயுந்தோறும் மேற்கண்ட தீயியல்புகள் படிப்படியாகக் குறையும் வாய்ப்புண்டு. அவ்வகையில் மலசக்தி முழுதும் தேயவே தீக்குணங்களும் முற்றாய் அகலும். அவை அகன்ற பின்னே உயிர் சுத்தமாகும். சுத்திபெற்ற உயிர் மட்டுமே சிவனருளுஞ் சிவானந்தத்தை அநுபவிக்கத் தகுதியாகும்.



விஷயம் இவ்வாறிருக்க, திரோதான சக்தி எடுத்த எடுப்பிலேயே தான் வெளிநின்று மலவிருளைப் போக்கி விட்டால் என்னாகும்! இவ்வாறான அகச்சுத்தம் ஏதும் ஏற்பட வாய்ப்புண்டாகுமா? ஏலவே உயிரிற் பட்ட தீக்குணங்கள் தீக்குணங்களாகவேயிருக்கப் புறத்தொடர்பளவில் ஆணவம் நீக்கப்படுவதாகில் உட்சுவரிருக்கப் புறச்சுவர் பூசியவாறாய் முடியும். அதற்காகவேதான், திரோதான சக்தி தான் மறைந்து நின்று மேற்காட்டியவாறான நிரந்தர நன்மையை உயிர்க்கு விளைக்க வேண்டியதாயிற்று.

சுத்தநிலை அடைதல் சார்பாக உயிர்பெறும் திருத்தம் ஒவ்வொன்றும் உயிருணர்விற்பட்டு நிகழும் திருத்தமாதல் வேண்டும். அதாவது உயிர் பட்டுக் கெட்டு அலுத்தும் உவர்த்தும் வருந்திப் பெறும் திருத்தமாதல் வேண்டும் என்பதே சைவ ஞானம். இந்நிலையை அநுசரித்தே திரோதானத்தின் செயற்பாடு அமைந் திருத்தல் கருதத்தக்கதாகும்.

இனி சக்தி வெளிப்பட்டு நின்றே மலசக்திகளை மடக்கிப் பிடித்து உயிரைக் கொண்டு அனுபவிக்கலாகாதோ எனின், ஆகாது. அது அசம்பாவிதம் ஏனெனில்,

சக்தி, சத்தும் சித்துமாயுள்ள ஒளிப்பொருள், மலம் அசத்தும் அசித்துமான சடப்பொருள். சத்துப்பொருள் வெளிப்படில் அசத்து எதுவும் அதனெதிர் நிற்காது சூரியனுக்கெதிர் இருள் நில்லாமைபோல, "யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர்" என்கின்றது சிவஞானபோதம். எனவே சக்தி வெளிப்பட்டு நின்றால் அதனெதிர் ஆணவம் தானொரு பொருளாக நின்று தொழிற்படுந் தன்மையை முற்றாக இழந்து விடும். அது ஒரு பொருளாய் நிலைக்கமாட்டாது ஆதலின்.

அன்றியும் சக்தியின் சொரூபம் பூரண ஞானம். "சக்தி தன் வடிவேதென்னில் தடையிலா ஞானமாகும்" என்கின்றது சிவஞானசித்தியார். அது, தான் சுய ரூபத்தில் வெளிப்படும் நிலையில் அது தன் பூரண ஞானத்தையே வழங்க முடியும். போகத்தை வழங்க முடியாது மலத்தினால் ஏற்பட்ட விகாரங்கள் நீங்காதிருக்கும் வரையில் உயிர் போகத்தை ஏற்குமே தவிர ஞானத்தை ஏற்காது. சன்னிதோஷம் இருக்கும்வரை நோயாளி மருந்தை ஏற்பானே தவிர உணவை ஏற்க முடியாமை போல். நோய் நீங்கிய நிலையில் வைத்தியன் தானாகவே உணவைக் கொடுக்கச் சொல்வான். அதேபோல மலம் நீங்கிய நிலையில் சக்தி தானே முன்னின்று மெய்ஞ்ஞானத்தைக் கொடுக்கும். நோயாளி — ஆன்மா. நோய் — ஆணவம், மருந்து — கன்ம போகங்கள். மருந்தூட்டுஞ் சாதனங்கள் மாயா கருவிகள். மருந்தூட்டும் தாதி — திரோதானசக்தி. வைத்தியன் — சிவன் நோய் நீங்கிய பின் கொடுக்கும் உணவு — ஞானம் என இவ்வொப்புமையை விரித்துணரலாம்.

குறித்த இந்நிலைமை பற்றியே "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை" என்று இச்சக்தியைப் போற்றுகிறார் மாணிக்கவாசகர். இச்சக்தி தன்னையும் பேதித்திருக்கின்றது; உயிரையும் பேதித்து விடுகின்றது. "பேதித்து... பெய்வளை" மெத்த அருமையானதொரு தொடர். பராசக்தி என்ற நிலையி லிருந்து திரோதானசக்தியாக; அறக்கருணை பூணும் நிலையிலிருந்து மறக் கருணையும் பூணும் நிலைமையாக அது தன்னைத் தானே பேதித்திருக்கின்றது. மல பெத்தனாம் நிலையிலிருந்து மல சுத்தனாம் நிலைக்கு உயிரைப் பேதிக்கின்றது. தன்னைப் பேதித்தமையும் உயிரைப் பேதித்தமையும் உயிரை வளர்த்தெடுக்கும் பரோபகாரம் பற்றி நம்மைப் பேதிப்பதற்காகவே சக்தி தன்னைப் பேதித்திருக்கின்றது, என்ற இப்பொருள் விளக்கிற் சகல ஐயங்களும் அகன்றொழியும்.

இப்படியெல்லாம் இத்திரோதான சக்தி தான் முன்வராமற் பின் நின்று செய்யும் அருள் உபகாரத்தின் அருமையைத் தத்துவ தரிசனம் பெற்ற மெய்ஞ்ஞானிகள் வகைவகையாய் வர்ணிக்கின்றார்கள். அருணந்தி சிவாச்சாரியார் இதனை "ஓடி மீள்கென ஆடல் பார்த்திருத்தல்" என்ற ஓர் அழகிய காட்சிச் சித்திரமாக வரைந்து காட்டியுள்ளார்.



"என்னுட் கரந்து என்பின் வந்தருளி
என்னையுந் தன்னையுந் அறிவின் றியற்றும்
என்னது யானெனும் தன்மையுங் கண்டு
யாவர் யாவையும் யாங்கணுஞ் சென்று
புக்குழிப்புக்குப் பெயர்த்துழிப் பெயர்ந்து
மிக்க போகம் விதியால் விளைத்திங்கு
ஏற்பணியாளாய் எனைப் பிரியாதே
ஓடி மீள்கென ஆடல் பார்த்திட்டு
என் வழி நின்றனன் எந்தை"

– இருபாஇருபது 18

என்னுள்ளே தான் மறைந்து என்னை அடிப்பிரியாது ஒழுகி எனக்கு வேண்டும் போகங்களை வேண்டியவாறெல்லாம் ஊட்டி போகமுண்ட மதர்ப்பினாலே நான் என்னையுமறியாது தன்னையும் அறியாது அகங்கார மமகாரக் கூத்தாட அக்கூத்தையுங் கண்டு கண்டு வேடிக்கை பார்த்து என் பணியாள் போன்று என் வழியில் நின்றான் என்னப்பன் என்பது அவர் வரைந்த சித்திரம்.

இதில், திரோதான சக்தியின் உபகாரம் அதனொடு பிரிப்பின்றி நின்றியற்றும் இறைவன் பேரால் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. 'என்னையுந்... அகந்தை' என்ற பகுதிப்பொருள் "தனித்துணை நீ நிற்க யான் தருக்கித் தலையால் நடந்த வினைத் துணையேன்" என்ற திருவாசகச் சுருதியிலே எழுந்து இசைக்கின்றது. "புக்குழிப்புக்குப் பெயர்த்துழிப் பெயர்ந்து என்பின் வந்தருளிப் போகம் விளைந்து" என்ற பொருள் "தேனினைச் சொரிந்து புறம் புறந் திரிந்த செல்வம்" என்ற மணிவாசகக் காட்சியிலே லயங் கொள்கின்றது.

"என்னது யானெனுந் தன்மையுங் கண்டு" என்ற சித்திரம் பழைய தமிழ்ப்பாடல் ஒன்றை ஞாபகஞ் செய்கின்றது. உடன்போக்கில் செல்லும் தலைவன் முதலில் தலைவியை முன் செல்லவிட்டுத் தான் பின் சென்றான் தலைமையுள்ளவன் தான் முன் செல்லாது

பின் சென்றதேன் என்றால்

"காண்பான் அவாவினாற்
காதலன் காதலி பின் நடவா நிற்ப"

என்கின்றது அப்பாடல் அவள் நடையழகைப் பார்த்து ரசிக்கவே தான் அவன் அப்படிச் செய்தானாம். இங்கும் 'கண்டு' என்ற சொல், உயிரின் தலைத்திமிர்ப்பான போக்கை இறைவன் பார்த்து வேடிக்கை மகிழ்ச்சி கொள்ளுதலைத் தோற்றுவிக்கின்றது.

இத்திரோதான சக்தியால் விளைவதாகிய மலநீக்கம் ஆத்மீக அனுபவ யாத்திரையில் ஒரு மைல் கல் எனலாம். கலங்கரை விளக்கமுமாகும். மலம் நீங்குமளவில் திரோதானமும் நீங்கும். அதன் நீக்கத்தைக் காண தவங் கிடக்கிறார்கள் எத்தனையோ மஹானுபாவர்கள். யாம் ஆரம்பத்திற் கண்ட ஈஸாவாஸ்ய மந்திரத்தை அளித்த ரிஷியும் அவர்களில் ஒருவரேயாதல் ஒருதலை ஆதலின் அவர் குறிப்பிடும் "ஹிரண்மய பாத்திரம்" வேறெதுவுமன்று. இத்திரோதானமே என அதனை இனி நாங்கள் இனங்கண்டு கொள்ளல் அமையும். அவர் ஏலவே தத்துவதரிசனம் பெற்றுக்கொண்டவர். அவர் மெய்ப்பொருளாகிய சிவத்தை நேரே காண இது தடை நிற்கின்றது போலும். ஆகவே அதனை நீக்கிவிடப் பிரார்த்தித்திருக்கிறார். அங்கு அப் 15ஆம் மந்திரத்தை அடுத்து வரும் 16 ஆம் மந்திரமும் இக்கருத்தையே ஆமோதிப்பதாய் இருக்கும் அழகு அறிந்து அனுபவிக்கத் தக்கதாகும்.

"பூஷன் ஏகர்ஷே சூர்ய பிரஜாபத்ய
வ்யூஹ ரஸ்மீன் சமூஹ
தேஜோ யத்தே ரூபம் கல்யாணதமம்
தத் தே பச்யாமி
யோசா வசௌ புருஷ; சோகம் அஸ்மி"

பூஷனே, ஏகர்ஷியே, சூர்யனே ப்ரஜாபதியே! அப்பாத்திரம் அகற்றப்பட்டபின் உனது சுயபிரபை (பராசக்தி ஒளி) என் கண்ணை மழுக்குவதாயிருக்கும். அதனால் நான் உன்



மங்கள சொரூபத்தைப் பார்க்க முடியாதிருக்கும். அந்நிலைமை ஏற்படாதவாறு நீ உன் கிரண சமூகத்தைச் சுருக்கிக் கொள்வாயாக சுருக்கினால் நான் உன்னைக் காண்பேன் கண்டு "அது நானாகும்" பேறடைவேன் என்கின்றார் அந்த ரிஷி.

திரோதானத்தின் மான்மியம் இருந்தவாற்றை இயன்ற அளவு பரக்க நோக்கி இவ்வளவும் விபரித்தவாற்றால் அதன் மகிமை ஓரளவு தெரிவிக்கப்பட்டதாயிற்று

---

# 9. ஊழ்ப் பிரச்சனை

ஆன்மார்த்த அறிவாராய்ச்சி விஷயங்களில் ஆணவம், திரோதானம் போல்வது, ஊழ் எனவும் ஒன்று. அவைகளும் பலவேறு பிரச்சனைகளுக்கு இடமானவை. இதுவும் அ:.தே.

வினைப்பயன் வேறு, ஊழ் வேறாகுமா? உயிர் முயற்சி வேறு, ஊழ் வேறாகுமா? "ஊழிற் பெருவலி யாவுள?" என்ற திருவள்ளுவர், "ஊழையும் உப்பங் காண்பர்" எனவும் கூறுவதன் தாற்பரியம் யாதாகலாம்? என்பன போன்று ஊழ் அறிவாரய்ச்சிக்கண் உளவாகும் பிரச்சினைகள் பல. ஆதலின் வினை, வினைப்பயன், வினைப்பயன் அனுபவத்திற்கு வரும் முறை, அதற்காம் அமைப்பு, அதனை நிர்வகிக்கும் சக்தி எனத் துறைதோறும் படிந்து இதனை விசாரித்தல் பயனுடைத்தாகும்.

**பழவினை:-**

உயிர்கள் ஓய்வு ஒழிவின்றி இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றன. அவ்வின்ப துன்பங்கள் உயிர்க்குயிர் வேறு வேறாக நிகழ்கின்றன. ஒரே காரியத்தில் குறித்த இருவர் பெறும் அநுபவம் ஒரே மாதிரியாய் இருப்பதில்லை. அநேக சந்தர்ப்பங்களில் ஒரே நிகழ்ச்சி ஒருவருக்கு விருப்பாகவும் மற்றவருக்கு வெறுப்பாகவும் இருத்தலுஞ் சகசம். இந்நிலை இருப்பது எதனால்?

"காரணம் இன்றிக் காரியம் இல்லை" என்பது ஒரு பிரசித்த விதி. அதன் பிரகாரம், மேற்சொல்லியவாறான அநுபவ வேறுபாடுகளுக்குரிய காரணங்கள் இருந்தே ஆகின்றன. அக்காரணங்கள் வினைப்பயன் எனப்படும். இவை அவரவர் செயலின் பேறுகள். அவை ஒவ்வொருவருக்கும் வெவ்வேறாயிருப்பதனால் அநுபவங்களும் வேறுபடுகின்றன. ஒவ்வொருவர் வினைப் பயனும் அவ்வவர் சார்பில் ஏலவேயுள்ளவை. அதனால் அவை பழவினை என்று பெயர்பெறுகின்றன.



பண்டு செய்த பழவினையின் பயன்
கண்டுங் கண்டுங் களித்தியால் நெஞ்சமே

– அப்பர் தேவாரம்

"........... – அக்கால்
அலவனைக் காதலித்துக் காலமரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்"

– நாலடியார்

ஒவ்வோருயிரும் அவ்வப்பிறப்பிற் பெறும் அநுபவம் அதனதன் பழவினைப் பயனேயாதல் ஒருதலை என்றால், இப்பழவினை எப்படி ஆனது? எப்படி இருந்தது? எப்படிப் பலன் தருவது? என்பன இத்தொடர்பில் அறிதற் பாலனவாகும்.

ஒவ்வோருயிரும் ஓயாமல் ஏதாவதொரு முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டேயிருத்தல் கண்கூடு. இம்முயற்சிகள் நன்மை தரும் முயற்சியாகவும் இருக்கும், தீமை தரும் முயற்சியாகவும் இருக்கும். அவ்வகையால் அவை முறையே நல்வினை, தீவினை எனப் பெயர் பெறும்.

இந்த முயற்சிகள் செய்த அப்பொழுதே ஒழிந்து பொகின்றன. முயற்சிகள் ஒழிந்தாலும் முயற்சிகளின் பெறு பேறுகள் ஒழிந்து விடுவதில்லை. நல்வினை முயற்சியின் பெறுபேறு புண்ணியம். தீவினை முயற்சியின் பெறுபேறு பாவம் என அருவமாய் இருக்கும். இப்படியான புண்ணியங்களும் பாவங்களுமாக ஒவ்வோர் பிறப்பிலும் ஒவ்வோர் உயிர்க்குஞ் சேர்வன பெருந்தொகையாம். அவை ஒவ்வொன்றும் அவரவர் பேரிற் பதிவாகிக் கிடக்கும். இவற்றுக்குரிய பதிவேடு புத்தி என்ற தத்துவம். ஒவ்வோருயிரின் புத்தியோடும் அவ்வவரின் புண்ணிய பாவப் பதிவுகள் தொகை வகையாக மண்டிக் கிடக்கும். ஆனால் தனக்குரிய புண்ணிய பாவத் தொகை தன் புத்தி தத்துவம் பற்றுக் கோடாகத் தன்னோடிருப்பது எந்த உயிருக்குந் தெரியாது. இப்படி, செய்ததாகிய உயிருக்குத் தெரியாமல் அதனோடிருக்கும் வினைத் தொகுதிக்குச் சஞ்சிதம் என்று பெயர். சஞ்சிதம் என்ற சொல் கூடிக் குவிந்து கிடப்பது.(Accumulated) என்று பொருள் தரும். அது இங்கே உயிரின் புத்தி தத்துவம்

பற்றுக் கோடாகக் கூடிக் குவிந்து கிடக்கும் அவ்வினைத் தொகுதிக்குப் பெயராகிறது. ஒவ்வோருயிரின் பேரிலும் பதிவாகியுள்ள ஒவ்வொரு புண்ணியமும் ஒவ்வொரு பாவமும் அநுபவிக்கப்பட்டே ஒழியவும் வேண்டும்.

"நாபுக்தம் கஷீயந்தே கர்ம, கல்பகோடி சதைரபி" அநுபவிக்கப்படாமல் எக்கன்மமும், நூறு கோடி கல்பங் கடந்தாலுங் கூட, அழிவடையாது என்பது ஆகம உண்மை. "உற்ற தொழில் நினைவுரையில்... " எனும் சிவப்பிரகாசம் 31ஆம் செய்யுள் இக்கன்மம் பற்றிக் கூறுகையில், "ஒன்று ஒன்றால் அழியாது" எனவும் "ஊண் ஒழியாது" (அநுபவத்துக்கு வருதல் தப்பாது) எனவும் கூறுகின்றது.

இந்தச் சஞ்சிதம் முழுவதும் எந்த உயிருக்கேனும் எடுத்த பிறப்பொன்றில் அநுபவிக்கப்பட்டுத் தொலைவதாய் இருக்காது. அநுபவிக்கப்படும் ஒவ்வோர் வினையின் சார்பிலும் அதிக அதிக புதுவினைகளும் தோன்றிச் சஞ்சிதத் தொகையைப் பெருக்கும் நிலையும் உள்ளதே. ஆதலால் கன்மத் தொலைவுக்காக உயிர் ஒன்று அநந்த கோடி பிறவிகளை எடுக்கும் என்பர். அவற்றில் ஒரு பிறப்பில் குறிக்கப்பட்ட ஒரு சிறு தொகுதியான வினைகளே ஓருயிரின் அனுபவத்துக்கு வரும். குறிக்கப்பட்ட அத்தொகுதிக்குப் பிராரப்தம் என்று பெயர். பிராரப்தம் என்ற சொல் தொடங்கப்பட்டது எனப் பொருள் தரும். ஒவ்வோருயிர்க்கும் பிறவி கொடுக்கப்பட்டுத் தாய் கருப்பத்தில் அடைக்கப்படும் ஒவ்வொரு தடவையும் அவ்வவ் கணத்திலிருந்தே அவ்வப் பிராரப்தத் தொகுதிக்கு அநுபவங் கொடுக்கத் தொடங்கி விடும். அக்காரணத்தால் அதற்கு இப்பெயர் ஏற்பட்டிருக்கிறது. எனவே, பிராரப்தமென்றால் அவ்வவ் உயிர் அவ்வப் பிறப்பில் அநுபவித்தற்கென அதனதன் சஞ்சிதத்திலிருந்து வகுத்து ஒதுக்கப்பட்டிருக்கும் ஒரு பகுதியான புண்ணிய பாவங்கள் என அறிதல் வேண்டும். அதனால் பிராரத்தம் பழவினை என்றும் அழைக்கப்படும். அவ்வப் பிறப்பில் உயிர் செய்யும் வினை புதவினை (ஆகாமியம்). அதனோடு வேறு படுத்திக் காட்டும் நோக்கில் இது பழவினை எனப்படுகின்றது. அவரவர் வினைப்பயன் என்றும், பிராரப்தம் என்றும், பழவினை என்றுஞ் சொல்லப்படுவது ஒரே காரியமே.



## வினை அநுபவத்துக்கு வருமாறு:-

இப்புண்ணிய பாவங்கள் எப்படி அநுபவத்துக்கு வருகின்றன? என்பது இத்தொடர்பில் எழும் வினா. இவைகள் தாங்களாக முன்வந்து தம்பயன்களைத் தருவனவாகா. ஏனெனில், இவை அறிவற்ற சடங்கள். உயிர் தானாகத் தெரிந்து இவற்றைத் தன் அநுபத்துக்கு எடுத்துக் கொள்ளுமோ? என்றால் அது சம்பவிக்காத காரியம் என்று காட்டப் பல ஏதுக்கள் உள. இவ்வினைகள் உயிருக்குத் தெரியாமலே உயிரின் புத்தி பற்றுக் கோடாகக் கிடப்பன. ஆதலின் எந்த உயிரும் தன் பழவினையைத் தான் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு இருத்தல் இயலாது. அன்றியும், உயிர் தானாகவே எடுத்துக் கொள்வதனால் தனக்கு இதமானவற்றை மட்டுமே எடுத்துக் கொள்ளும். எந்த உயிராவது தனியே இன்பத்தை மட்டும் அனுபவிக்க அநுபவங் கண்டதில்லை. இன்பமும் துன்பமும் பொதுவில் மாறி மாறி வந்து கொண்டிருப்பதையே எங்கும் காணக் கூடியதாய் இருக்கிறது. ஆதலால் தான் அநுபவித்தற்கு உரியதை உயிர் தானே எடுத்துக் கொள்ளும் எனல் பொருந்தாது. எனில் இதை நிகழ்த்துதற்கு மூன்றாவதாக இன்னொன்று வேண்டும். அது இவ்விரண்டும் போலல்லாது தானாகவே தெரிந்து செயல் புரிவதாகவும் இருக்க வேண்டும். அது மற்றெதுவுமன்று. உயிரோடு உடனாயும், ஒன்றாயும், வேறாயுமிருக்கும் இறைவன் சக்திதான் என்பர். அந்தச் சக்தியே தான் திரோதானம் என்ற தன் பெயருக்கேற்க, உயிரின் வினைத் தொகுதியை அது அறியாவாறு, அதற்கு மறைப்பை நிகழ்த்தி வைத்திருக்கும் கைங்கரியத்தையும் நிகழ்த்துகிறது. (திரோதானம் என்பதில் இது பற்றிய விளக்கம் வந்துள்ளது) நமக்கு அடுத்த கணம் என்ன நடக்கும் என்பதை நாம் நிச்சயிக்க முடியாது. நாம் நினைப்பதொன்று நடப்பது ஒன்றாகும் சந்தர்ப்பங்கள் சிலவன்று. பல.

ஒன்றை நினைக்கின் அது வொழிந்திட...

சிலவேளை மங்கல வீட்டில் அமங்கலம் நிகழ்ந்து விடுகிறது. புறாவைக் கொல்ல அம்பெய்த வேடனும், அதையே பற்ற வட்டம்

இட்டுக் கொண்டிருந்த பருந்தும் இறக்க, புறா உயிர் தப்பிய வரலாறும் ஒன்றுண்டு. இப்படி எத்தனை எத்தனையோ! இந்தனைக்கும் கருத்தா ஈசனேதான். இது எங்கள் வினை எங்கள் அநுபவத்துக்கு வரும் வகை பற்றிய ஒரு பொது விளக்கம் எனக் கொள்ளலாம், இதனிலும் பார்க்கச் சிறப்பாக அறிய வேண்டியது மற்றொன்று உண்டு.

## விசித்திர காரண காரியத் தொடர்பு:

எங்கள் அநுபத்துக்கு வரும் வினைகள் சும்மா சும்மா எழுந்தமானத்துக்கு வந்து கழிவனவாகக் காணப்படவில்லை. தனிப்பட்ட ஒருவருடைய தனிப்பட்ட ஒரு அநுபவத்தை உற்று நோக்கும்போது, அது அவரளவில் மட்டுமல்லாது பல்வேறு ஆட்களையும், பல்வேறு சூழ் நிலைகளையும், பல்வேறு அநுபவங்களின் சம்பந்தங்களையும் தொட்டு, நிகழ்வதாகத் தெரிகின்றது. அப் பல்வேறு பகுதிகளுக் குள்ளும் மிக நுணுக்கமான காரண காரியத் தொடர்புகள் சன்னல் பின்னலாகச் சிக்குண்டிருத்தலும் வெளிப்படையாகத் தெரிகின்றது. பிரசித்தமான சரித்திர சம்பவங்களில் வைத்து இதனை விளங்குதல் சுலபமாகும்.

தேவர்கள் அசுரர் கொடுமையிலிருந்து காப்பாற்றப்படுதல் கந்தபுராண சம்பவம். இந்த ஒரே சம்பவம் எங்கெல்லாம் தொடர்பு பட்டுக் கொண்டு நிற்கின்றதென்ற விசித்திரத்தை ஒரு கால் பார்ப்போம்.

விஷ்ணுவும் இலக்குமியும் புத்திரப் பேறு வேண்டிச் சிவபெருமானையும் உமாதேவியாரையும் ஒரு காலத்தில் பூசிக்கிறார்கள். சிவபூசை செய்த புண்ணிய காரணத்தினால் சிவபெருமான் புத்திரப் பேற்றை அருளுகின்றார். ஆனால் சிவபூசை நிகழ்ச்சியில் விளைந்த ஏதோ ஒரு தவற்றுக்காக, "அம்மகனுக்குத் தத்து ஏற்படுக" என்ற சாபமும் உமாதேவி வாயிலாகக் கொடுக்கப்படுகின்றது. வரத்தின் பேறாகப் புத்திரன் பிறக்க வேண்டும். சாபங் காரணமாக அவன் என்றோ ஒருநாள் மரண அவஸ்தைப்பட வேண்டும். இது இங்ஙனமாக,



ஒரு காலத்தில் சாகந்தீவு அரசன் புதல்வர்கள் இருவர் தவம் புரிகின்றனர். அவருள் ஒருவனாகிய சூரன் தான் சுப்பிரமணிய சுவாமிக்கு வாகனமாய மயிலாய் வரவேண்டும் என வேண்டுகிறான். மற்றையோனாகிய பதுமன் தான் அவர்க்குக் கொடியாகிய சேவலாய் வர வேண்டுகிறான். வரங் கிடைத்து விடுகிறது. இவர்கள் அங்கு மற்றொரு அதிக்கிரமச் செயலுக்கும் ஆளாகின்றனர். அதனால் சுப்பிமணிய சுவாமியின் சாபமுங் கிடைத்து விடுகின்றது. வரத்தின்படி இவர்கள் மயிலுஞ் சேவலுமாக வேண்டும். சாபத்தின் பிரகாரம் இருவருஞ் சுப்பிரமணியர் கையால் அழிய வேண்டும். இதுவும் இவ்வாறிருக்க.

சிவனை நிந்தித்துத் தக்கன் ஒரு காலத்திற் செய்த யாகத்தில் தேவர்கள் பங்கு பற்றுகிறார்கள். அது சிவ அபராதம். அதற்கேற்ற தண்டனையாகத் தேவர்கள் அசுரர் கையால் வருந்த வேண்டிய பலனுண்டு. இதுவும் இவ்வாறாக, சூரனாதியரால் துன்புற்றஞ்சி இந்திரன் சிவபெருமானை நோக்கிக் கடுந் தவம் புரிகின்றான். அதன் பேறாகத் தேவர்கள் அசுரரின் துன்பங்களிலிருந்து விடுபட வேண்டிய பலனும் இருக்கவே இருக்கிறது.

இந்த நான்கு பகுதியிலும் நால்வேறு வகையானவர்கள் பற்றி நிறைவேற்றுதற்குள்ள எல்லா அநுபவங்களும் ஒன்றற்கொன்று காரண காரியமாய்ப் பின்னிப் பிணைக்கப்பட்டு நிகழும் நிகழ்ச்சி விசேடமொன்றைக் கந்தபுராணத்திற் காண்கிறோம்.

சூரனுஞ் சிங்கனும் மற்று மற்றும் உள்ளவர்களுடன் மாயைக்கு மக்களாய்த் தோன்றுகிறார்கள். சிவனை நோக்கிக் கடுந்தவம் இயற்றிச் சர்வாதிபத்தியம் பெற்றுத் தேவர்களை வருத்துகிறார்கள் அந்த அசுரரிலிருந்து தம்மைக் காப்பாற்றத் தக்க சிவகுமாரர் ஒருவரைத் தருமாறு தேவர்கள் சிவனை வேண்டுகிறார்கள். வெகு காலமாகச் சிவபெருமான் ஆகட்டும் பார்க்கலாம் என்ற அளவில் இருந்து கொண்டிருக்கிறார். தேவர்கள் துயரந் தலைக்கு மிஞ்சிவிடுந் தருணம் பார்த்துச் சிவபெருமான் யோகத்தில் அமர்ந்து விடுகிறார். தேவர்களோ சிவனைக் காணத் துடியாய்த் துடிக்கிறார்கள். ஆனால் சந்தர்ப்பம் விரோதமா

யிருக்கிறது. அவர் யோகத்தில் இருக்கும்போது அவர் முன் ஒருவருஞ் செல்லாவண்ணம் நந்தி தேவர் தடையிட்டுக் காவல் செய்கிறார். "மன்மதன் வந்தாற் சரி மற்றெவரும் உள்ளே வர அநுமதிக்கக் கூடாது" என யோக இருக்கைக்குப் போகுமுன் சிவன் நந்திக்கு ஆணையிட்டதும் இருக்கிறது.

வேறு வழியில்லை. மன்மதனை அனுப்பித்தான் சிவனுடைய யோக நிலையைக் கலைக்க வேண்டும் எனத் தீர்மானிக்கின்றார்கள் தேவர்கள். மன்மதனுக்கு விருப்பமில்லை. தேவர்கள் நிர்ப்பந்திக்கிறார்கள். அவன் தந்தையுமே அக்கோஷ்டியில் சோந்து கொண்டிருக்கிறார். நிர்ப்பந்தததுக்கு ஆற்றாமற் சென்ற மன்மதன் சிவனுடைய சினத்திற்கு ஆளாகி எரிந்தொழிகின்றான். யோக நிலை நீங்கிய சிவன் உமாதேவியைக் கூடிச் சுப்பிரமணியர் அவதரிக்கின்றார். தேவர்களுக்காகச் சுப்பிரமணியர் போரிட்டு சூரன் பதுமன் ஆதியோரை அழிக்கின்றார். தேவர் துயர் தீர்கிறது. சூரனும் பதுமனும் வரப் பலன் நிறைவுற்று மயிலுஞ் சேவலும் ஆகின்றார்கள். இது கதை நிகழ்ச்சிச் சுருக்கம். இதற்குள்ளே பின்னிப் பிணைந்து இருக்கும் காரண காரியத் தொடர்புகளின் விசித்திரத்தை என்னென்பது!

நான்கு தொகுதியில் வேறு வேறாகக் கிடந்த எட்டு அனுக்கிரக நிக்கிரகங்கள் இங்கு ஒரே சரித்திர நிகழ்ச்சியிற் பின்னிக் கோக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுக்கு உபாங்கங்களாக அமைந்த மற்றும் நிகழ்ச்சிகள் வேறு அவற்றைவிட்டு இதை மட்டும் எடுத்துக் கொண்டாலும் எத்தனையோ கோணங்களில் இதன் அமைப்பை நோக்கி வியக்க வேண்டி இருக்கிறது.

தேவர்களின் தவப்பலன் நிறைவேறச் சுப்பிரமணியர் பிறக்க வேண்டும். அந் நிகழ்ச்சிக்கு, விஷ்ணுவுக்கு இட்ட சாபப்பலன் நிறைவேற்றம் உடனடிக் காரணமாகப் பொருத்தப்பட்டிருக்கிறது. கயிலையில் சுப்பிரமணிய சுவாமியிடம் பெற்ற சாபப் பலன் காரணமாகச் சூரனும் பதுமனும் பிறந்து அழிய வேண்டியிருக்கிறது. இந்நிலைமை, தேவர்கள் செய்த சிவ அபராதப் பலனாகுந் தண்டனை அடையக் காரணமாம்படி கோக்கப்பட்டிருக்கிறது. சுப்பிரமணியர் சாபப் பலன் நிறைவேற்றம் சூரன் பதுமனின் தவப் பலன் நிறைவேற்றத்தக்கு முன்னிலைக் காரணமாக இயைக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய இணைப்பு முறைகளுக்குள் வல்லான் ஒருவனின் வித்தகக் கைத்திறம் ஈடுபட்டிருத்தல் வெளிப்படை. அதுவே இங்கத்தைய விசித்திரம்.



பிரசித்தி பெற்ற இராமாயண, சிலப்பதிகார, மணிமேகலைக் கதைகளுக்குள்ளும் இப்படியான இணைப்புக் கோப்பு நிலைகளுக்குக் குறைவில்லை. ஏன்? நமது சமானிய நடைமுறை அநுபவ நிகழ்ச்சிகளுக்குள்ளுமே இவற்றுக்குக் குறைவில்லைத் தானே! இவற்றால் நாம் அறியக் கிடப்பதென்ன?

நமக்கு நமக்குள்ள புண்ணிய பாவப் பலன்களை நாம் அவ்வப்போது ஈட்டி வைத்திருக்கின்றோம். அவை செய்யப்பட்ட ஒழுங்கு முறையில் கிரமமாக நமது அனுபவத்துக்கு வருவதாக இல்லை. நமக்கு அநேகமாக ஒரு இன்பாநுபவ முடிவில் ஒரு துன்னபாநுபவம் நிகழ்கிறது. இதற்கேற்றபடி நாம் வினை செய்யும்போது ஒன்று விட்டொன்று புண்ணியமாயும் பாவமாயும் பலன் தரத்தக்க வகையில் திட்டமிட்டுச் செய்துள்ளோமா என்பது கேள்வி. எமது அறிவாராய்ச்சி அநுபவங்களுக்கு எட்டிய வரையில், ஏன்? சுருதி யுக்தி அநுபவங்களுக்கு எட்டிய வரையில் கூட அப்படியில்லை என்றே தெரிகிறது. பின்னை இதன் போக்கு என்னவாகும்?

## நியதி-ஊழ்:-

நம்பேரிலுள்ள புண்ணிய பாவங்களை அவற்றின் தரமறிந்து, அவை ஊட்டப்பட வேண்டிய முறையறிந்து, "இன்னாருடைய இன்னவினை இன்னின்ன தொடர்பில், இன்னின்னவாறு அநுபவத்துக்கு வருதல் வேண்டும்" என்று வல்லான் ஒருவன் செய்து வைத்த வித்தகக் கைத்திறன் வாய்ந்த நியமம் ஒன்று இருக்கிறதென்றே கொள்ள வேண்டும். இந்த நியமம் பழவினைக்கு வேறானது. பழவினை சம்பந்தமாக இது ஏற்படுகின்றது என்ற அளவே அன்றி, பழவினையும் இதுவும் ஒன்றென்னும் நிலையில்லை.

இந்த ஒழுங்கு நியமத்துக்கு நியதி என்றே பெயர். இந்த நியதியை நிர்வகித்து நிற்பது தெய்வ சக்தி. இதை ஆக்குவதும் அது. நடைமுறைப் படுத்தப்படுவதும் அதுவே. எனவே, பிராரத்தம் (பழவினை) நியதி, தெய்வசக்தி என்ற மூன்றின் சேர்க்கையினாலே எங்கள் அநுபவம் ஒவ்வொன்றும் நிகழ்ந்து கொண்டிருப்பதாக அறிதல் வேண்டும். இந்த நியதிக்கு மற்றும் பல பெயர்கள் உள. அவற்றுள் மிகப் பிரபல்யமானது ஊழ்.

ஊழ் என்ற பதத்தைக் கையாண்டவர் பலர். அதன் இயல்புகளை விரித்து இலக்கியம் படைத்திருக்கின்றார் திருவள்ளுவர். அதன் நுட்பங்களைத் தமது உரைத்திறன் வாயிலாக வெளிப்படுத்துகின்றார் பரிமேலழகர். ஊழ் என்ற அதிகாரத்தின் முகப்பில் பரிமேலழகர் கூறும் வரைவிலக்கணம்.

"அஃதாவது இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி," — என்று பேசுகின்றது. வினைப்பயன் சடமாதலால் அது தானாகவே செய்தவனைச் சென்றடையாது, என மேலே கண்டோம். ஆதலின் அறிவுடைப் பொருளாகிய ஒன்றே நியதியின் வாயிலாக, அதாவது நியதியை ஒரு கருவியாகக் கொண்டு அதனைச் செய்விக்கின்றது. நியதியின் வாயிலாக, அதாவது நியதியை ஒரு கருவியாகக் கொண்டு அதனைச் செய்விக்கின்றது எனத் தெளிதல் வேண்டும். அவ்வறிவுடைப் பொருள் தெய்வ சக்தியே அல்லது பிறிதில்லை. நம் சித்தாந்த பரிபாஷையில் அது திரோதான சக்தி எனப்படுகின்றது.

குறித்த ஊழ் அதிகார அவதாரிகையில் ஊழின் பரியாயப் பெயர்கள் பல இடம் பெறுகின்றன. அவற்றுள் ஒன்று தெய்வம். தெய்வத்தால் வகுக்கப்படுவது, தெய்வத்தால் நிர்வகிக்கப்படுவது என்ற பொருளிலேயே ஊழுக்குத் தெய்வம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. தமிழில் இத்தகைய வழக்குகள் சிலவல்ல. இனி, அதற்கு மற்றொரு பெயர் விதி. விதிக்கப்பட்டது விதி என்ற விளக்கத்தில் இப்பெயர் வழங்குகிறதாகக் கொள்ளலாம். இந்த விதியாகிய ஊழுக்கிணங்க உயிர்களுக்காம் உடல்களையும் கருவி கரணங்களையும் படைப்பவனாதலின் படைத்தற் கடவுளாகிய



பிரமனுக்கும் விதி என்னும் பெயர் வழங்குகிறது. "வகுத்தான் வகுத்த வகை" என ஊழைக் குறிப்பிடுகிறார் வள்ளுவர். இங்ஙனம் ஊழின் பரியாயப் பெயர்களை ஆராய்வதன் மூலமும் ஊழின் இயல்புகளைத் தெரிந்து கொள்ளல் சாலும்.

ஊழின் விரிந்து பரந்த இயல்புகள் அனைத்தும் நியதி என்ற பெயரிற் பொதுவாக அடங்கும். இன்னதற்கு இன்னது என்ற நியமம்; இன்னது இன்னதன் மூலம் இன்னமாதிரியாகத்தான் இடம் பெற வேண்டும் என்ற வரையறை; இதற்குப் பலன் இவ்வளவுதான். இவ்வளவிற் கூடுதலுமாகாது; குறைதலுமாகாது என்ற கண்டிப்பு என்ற இத்தகை இயல்புகளைக் குறித்து நிற்பது இச்சொல். இத்தொடர்பில் நாம் மேலும் விதந்து விசாரிக்க இடமுண்டு.

## எப்பவோ முடிந்தவை:

பிராரத்தமாயிருக்கும் புண்ணிய பாவங்கள் எந்த ஒழுங்கில் அநுபவிக்கப்பட்டால் உயிர்களின் மலபரிபாகப் பேறு இயன்ற அளவு விரைவில் ஏற்பட முடியுமோ அந்த ஒழுங்கைத் தெரிந்து கொண்டே தெய்வசக்தி அவற்றை அநுபவத்துக்குத் தருவதாகச் சித்தாந்த அநுபவம் பேசுகின்றது. இவ்வுண்மைப்படி பார்த்தால் வினை அநுபவங்கள் வரவேண்டிய கிரமமும் தொடர்பாடுகளும் ஏலவே சித்தஞ் செய்யப்பட்டனவாகக் கொள்ள வேண்டியதுண்டு. 'எப்பவோமுடிந்த காரியம்' என்ற ஞானிகள் வாக்கு இதனையே உணர்த்துகின்றது. எங்களுக்கு வரும் நன்மை தீமைகளின் குறை நிறைகள் பற்றி நாங்கள் எம்பாட்டில் அலட்டிக் கொள்ளும் போதெல்லாம் அதற்குச் சமாதானமாக இவ்வசனத்தையே அறிஞர்கள் கூறுகிறார்கள். இத்தெய்வீக அமைப்பாகிய ஊழ் வழியேதான் நமது பழவினை அநுபவங்கள். நமக்கு வரும் என்ற உண்மை இதனாலும் வெளியாகின்றது.

## ஊழும் முயற்சியும்:-

யாரேனும் ஒருவர் ஏதெனுமோர் பிறப்பில் தன் பழவினை அனுபவத்தைப் பெறுவதாகில் சும்மாவிருந்து பெற்றுக் கொள்ளுதல்

அமையாது. அவ்வனுபவப் பேற்றுக்கு அநுகுணமாக ஏதேனும் முயற்சி செய்தே பெற்றுக் கொள்ள வேண்டும். "பிற்செயாது அநுபவிப்பதின்று" — சிவஞானசித்தியார். ஒருவனுக்குக் கொலைப்பாவாமாக ஒரு பிராப்தம் இருக்கிறதாக வைத்துக் கொள்வோம். அதற்கான தண்டனையை அவன் மற்றொரு பிறப்பிற் பெற்றேயாக வேண்டும். அதாவது ஒன்றில் அவன் சிறையில் அடைபட வேண்டும். அல்லது கொலையுண்ண வேண்டும். இப்பலன், அவன் சும்மா இருக்க வந்து விடுமாறில்லை. அதற்காக அவன் யாதாயினுமொரு கொலையிலோ சூழ்ச்சியிலோ சம்பந்தப்படுதல் இன்றியமையாததாகும்.

இவ்வகையால் இவன் பெறவேண்டிய அநுபவத் துக்கும், அநுபவப் பேற்றுக்குக் காரணமாக அவன் ஈடுபடும் முயற்சிக்கும் தொடர்புண்மை அறியப்படுகின்றது. ஆதலால் ஒவ்வொருவனும் மேற்கொள்ளும் ஒவ்வோர் முயற்சியும் சம்பந்தப்பட்ட ஊழின் தொடர்பாகவே ஏற்படுவதாகக் கொள்ள வேண்டும். இன்னும்,

ஒருவனுடைய பிராரப்தத்தில் தான தரும வாயிலாக வாய்த்த ஒரு புண்ணியம் இருக்கிறதெனில், அதன் பலனாக ஒரு பிறப்பில் அவன் பெரும் பொருளீட்டி இன்பமுற வேண்டியது உண்மை. அதற்கேற்ற அளவான ஊக்கம் அவனுக்கு அப்பிறப்பில் ஏற்படுவதியல்பே. இதற்கெதிர் பிறர் பொருளை அபகரித்து அவர்களைக் கஷ்டத்துக்கு உள்ளாக்கிய பாவம் ஒருவரின் பிராரத்தத்தில் உள்ளதெனில், அதன் பலன் அநுபவத்துக்கு வரும் மற்றொரு பிறப்பில் அவன் அநுபவத்துக்கு வேண்டிய பொருள் இல்லாமல் கஷ்டப்பட வேண்டி இருக்கும். அதற்குத் தக்கவாறு, ஒன்றில் அவனிடம் சோம்பல் குடி கொள்ளலாம், அல்லது அவன் முயற்சிகள் தடைப்படலாம் அல்லது விபரீதப்படுத்தப் படலாம். நடைமுறை அநுபவத்தில் நாம் கண்டுணரக் கூடியன இவை. இன்ப துன்ப அனுபவங்களுக்கான முயற்சிகள் எல்லாம் ஊழுக்கேற்றபடி ஊழினால் வருவனவே என்பது இவ்வாற்றானுந் தெளியப்படும்.



தன்பாட்டில் சுதந்தரமாக இயங்கும் நிலைமை உயிருக்கில்லை. அது எப்போதும் பரதந்திரன். எந்நிலையிலும் தெய்வ சக்தி அறிவித்தால் மட்டுமே அது அறியும். தெய்வ சக்தி செய்வித்தால் மட்டுமே அது செய்யும் என்பது சித்தாந்த உண்மை. நாம் மேற்கண்ட விளக்கத்தின் பிரகாரம், தெய்வ சக்தி, ஊழ் (நியதி) என்ற ஒரு திட்டமிடப்பட்ட அமைப்பின் மூலமே உயிர்க்கு அநுபவமூட்டும் என்பது புலனாயிருக்கிறது. இங்ஙனம் செயற்படுத்தும் வழிவகை (நியதி) தெய்வ சக்தியி னுடையது. செயற்படுத்துவதும் தெய்வ சக்திதான் எனில், ஊழின் தொடர்பில்லாமல் முயற்சி நிகழும் என்பதற்கு எவ்வித ஆதாரமும் இல்லையாகும்.

## திருக்குறளில் ஊழ்

திருக்குறள் ஊழ் அதிகாரம் எடுத்த எடுப்பில் இக்கருத்துடனேயே கால் கொள்ளுகின்றது ஆகூழ், போகூழ் என ஊழை வகைப்படுத்திக் கொண்டு

"ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி."

என்கிறது திருக்குறள். 'பொருளின் ஆக்க அழிவுகட்குக் காரணமாகிய முயற்சி சோம்பல்களையும் ஊழ்தானே தோற்றுவிக்கும்' என்கின்றார், இதற்கு உரை விளக்கந் தந்த பரிமேலழகியார். அவ்வதிகாரத்தில் உள்ள மற்றையசெய்யுள்களும் எல்லாம் உயிரின் அனுபவப் பேறு முழுவதையும் ஊழே நிர்வகித்து நிற்பதாகக் காட்டுகின்றன. அது வருமாறுஹ

பெரும் புத்தியாளனாகிய ஒருவனுக்கும் சிலவேளை புத்தி மழுங்கிப் போகின்றது. மந்த புத்தியாளனுக்குச் சிலவேளை மாவிவேகஞ் சுடர்கின்றது. சிலவேளைகளிற் சிலருக்குப் படித்த படிப்பொன்றும் உதவாமற் போக, பேதமை உணர்வே முன்னின்று பிழையான வழியிற் செலுத்தி விடுகின்றது. அதற்காக அவன் பின்பு கழிவிரக்கங் கொள்ளவும் நேர்கிறது. உலகிற் சிலர் அறிவாளர்களாய் இருக்கிறார்கள். தரக்குறைவான அற்ப சாதனங்கள்

சிலவே பெருஞ் செல்வம் சேர்க்க உதவுகின்றன. தரமான உயர் சாதனங்கள் பலன்படாதொழிகின்றன. எவ்வளவு வருந்திக் காத்தாலும் பல பொருள்கள் நிலையாமற் போகின்றன. வெறுத்து உதறித் தள்ளிய போதும் எத்தனையோ பொருள்கள் விட்டுப் போகமாட்டோம் என நிற்கின்றன. கோடிக்கணக்கிலே சொத்துக்களைச் சேர்த்து வைத்துக் கொள்வோர் பலர் அவற்றை அநுபவிக்கமுடியாமற் கஷ்டமுறுகின்றார்கள். ஒரு வகையான ஆதரவும் இல்லை இனி இறப்போம் என்று இருப்பவனையும் சாவு நெருங்காமல் தடுத்துத் துன்புறுவிக்கும் பலாபலன்களும் இருந்தேயாகின்றன. நல்லது தீயது இரண்டையும் அநுபவித்தே முடிக்க வேண்டிய நிர்ப்பந்தம் எல்லோருக்குமே இருக்கிறது. ஊழினால் தீப்பலன் வரவிருப்பதைத் தெய்வீகக் காட்சியுள்ள சோதிடர் முதலியோரால் முன்னமே தெரிந்து கொண்டு அதற்கு மாற்றுச் செயல் புரிய முயன்றாலும் அதைப்பலன்பட விடாமல் வரவேண்டிய தீங்கு முந்திக் கொள்கின்றது. இத்தனைக்குங் காரணம் ஊழ் என்ற ஒன்றேதான் என்கிறது திருக்குறள்.

இது இங்ஙனமாகவும் உயிரின் முயற்சி தன்பாட்டில் நடைபெறுவதென்றும் அம்முயற்சி பலன்படும் விஷயத்தில் இறைவன் ஊழையும் பின்னிப்பிணைத்து அதற்குத் தக்கவாறு பலன் தருகிறார் என்று கொள்வாரும் உளர். அவர் கொள்கை எவ்வாற்றானும் ஏற்கத் தக்கதன்றாகும்.

''ஊழ் மற்றொன்று சூழினும் தான் முந்துறும்.'' என்ற வள்ளுவர் வாக்கை மெய்ப்பிக்கச் சரித்திர ரீதியான அனுபவமொன்று கேட்கப்பட்டு வருகின்றது.

'ஊழ்' வரவைத் தெய்வக் காட்சியுள்ள முனிவர், சோதிடர் முதலியோர் அது வருதற்குப் பல்லாண்டுகள் முன்னதாகவே தெரிவித்து விடுகிறார்கள். தண்ணீரினால், நெருப்பினால், ஆயுதத்தால் — என்பன போன்ற விபரங்களுடன் அவர்கள் அத்தன்மையைத் தெரிவித்தலுண்டு. இவ்வியல்பில், வராஹமிஹிரர் என்னுமோர் சோதிடர் செய்தி மிகப்பிரசித்தமான ஒன்று. ஒரு அரசகுமாரனுக்குக் குறிப்பிட்ட ஒரு திகதியிற் குறிப்பிட்ட ஒரு நேரத்திற் பன்றியினால் மரணம் என்று வராஹமிஹிரர் பல நாட்களுக்கு முன்னமே சொல்லி விட்டார். அதற்கெதிராக அரசன் மேற்கொண்ட மிக விழிப்பான பலத்த பலவகைப் பந்தோபஸ்துகளிடையே அரச மாளிகைச் சூழலிலுள்ள தூண் ஒன்றில் அலங்காரத்துக்காகப் பொருத்தப்பட்டிருந்த இரும்பாலான பன்றி உருவமொன்று சுழல் காற்று விசையால் முறித்து வீசப்பட அரசகுமாரன் அதற்கு இரையாகின்றான். இங்ஙனம் அரசகுமாரனது பிராரப்தப் பலன் ஒன்றிருப்பதை வராஹமிஹிரர் தமது சோதிடக் காட்சியாற் கண்டே சொல்லியிருக்கிறார் என்பது இதனால் தெரிகிறது. அவர் காட்சியிற் பட்ட அந்த அமைப்பு யாது? அதுவே ஊழ் ஆவது. இப்படி இப்படி அறியத் தக்கனவாயுள்ள உண்மை அநுபவங்களையே திருவள்ளுவர் தொகுத்துரைத்ததாகக் கொள்ளல் சாலும். இன்னும்.



## இறைவனுக்குச் சாதனங்கள் ஏன்?

இறைவனுக்கு முன்னேற்பாடான அமைப்பு எதுவும் தேவையில்லை. சர்வ வல்லமையாளனாகிய இறைவன் தம் சங்கற்ப வன்மையினால் அவ்வப்போதே அனைத்தும் நிகழ வைப்பார் என்பாருஞ் சிலர் உளர். இறைவனுக்குரிய அந்தச் சுதந்திர நிலைமையை யாருமே மறுப்பதற்கில்லை. ஆனால் இறைவன் உயிரை நோக்கிச் செய்யும் ஒவ்வோர் கிருத்தியத்துக்கும் தகுந்த ஏதுக்களான பல்வேறு அமைப்புக்களை முன்னரே ஏற்படுத்தி வைத்து அவற்றின் மூலமாகவே காரிய நிர்வாகத்தை இயற்றி வருகிறார். அவ்வாறு செய்தற்குத் தகுதியான காரணம் ஒன்றிருத்தலை நாம் உளங் கொளல் வேண்டும். உயிர்களை மல நீக்கஞ் செய்து அவரவர் இயல்பிற்கேற்ப அவரவரை ஆட்கொள்வதே இறைவன் செயல். அம்மல நீக்கமும் பலவேறு படிநிலைகளில் நிகழ்வதொன்றாகும். அவ்வப்படி நிலைகளில் மலநீக்கம் பெற்ற அவ்வவ்வுயிருக்கு அவற்றுக்குந் தக்கனவான அதிகார பதவி நிலைகளும் வேண்டியனவே. சாயுச்சிய நிலைக்குத் தக்க அளவு தகுதி பெறும் உயிர்கள் மிக மிகச் சிலவே. ஏனை உயிர்களெல்லாம் பல்வேறு தடவைகளில் படிமுறையால் மல நீக்கம் பெறும் வழியில் இயல்வனவாம். அவ்வப்போது அவையவை பெறும் மல நீக்கத்துக்கு ஒத்த பலன் அவ்வவற்றுக்கு வேண்டும்.

குறித்த அதிகார பதவி நிலைகள் அவ்வகையால் ஏற்பட்டனவே. அதுவும் இறைவன் உயிர்களை ஆட்கொள்ளுந் திறத்தில் அமைவதேயாம். அதன் பொருட்டாக இறைவன் தன் ஆணை வியாபகத்தினுட் பல்வேறு அதிகார பதவிகளை வகுத்தருள்கின்றான். அவ்வப்பதவிகளில் தன் விலாசங்களான காரணேஸ்வரர்கள் சந்நிதியில் குறித்தவாறு மல நீக்கம் பெறும் பல பல உயிர்களையும் அதிகார பதவிகளிலிருத்தி ஆட்கொள்ளும் விபரங்கள், ஆகமங்கள் வாயிலாக அறியக்கிடப்பன அதிகம். மாயா மலத்தொடக்கு மட்டும் முற்ற நீங்கிய உயிர்களிற் பக்குவ மிகுதியுள்ளோர் அநந்தகோடி உருத்திரர்களாகச் சுத்த வித்தை தத்துவத்துக்கும் பிரகிருதி தத்துவத்துக்கும் இடைப்பட்ட புவனங்களில் உள்ள அநந்தம் அதிகார பதவிகளில் உள்ளனர். மாயை, கன்மம் இரண்டும் நீங்கிய உயிர்களிற் பக்குவமுள்ளோர் சதாசிவ தத்துவத்துக்கும் சுத்த வித்தைக்கும் இடைப்பட்ட புவனங்களில் மந்திரேசுவரர், வித்தியேசுவரர் அணுசதாசிவர்களாய் அதிகார பதவி நிலைகளில் அமர்ந்துள்ளனர். ஆகவே மேற் குறிப்பிட்டவாறு காரியப்பாட்டுக்கான அமைப்புக்கள் இறைவனுக்குத் தன் பொருட்டாக வேண்டு வனவாகா, தன்னால் ஆட்கொள்ளப்படும் பலதிற உயிர்களின் பொருட்டாகவே வேண்டப்படுதல் ஒரு தலை. ஒரு அரசன் ஒரு நாட்டை நிர்வகித்தல் காரணமாக அமைக்கும் அமைப்பு விதிகள் சாதனங்களை ஒப்பு நோக்கி இதனை விளங்கிக் கொள்ளல் அமையும்.

## சாஸ்திரங்களில் ஊழ்:-

இதுவே உண்மை நிலை. இன்றேல் இறைவன் உயிர்களுக்குக் கூட்டுதற்காகத் தத்துவங்களும் வேண்டியதில்லை. பிரமனும் வேண்டியதில்லை, யமனும் வேண்டியதில்லை. மற்றும் காரணேஸ்வரர்களும் வேண்டியதில்லை. இங்ஙனம் இறைவன் உயிர்களின் பிராரப்த பலன்களை முறை திறம்பாது ஊட்டுதற்கென அமைத்துக்கொண்ட ஒருவகை அமைப்பே ஊழ் எனத் தெளிதலில் இனியும் தடையிருத்தல் இயலாது.

இந்த ஊழ் என்ற அமைப்பை நிர்வகித்தற் பொருட்டு, அதை நிர்வகிக்கும் தமது சக்திக்கு உதவியாதற் பொருட்டே அசுத்த மாயையில் நியதி என்பதோர் தத்துவத்தையும் அமைத்துள்ளார். ஊழுக்கு என்பது பரியாயப் பெயராக இருப்பதாகப் பரிமேலழகர் தெரிவித்திருப்பதையும் முன்பு கண்டோம். இந்த ஊழை வழுவாமற் செலுத்தற்கான தத்துவம் நியதி. அதை நிர்வகிப்பது திருவருட் சக்தியான திரோதான சக்தியின் ஒரு கூறு என அறிதல் வேண்டும். சைவசாஸ்திரங்களான சித்தியார், சிவப்பிரகாசம், மதங்கபரமேஸ்வரம் (வித்தியா பாதம்) முதலானவற்றில் "நியதி" என்பதில் வைத்தே ஊழ் இலக்கணம் முற்றாக விளங்கப் படுத்தப்பட்டிருக்கின்றது.



"நியதி பின்தோன்றி கன்ம நிச்சயம் பண்ணி நிற்கும்" என்கின்றது சிவஞானசித்தியார். 2 — 25

சிவாக்கிரக யோகிகள் இதற்குக் கூறும் உரை வருமாறு:-

நியதிதத்துவமானது தோன்றிக் கன்ம நியமனத்தைப் பண்ணி ஒருவர் பண்ணிய கன்ம பலத்தை ஒருவர் புசியாதபடியும் விஷய சௌந்தர்யத்தினாலே அதிக ப்பிரவிர்த்திகள் வராதபடியும் பிராரப்தமான பாவ பலபோகம் அநிஷ்டமென்று விடாத படியும் பரிபக்குவமான ஒழுங்கிலன்றிக் கர்ம பலத்தை முன்பின்னாகப் புசிக்க வொட்டாதபடியும் ஈசுரசக்திப் பிரேரணையினால் இராச ஆக்ஞை ஆனதுபோல் நியமனஞ் செய்து புசிப்பிக்கும்.

— சித்தியார் சிவாக். உரை பக். 290

"கன்மம் நிச்சயம் பண்ணி நிற்றல்" என்றதன் உட்கிடக்கையை வெளிப்படுத்தும் பாங்கில் இவ்வளவு விளக்க விரிவு தந்திருக்கிறார் அவர். ஊழுக்கும் நியதிக்கும் உளதாம் ஒற்றுமை இவ்வாற்றான் அறியப்படும்.

மதங்க பாரமேஸ்வரம் என்ற ஆகமத்தில் "நியதி படலம்" என்று தனியான ஒரு பகுதியுண்டு. அதில் நியதி பற்றிய உண்மைகள் வெகு விஸ்தாரமாக விபரிக்கப்படுவதுடன் அத்தத்துவத்தை நிர்வகித்தற் பொருட்டாக "நியாமிகா" என்ற ஒரு சக்தி உள்ளதாகவும் அது திரோதான சக்தியின் பன்னிரண்டு கூறுகளில் ஒன்றாகவும் கூறப்பட்டிருக்கின்றது. அதன் முதற் சுலோகம் வருமாறு:-

"சக்திர் நியாமிகா பும்சாம் ஸஹதத்வேதே ஸ்திதி ஹேதுனா
யயா அணும் போகசந்தானே நியம்ய விநிவார்யதே"

— நியாமிகா என்ற சக்தி நியதி என்ற தத்துவத்தை நிர்வகித்து நிற்பது. தன்தன் போகத் தொடர்ச்சியில் ஆன்மா நிலைபெறுமாறு கட்டுப்படுத்தித் தடுத்து வைத்திருக்கின்றது, என்கின்றது இச்சுலோகம். அன்றியும்,

தலையெழுத்து, தலைவிதி, பிரமன் எழுத்து என்ற அநுபவ வாக்குகளும் பிராரப்தத்துக்கு வேறாக ஊழ் என ஒன்றிருத்தலைப் புலப்படுத்துகின்றன. எழுதிச் செல்லும் விதியின்கை எழுதி எழுதி மேற்செல்லும் என்ற பாரசீகப் பழங்கவிதையும் ஒன்றுளது.

"தாந்தாம் முன் செய்தவினை தாமே யநுபவிப்பர்
பூந்தாமரையோன் பொறிவழியே"

என்ற நல்வழிச் செய்யுளும் ஒன்றுளது. பூந்தாமரையோன் — பிரமன். பொறி — பொறிக்கப்பட்டது. பிரமன் எழுத்து, படைக்குங் கடவுளாகிய பிரமன் ஒருவரின் அநுபவ வரலாறு (அப்பிறப்புக்குரியது) முழுவதையும் அவரில் பொறித்து வைத்துள்ளாரென்பது ஒரு கருத்து. அது தலையிற் பொறிக்கப்பட்டதாக உரைத்தல். தமிழ் வழக்கும் லலாடத்தில் (நெற்றி) பொறிக்கப்பட்டுள்ளதாகக் கூறல் சமஸ்கிருத வழக்குமாம். இங்ஙனம் பிரமனால் பொறிக்கப்பட்டதான விதி பிராரத்தத்தின் வேறு என்பது சொல்ல வேண்டுவதில்லையாகும்.

மேலும், நம் முயற்சிகள் சில வேளை பயன்படாமற் போவதை ஒரு ஏதுவாகக் கொண்டு முயற்சி ஊழின் வழி நிகழ்வதில்லை எனச் சாதிக்க முனைவர் சிலர். அக்கருத்துத் தவறானதென்றதற்கும் ஏதுக்கள் உள. செய்யும் முயற்சியொன்றிற் பலன் தோன்றுதற்கு ஊழ் காரணமாதல் போல, அத்தகையதொன்றிற் பலன் தோன்றாமைக்கும் அவ்வூழே காரணமாம். தான் செய்தொழிலிற் பலன் காணாமற் போவதும். ஒருவற்கு துன்ப அநுபவமே. அங்ஙனம் ஏமாற்றம் விளையும் பாங்கில் அப்படியொரு முயற்சியைக் கூட்டி வைத்ததும் ஒரு வகைப் பாபப் பலனை அநுபவிக்கத்தரும்



ஊழே எனல் வேண்டும். அன்றியும் எவன் புரியும் யாதொரு முயற்சியும் பலன்தராதொழிவதில்லை, என்பது தத்வார்த்தமான ஒரு உண்மையுமாகும் . சித்தாந்த சாஸ்திரத்தில் இதன் விளக்கம் பின்வருமாறு அமையும்.

நம் முயற்சிகள் பலன்தருதல் இரு வகையில் அமையும் லௌகீக ரீதியான பலன்பாடு ஒருவகை. ஆத்மீக ரீதியான பலன்பாடு ஒரு வகை. ஆத்மீக ரீதியான பலன்பாடு என்றால் உயிர்கள் சஞ்சித கன்மம் பக்குவமாதல் என்று சொல்லப்படும். பக்குவமாதல் என்றால் சஞ்சிதத்திலுள்ள பாவமோ புண்ணியமோ அநுபவிக்கப்படுந் தகுதி அடைதல். எந்தப் பொருளும் பதப்படுத்தப்பட்ட பின்னரே நம் உணவுக்குத் தகுதியாதல் போன்று எந்தக் கன்மமும் பக்குவப்படுத்தப்பட்ட பின்னரே நாம் அநுபவிக்குந் தகுதியாகும் என்ற ஒரு நிலையும் இருக்கின்றது. பிராரர்த்த அநுபவத்துக்கு வழிவகுக்கும் ஊழே, பின் மறுபிறப்பில் அநுபவத்துக்கு வர இருக்கும் சஞ்சிதத்துக்கும் பக்குவமூட்டும் கைங்கரியத்தையும் நிகழ்த்தும் அமைப்பை இவ்வகையாற் காணகின்றோம். அரும்பு மலராய், மலர் காயாய் காய் கனியாய்ப் பரிணமித்தல் போன்ற ஒரு மாற்ற நிலையே இப்பக்குவமாதல் என அறிதல் வேண்டும். இங்ஙனமாக நம் ஊழ் வழி நிகழும் நம் முயற்சியால் நாம் பக்குமான பாவ புண்ணியங்களின் பலனை நுகர்கிறோம். பக்குவமாகாததைப் பக்குவம் பெறச் செய்கிறாம். அதாவது பழுக்காததைப் பழுக்கச் செய்கிறோம். ஆதலால், முயற்சி பலனளிக்கவில்லை என்றற்கிடனில்லை, என்றவாறு "பல முறை தோற்கிறவன் வெற்றிக்குத் தகுதியாகிறான்" என்பதுங் காண்க.

"புருஷகார ஏவ கர்த்தவய: சர்வை : சர்வாத்மனா
யதிந சித்யதி தைவாத் கோத்ர தோஷ"

எல்லோராலும் எல்லாவகையாலும் முயற்சியே செய்யப்பட வேண்டியது. ஊழினால் சித்தி கிடைக்காமற் போனால் அதிலென்ன தோஷம்? அதாவது அதனால் என்ன நஷ்டம்? என்கின்றது ஒருவட மொழி நீதி சுலோகம். இதில் யதிநசித்யதிதைவாத் என்றதனால் லௌகிக சித்தியின்மையைத் தந்ததும் ஊழே என்ற கருத்தும்

கோத்ரதோஷ என்றதனால் அதனாலும் அந்தரங்கமான ஒரு நன்மை இருக்கிறது என்ற கருத்தும் பிரஸ்தாபிக்கப்படுதல் காணலாம்.

இத்தகைய ஆத்மீகப் பண்பாடு நம்மறிவுக்குத் தோன்ற நிகழ்வதில்லை. ஆத்ம சம்பந்தமான மற்றும் எத்தனையோ விஷயங்களைப் போலவே இதுவும் ஒரு இருட்டறை இரகசியம் அதனால் முயற்சியில் வெறுப்புக் கொள்ளும் ஒரு விரக்தி நிலை ஏற்படவே செய்யும். அதற்கு இடங்கொடுக்காலாகாது என்பது அறிஞர் திருவுள்ளம். திருவள்ளுவர் இதே அம்சத்தை உட்கொண்டு கூறும்போது

"தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலிதரும்" –குறள் 619

என்கின்றார்.

ஊழ் பலன் தரவில்லை என்றால் ஒரு சிறிதாயினும் பலன்படாமற் போய்விடவில்லையே, நெல்வேளாண்மை பலன்படவில்லை என்றால் அடியோடு ஒன்றுமில்லாமற் போய்விடவில்லை. முழு விளைவு; இல்லா விட்டால் அரை விளைவு கால் விளைவாவது; அதுவுமில்லாத பட்சத்தில் வைக்கோலாவது; வெள்ளம் வாரி வைக்கோலும் இல்லாவிட்டால் அரசாங்க உபமான்யமாவது உண்டுதானே. அவ்வாற்றால், மெய்வருந்தினமைக்கேற்ற அற்ப அளவான பலனொன்று அதற்கிருக்கின்றது தானே என்கின்றார் மிக நயமாக.

இதில், ஏன் இவர் லௌகீக பலன்பாடுதானே இல்லை ஆத்மீக பலன்பாடு இருக்கின்றதுதானே! என ஒருவர் ஆசங்கித்தலும் கூடும். இதுவும் விசாரிக்க வேண்டியதேயாம்.

அக் கருத்து ஆத்ம விசாரம் உடையவர்க்கன்றிச் சாமானிய உலகினர்க்குத் திருப்தியளிக்காது. எத்துறையினும் ஏதேனும் ஒரு லௌகீகமாக உள்ளதை அறிவுறுத்தும் நோக்கில், "மெய்வருந்தக் கூலிதரும்" என்ற வள்ளுவர் விவேகம் மெச்சற்பாலதாம். உலகர்க்கு நூல் செய்கின்றா ராதலின் அவர் கடமையும் அஃதேயாதல் ஒரு தலை. உலகர்க்கே சிறப்பாக



உரியதாகிய "ஆள்வினையுடைமை" அதிகாரத்தில் இக்கருத்து இடம் பெறுதலையும் விசேடமாய்க் கவனித்தல் வேண்டும். இவ்வாறு கொள்ளாது, இக்குறட் பொருளைச் சாட்டாகக் கொண்டு ஊழுக்கும் முயற்சிக்கும் ஒரு தொடர்புமில்லை என முடிவு கட்டுதல் சுருதி, யுக்தி, அநுபவம் மூன்றற்கும் ஒவ்வாததாகும்.

## ஊழை முயற்சி வெல்லுமா?

இனி,

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்." குறள் 620

என்ற குறளின் ஆதரவில் நின்று கொண்டு, முயற்சி ஊழ் காரணமாக வருவதில்லை எனச் சாதிக்க முயல்வாரும் உளர். அவர்கள் கருத்தும் பொருந்தாமை ஆராய்வின்கண் அறிய வரும்.

திருக்குறட் செய்யுள்களை விமர்சிப்போர் பலர் குறிக்கப்பட்ட குறள் எந்த அதிகாரத்தில் உள்ளதென்பதைப் பொருள் செய்யாமலே எடுத்துக் கொண்ட சந்தர்ப்பத்திற்கிசைவாகப் பொருள் செய்து கொள்கின்றனர். அந்த அதிகாரப் பொருள் நோக்கு இன்னது எனப் பரிமேலழகர் வரையறுத்துச் சுட்டி உரைக்கும் அவதாரிகையையும் நோக்கின்றிலர். குறித்த செய்யுளின் குறிப்புரையில் அவர்தரும் விசேட குறிப்புரையையும் அலட்சியம் பண்ணுகின்றனர். இம்மூன்றம்சத்தில் ஒன்றுக்கு மாறுபாடாய் அமையினும் அவ்வுரை திருக்குறள் உரையாகாமையை அறிதல் வேண்டும். இந்நேர்மைக் கண்ணோட்டத்தில் குறித்த குறளை நோக்குவோம்.

இக்குறள் "ஆள்வினையுடைமை" என்ற அதிகாரத்தில் வருவதென்பதை முதலில் கவனிக்க வேண்டும். "மடியின்மை" என்ற அதிகாரத்தை அடுத்து அவ்வதிகாரம் வருதலையும் கருத்திற் கொள்ள வேண்டும்.

(1) மடியின்மை — அஃதாவது கருதியன செய்யுங்காற் சோம்புதலில்லாமை

(2) ஆள்வினையுடைமை —அஃதாவது இடைவிடாது மெய்ம்முயற்சி உடையனாதல்.

குறித்த இரண்டும் முயற்சியின் அவசியத்தை வற்புறுத்தல் என்ற நோக்கில் பரிமேலழகர் தரும் விளக்கங்கள். முன்னையது முயற்சி நிலைக்கு முன்னோடியான இன்றியமையாத ஒரு சூழ்நிலையை உணர்த்தப் பின்னையது முயற்சியின் அவசியம் உணர்த்தப் படுதலைத் தெரிவிக்கின்றது. இப்பின்னைய அதிகாரத்தில், மனித முயற்சி சாதாரணமாகத் தளர்வடையப் பார்க்கும் சந்தர்ப்பங்களை (திருப்பங்களை)ச் சுட்டி அவற்றில் வைத்து முயற்சியின் அவசியம் வற்புறுத்தும் ஒழுங்கு திருவள்ளுவரால் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. வள்ளுவரின் உணர்த்து முறை பற்றிய ஓருத்தி இதுவாகும். அவர் நூலிற் பல இடங்களில் இது அவதானிக்கத் தகும். அவ்வகையிற் பார்க்கும்போது,

ஊழினால் பல தடவை ஒருவன் முயற்சி பலன்படாமற் போதலும் அந்நிலையில் ஒருவன் முயற்சி தளர்வடையப் பார்த்தலும் இயல்பே. முயற்சியின் அவசியத்தை வற்புறுத்தலில் ஈடுபட்டுள்ள வள்ளுவர்க்கு இது முக்கியமான ஒரு சந்தர்ப்பம் எனல் சொல்ல வேண்டா. எனவே, அச்சந்தர்ப்பத்தைச் சுட்டி உணர்த்தும் கருத்து நிலையை இக்குறளில் மேற்கொண்டார் என அறிதல் வேண்டும். இக்குறட்குப் பரிமேலழகர் எழுதும் உரையில்

ஊழையும் — பயனை விலக்குவதாகிய ஊழையும்
உலைவின்றி — அவ்விலக்கிற்கு இளையாது,

என வருங் குறிப்புகளும், விளக்கக் குறிப்பில்,

தெய்வத்தானிடுக்கண் வரினும் முயற்சி விடற்பாலதன்று என்பது இவை மூன்று பாட்டாலுங் கூறப்பட்டது.

என்ற பகுதியும் உற்ற நோக்கி உணரத்தக்கவை. இவற்றின் பெறுபேறாக, இச்செய்யுளால், ஊழ் எவ்வளவு விபரீதமாயிருந்தாலும் முயற்சிகளைத் தொடர்க என்று அறிவுறுத்தலே வள்ளுவர் நோக்கென்பது நன்கு புலனாகின்றது. இங்ஙனம் விளங்கிக் கொள்ளுதலை விடுத்து ஊழை முயற்சியால் வெல்லலாம் எனத் திருவள்ளுவர் சொல்லிவிட்டதாகக் கொள்வது ஊழ் அதிகாரத்தில் அவர் விளக்கியுள்ள கருத்து நிலைக்கு நேர் மாறாய் அமைந்து, முன்னொடு பின் முரணக் கூறிய தோஷத்தை அவர்பாற் கற்பித்தலாய் முடியும். இக்குறளில், "ஊழையும்" என்ற உம்மையும், உலைவின்றி, தாழாது என்ற அடைமொழிகளும் யாங் கொள்ளும் கருத்துக்கு உதவுந் திறம் உற்று நோக்கற் பாலதாம். இனி, இது சம்பந்தமான மற்றோர் கருத்தம்சத்தையும் தெளிவு செய்து கொள்ளல் வேண்டும்.



## மெய்யடியார் விஷயம் வேறு

முயற்சியால் ஊழை வெல்லலாம் என்பதே வள்ளுவர் கருத்தென இக்குறளால் நிலை நாட்ட முயல்வோர், மெய்யடியார் செய்திகளை உதாரணங் காட்டுகின்றனர். அவர்கள் கொண்ட கருத்து நேரிதன்று என்பதற்கு அதுவொன்றே அமையும்.

உலகில் வாழ்ந்து அனுபவம் பெறுந் தன்மையில் சாமானியர்களாகிய நம் நிலை வேறு, மெய்யடியார் நிலை வேறு. எங்கள் விஷயத்தில் திருவருள், திரோதானமாய், பாசம் போல்வதாய் மறைவாய் நின்று தொழிற்படுகிறது. அவர்கள் விஷயத்தில் அது பராசக்தியாய் அருள் சுவரூபமாய் வெளி வெளியாய் நின்றியலுகின்றது. எங்களைப் பொறுத்தவரையில் "போகுமட்டும் போய்வா" என்ற மனப்பாங்கில் இயல்கிறது. திருவருள். அவர்கள் விஷயத்தில், உன் கருமம் என்கருமம் என்ற சிரத்தையோடு நடத்துகின்றது அது. எங்களுக்கு உள்ள ஊழ் முழுவதையும் அநுபவித்து முடிப்பது திருவருளின் கடமை. அவர்களுக்கு அவர்கள் பெறுஞ் சிவாநுபவத்துக்கு அவசியமானதை மட்டும் விட்டு ஏனையவற்றை இயன்ற மட்டும் விலக்கிக் கொடுப்பது அதன் பண்பு. பெரும்பாலும் அவர்களுக்கு உள்ள ஊழ்த் தொடர்பு முழுவதும் ஏலவே விலக்கப்பட்டிருக்கும், ஆனால், வாசனை வசத்தினால் முன்னைய தொடர்ச்சியில் ஏதேனுஞ் சிறுக மறுகத் தழலக்காட்டுதலும் தவிர்க்க

முடி[illegible]ாகும் எனபது ஞான அபிப்பிராயம். அப்படியான சில சந்தர்ப்பங்களில், சம்பந்தப்பட்ட அடியார் மற்றவற்றை முற்றாகப் புறக்கணித்துத் தன்னையே பற்றாகப் பற்றி நிற்கும் அவசரத்தில் அவர்களுக்குள் தாம் ஊழைத் திருவருள் விலக்கிக் கொடுக்கும் என்பதே உண்மை. ஆக்கினவனுக்கு அழிக்கும் அதிகாரமும் உண்டு தானே. ஊழை ஒழுங்கு செய்த திருவருள் வேண்டாதபோது அதனை விலக்கிக் கொடுப்பதால் வியப்பில்லை. அத்தகையோரிலும் பலர் பல கட்டங்களில் ஊழ் வாதனைக்கு உட்பட்டிருந்த நிலைமை களையும் நாம் அநுபவத்துடன் நோக்க வேண்டி இருக்கிறது. ஆதலால் அவரிற் சிலர் ஊழை வென்ற சில சந்தர்ப்பங்கள் முற்றமுற்றத் திருவருட் செயலாவதன்றி அவர்களின் முயற்சிப் பலனாகாது. திருவருளின் செயலில் நமக்கராச்சியில்லை.

"ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான்புகி லளவிலைக் கிளக்க வேண்டா".

என்பது ஞானசம்பந்தர் தந்த ஆணை.

"நின்னடியே வழிபடுவான் நிமலா நினைக்கருத
என்னடியா னுயிரை வவ்வே லென்றடற் கூற்றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவோடு நீர்சுமக்கும்
நின்னடியா ரிடர் களையாய் நெடுங்காலம் மேயவனே."

திருஞானசம்பந்தர் தரும் திரு நெடுங்களைத் திருப்பதிகத்தில் வரும் இப்பாடற் பொருளை ஒரு கால் நோக்கினோரும் மெய்யடியார் ஊழை வென்றமை அவர் முயற்சிப் பலனென ஒருபோதும் கொள்ளார் என்க.

நின்னடியை வணங்குதலே தன்பற்றாய் இருந்தமைக்காக மார்க்கண்டேயர் மேல் வந்தகூற்றை உதைத்தாய். அதே அடியை இன்னும் அவ்வாறு பூசிக்கும் அடியார் எவர் விஷயத்தும் அவ்வாறே செய்தருள்.

ஞானசம்பந்தர் புரியும் இவ்வேண்டுதலின் பண்பென்ன பரிவென்ன! கண்ணுளார் கண்டின்புறுவர்.

சுபம்



பண்டிதர் திரு. மு. கந்தையா பி. ஏ. அவர்கள் மும்மொழி வல்லவர். சித்தாந்த சாஸ்திரங் களிலும் திருமுறைகளிலும் முழுகித் திளைப்பவர்; அவர் பொழுது தவப்பொழுது; அவர் வாழ்க்கை சமய வாழ்க்கை; அவருடைய அறிவுச் செல்வம் "பயன்மரம் உள்ளூர் பழுத்தற்று"; பல்வேறு இடங்களில் சித்தாந்த வகுப்பும் புராண வகுப்பும் நடத்தி வருபவர். இவ்வாறாயதோர் 'ஊருணி' யைக் காண்டல் அரிது! அரிது!!

– இலக்கிய கலாநிதி பண்டிதமணி
சி. கணபதிப்பிள்ளை.

சைவசித்தாந்தத்தைத் துறைபோகக் கற்ற இலக்கிய கலாநிதி கந்தையா அவர்களால் எழுதப்பட்ட "சித்தாந்தச் செழும் புதையல்கள்" "சித்தியார்த் திறவுகோல்" முதலான நூல்கள் பேரறிஞர்களால் மிக மிக வியந்து பாராட்டப்பட்டு வருகின்றன. அவர் பெரிய புராணத்தில், சூசனம் எழுதப்படாத பகுதிக்குச் சூசனம் எழுதிச் சைவ உலகுக்கு உபகரித்தமை ஒரு பெரிய சாதனை.

இலக்கிய கலாநிதி சைவத்தின் மொத்த உருவகமாகத் திகழ்ந்தவர்; சிவசம்பாத்தியம் உடையவர்; அவரது வாழ்க்கை முழுவதும் சமயப் பற்று ஊடுருவியிருந்தது; சிறந்த சிந்தனையாளர். "உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்" என்னும் வள்ளுவர் வாக்கைப் பொன்னே போற் போற்றி வாழ்ந்தவர்.

– தத்துவ கலாநிதி பண்டிதர் க வைத்தீசுவரக்குருக்கள்.

பண்டிதர் தாம் மேற்கோள் காட்டும் வேதாகமக் கருத்துக்களைக் குறிப்பிட்ட நூல்களின் பெயர்கள் கூறி விளக்குவதைக் காணலாம். அவருக்குள்ள மும்மொழி அறிவு இதற்குத் துணை புரிந்துள்ளது. சைவசித்தாந்த நூற் கருத்துக்களை ஆதாரமாகக் காட்டி விளக்குவது இவரின் தனித்திறமை. இத்திறமை கொண்டவரை இன்று ஈழத்திலும் தமிழகத்திலும் காண்பதரிது....

தமிழ்த் திருமுறைகளுக்கு உயர்ந்த இடமளித்தவர் நாவலர் பெருமான். அவரின் வழியில் சித்தாந்தம் கண்ட முடிபுகளைத் திருமுறைகளிற் கண்டு விளக்கிய பெருமையும் பண்டிதரைச் சாரும். இதனை அவரின் நூல்களில் பரவலாகக் காணலாம்.

– சித்தாந்தரத்தினம் சைவசித்தாந்த கலாநிதி க. கணேசலிங்கம்.